# காப்பியக் கவிஞர் மீனவனின் இலக்கியப் பணிகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் பகுதி நேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

நெ.கிருஷ்ணவேணி

[பதிவு எண்: 0232]

நெறியாளர்

முனைவர். சே.செந்தமிழ்ப்பாவை





தமிழ்ப்பண்பாட்டு மையம்

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மறுதர மதிப்பீட்டிலும் “ஏ”தகுதி பெற்றது)

காரைக்குடி – 630 003

தமிழ்நாடு - இந்தியா


பிப்ரவரி-2017

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை,** எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பி.எட்.,பிஎச்.டி.,
**பேராசிரியர் & இயக்குநர்,**
**தமிழ்ப்பண்பாட்டு மையம்,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி - 630 003**

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**“காப்பியக் கவிஞர் மீனவனின் இலக்கியப் பணிகள்”** என்னும் தலைப்பில் திருமதி.நெ.கிருஷ்ணவேணி அவர்கள் பகுதி நேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச் செய்த இவ்ஆய்வு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(**முனைவர்.சே.செந்தமிழ்ப்பாவை**)

**நெறியாளர்**

**நெ.கிருஷ்ணவேணி, (பதிவு எண்: 0232)**
**முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)**

**தமிழ்ப்பண்பாட்டு மையம்,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி - 630 003**

நாள்:

# ஆய்வாளர் உறுதிமொழி

**“காப்பியக் கவிஞர் மீனவனின் இலக்கியப் பணிகள்”** என்னும் தலைப்பில் பகுதி நேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(நெ.கிருஷ்ணவேணி)**
**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**
**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை எம்.ஏ., எம்.ஃ.பில்.,பி.எட்.,பிஎச்.டி.,**
**பேராசிரியர் & இயக்குநர்,**
**தமிழ்ப்பண்பாட்டு மையம்,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி - 630 003**

# நன்றியுரை

வள்ளல் அழகப்பரின் பெயரால் அமைந்த பல்கலைக்கழகத் தமிழ்ப் பண்பாட்டு மையத்தில் **“காப்பியக் கவிஞர் மீனவனின் இலக்கியப் பணிகள்”** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்த வாய்ப்பு நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் அவர்களுக்கும் மதிப்பிற்குரிய பதிவாளர் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வின் நெறியாளராகவும் எனது மற்றொரு அன்னையாகவும் இருந்து ஊக்கமளித்து ஆய்வேட்டைச் செம்மையாக உருவாக்குவதற்கு உதவிய தமிழ்ப்பண்பாட்டு மையப் பேராசிரியர் & இயக்குநர், **முனைவர். சே.செந்தமிழ்ப்பாவை** அம்மா அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றிகள் என்றும் உடையது.

ஆய்விற்குப் பல்வேறு நூல்கள் நல்கி ஊக்கப்படுத்திய தமிழ்த்துறைப் பேராசிரியர் **முனைவர் சு.இராசாராம்** ஐயா அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றிகள்.

தன்னுடைய படைப்புகளை ஆய்வுசெய்வதற்கு அனுமதி நல்கியதோடு, அது தொடர்பான தகவல்களைக் கேட்கும் பொழுது தந்துதவிய **கவிஞர் மீனவன்** ஐயா அவர்களுக்குச் சிறப்பான நன்றிகள் பல.

ஆய்விற்குத் தேவையான தகவல்களைப் பெற உறுதுணையாய் நின்ற அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகத்திற்கும், கோட்டையூர் அரசு நூலகத்திற்கும் நன்றிகள் பற்பல.

என் வாகை மட்டுமே வாழ்க்கை என்று வாழ்ந்து கொண்டிருக்கும் எனது தந்தை **திரு.இரா.நெப்போலியன், தாய் திருமதி.நெ.அருணா, சகோதரன்.நெ.மனோஜ் குமார், கணவர்.திரு.பொ.க.சரவணன், அன்பு மகள் ச.கார்ணிகா** மற்றும் **அன்புத் தோழர், தோழியர்** அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகள்.

எனது ஆய்வினை மிகச் சிறப்பாக அச்சிட்டுத் தந்த அருமைத் தங்கை **ப.லெட்சுமிக்கும்** உறுதுணையாய் நின்று உதவி செய்த அன்புத் தம்பி **பெ.குபேந்திரனுக்கும்** என் மனமார்ந்த நன்றிகள்.

என்னை எப்போதும் நல்லாற்றுப்படுத்தும் எம் பள்ளித் தலைமையாசிரியர் அவர்களுக்கும் என்னுடன் பணிபுரியும் **ஆசிரியப் பெருமக்களுக்கும்,** என் நலன் விரும்பும் அத்துணை **நெஞ்சங்களுக்கும்** என் மனமார்ந்த நன்றிகள்.

**நெ.கிருஷ்ணவேணி**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. அகநா.களிற் | - | அகநானூறு களிற்று யானை நிரை |
| 2. அகநா.நித் | - | அகநானூறு நித்திலக்கோவை |
| 3. அகநா.மணி | - | அகநானூறு மணிமிடைப்பவளம் |
| 4. அர.முத்.புக.மாலை | - | அரசர் முத்தையவேள் புகழ்மாலை |
| 5. அ.மங்.அந் | - | அலர்மேல் மங்கை அந்தாதி |
| 6. ஈசு.கீதை | - | ஈசுவர கீதை |
| 7. உரை | - | உரையாசிரியர் |
| 8. கம்.அடிப்.பிள் | - | கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ் |
| 9. கம்ப.பிள் | - | கம்பர் பிள்ளைத்தமிழ் |
| 10. கீதா.சாரத்.தா | - | கீதாசாரத் தாலாட்டு |
| 11. தொல். | - | தொல்காப்பியம் |
| 12. நாச்.சுவா.சத.மா | - | நாச்சியப்ப சுவாமிகள் சதமணிமாலை |
| 13. ப. | - | பக்கம் |
| 14. பிணா.தண்.பதி | - | பிணாங்கு தண்ணீர் மலை தண்டாயுதபாணி பதிகம் |
| 15. மகா.துறவு | - | மகாராஜா துறவு |
| 16. மாதவ.மே | - | மாதவமேகலை |
| 17. மாதவ.மே.பதி. | - | மாதவமேகலைபதிகம் |

| | | |
|---|---|---|
| 18. மாதவ.மே.பா. | - | மாதவமேகலை பாயிரம் |
| 17. வேதா.சூடா | - | வேதாந்த சூடாமணி |
| 18. **P.** | - | **Page** |
| **19. Ps.** | - | **Pages** |

# பொருளடக்கம்


| வ. எண் | இயல் | தலைப்பு | பக்களண் |
|---|---|---|---|
| 1 | | முன்னுரை | 1-4 |
| 2. | ஒன்று | கவிஞரின் வாழ்வும் பணியும் | 5-18 |
| 3. | இரண்டு | காப்பியப் படைப்புத்திறன் | 19-63 |
| 4. | மூன்று | சிற்றிலக்கியப் படைப்புத்திறன் | 64-150 |
| 5. | நான்கு | உரைத்திறன் | 151-189 |
| 6. | ஐந்து | நடைத்திறன் | 190-235 |
| 7. | | முடிவுரை | 236-241 |
| 8. | | துணைநூற்பட்டியல் | 242-256 |
| 9. | | பின்னிணைப்புகள்<br>1. நேர்காணல்<br>2. கவிஞர் எழுதிய நூல்களின் நிழற்படங்கள்<br>3. கவிஞர் பெற்ற பரிசுகள் மற்றும் பாராட்டுகள் தொடர்பான நிழற்படங்கள் | |

## முன்னுரை

மனிதனை மனிதனாக்குவது மொழி. நினைப்பிற்கும் எட்டாத நெடுங்காலத்தில் இருந்தே மனிதனோடு பின்னிப் பிணைந்து வளர்ந்து வருவது மொழி ஆகும். இலக்கிய வளமும் இலக்கணச் செம்மையும் பெற்று உயர்தனிச் செம்மொழியாக விளங்கும் தமிழ்மொழியில் காலந்தோறும் பல்வேறு இலக்கியங்கள் தோன்றியுள்ளன. அவ்வகையில் காரைக்குடியில் வாழும் கவிஞராகிய மீனவனின் இலக்கியப் பணியை ஆய்வு செய்வது தமிழ் இலக்கிய வரலாற்றிற்குப் பெரிதும் பயன் நல்கும். காப்பியக் கவிஞரின் வாழ்வியல், அவரது படைப்புலகம் ஆகியவற்றை முழுமையாக ஆராய்வதாக இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுத் தலைப்பு:-**

தமிழுக்குத் தொண்டாற்றித் தரணியில் உயர்ந்த பலரது இலக்கியப் பணிகள் ஆய்வு செய்யப்பட்டு பதிவு செய்யப்பட்டுள்ளன. அவ்வகையில் இருபதாம் நூற்றாண்டுக் கவிஞராகிய மீனவன் அவர்களின் படைப்புகளை ஆய்வு செய்யும் நிலையில், **“காப்பியக் கவிஞர் மீனவனின் இலக்கியப் பணிகள்”** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்:-**

புலவர்கள் படைப்பாளிகளின் பெயர், காலம், வாழ்க்கைக் குறிப்பு அவரெழுதிய நூற்பட்டியல் ஆகிய இவை மட்டுமே இலக்கிய வரலாறாகாது. எனினும் இவற்றைத் தவிர்த்த இலக்கிய வரலாறும் முழுமை ஆகாது. படைப்பாளர்களின் படைப்புகளைப் பற்றிய கருத்துரைகள், மதிப்பீடுகள், திறனாய்வுகள் ஆகியவற்றைப் பற்றிய தனித்த ஆய்வுகள் பல பதிவு செய்யப்பட்டு வருகின்றன. புதுக்கவிதைகள் புதுப்பொலிவுடன் விளங்கும் இக்காலகட்டத்தில் மரபு மாறாமல் கவி பாடுவோரும் உள். மரபுக் கவிஞர்களுள் ஒருவரான கவிஞர்

மீனவனின் படைப்புகளை ஆய்ந்து அவர்தம் தமிழ்ப் பணியை வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை:-**

கவிஞர் மீனவனின் காப்பியமான மாதவமேகலை, சிற்றிலக்கியங்களான கம்பர் பிள்ளைத்தமிழ், கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ், அரசர் முத்தையவேள் புகழ்மாலை, நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை, அலர் மேல் மங்கை அந்தாதி போன்ற படைப்பிலக்கியங்களும் மீனவன் உரை எழுதிய அகநானூறு, கீதாசாரத் தாலாட்டு, மகாராஜா துறவு, வேதாந்த சூடாமணி, ஈசுவரகீதை போன்ற நூல்களும் ஆய்வு எல்லையாகும்.

**ஆய்வு மூலம்:-**

கவிஞர் மீனவன் அவர்களின் இலக்கியப் பணி குறித்த ஆய்வாதலால், அவர்தம் படைப்புகள் முதன்மை ஆதாரமாகவும், அவை தொடர்பான திறனாய்வு நூல்கள், கட்டுரைகள் போன்றவை துணைமை ஆதாரங்களாகவும் கொள்ளப்படும்.

**இயல் பாகுபாடு:-**

“**காப்பியக் கவிஞர் மீனவனின் இலக்கியப் பணிகள்**” என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவையாவன,

**முன்னுரை**

இயல்-1: கவிஞரின் வாழ்வும் பணியும்

இயல்2: காப்பியப் படைப்புத்திறன்

இயல்3: சிற்றிலக்கியப் படைப்புத் திறன்

இயல்4: உரைத்திறன்

இயல்5: நடைத்திறன் என்பனவாகும்.

**இயல் விளக்கம்:-**

**இயல் ஒன்று:-**

ஓர் இலக்கியப் படைப்பின் மூலம் படைப்பாளியின் சமுதாயப் பார்வை வெளிப்படுவது போல படைப்பாளியின் தனிப்பட்ட வாழ்க்கைச் சாயலும் அவனது படைப்பின் மூலம் வெளிப்படுகிறது என்பர் திறனாய்வாளர்கள். அவ்வகையில் **“கவிஞர் மீனவனின் வாழ்வும், பணியும்”** என்னும் தலைப்பிலான முதலாம் இயலானது, ஒரு சிற்றூரில் பிறந்து தம் கவித்திறத்தால் கவிஞர்கோ, காப்பியக்கவிஞர் போன்ற பல்வேறு விருதுகளைப் பெற்றுப் புகழ்பெற்ற கவிஞர் மீனவன் அவர்களின் வாழ்வினையும், அவர்தம் தமிழ்ப் பணியினையும் விளக்குமுகமாய் அமைகிறது.

**இயல் இரண்டு:-**

கவிதை இலக்கியங்களுள் பேரிலக்கியமாகத் திகழும் காப்பியத்தைப் பெரிதும் வளர்ச்சியுற்ற கலை வடிவம் என்பர். கவிஞர் மீனவன் தன் நுண்ணறிவாலும், கற்பனைத்திறத்தாலும் படைத்த ஒரு காப்பியம் **“மாதவ மேகலை”** ஆகும். மணிமேகலை போல முப்பது காதைகளால் அமைக்கப்பட்ட இக்காப்பியத்தில் இடம் பெற்றுள்ள காப்பிய இலக்கணக் கூறுகள், படைப்பாற்றல் திறன் போன்ற சிறப்புக் கூறுகளை விளக்குமுகமாய் **“காப்பியப் படைப்புத் திறன்”**என்னும் இரண்டாம் இயல் அமைகிறது.

**இயல் மூன்று:-**

புலமை மிக்கவரின் புலமையைப் புரிந்து கொண்டு, புலமையோடு அதனை வெளிப்படுத்தும் திறன் சிலருக்கே வாய்ப்பதாகும். அவ்வகையில் கம்பனின் புலமையை வியந்து கவிஞர் படைத்த கம்பர் பிள்ளைத்தமிழ், கம்பனை மறவா நெஞ்சம் கொண்ட சா.கணேசனாரைப் பாடிய கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ்,

அரசர் முத்தையவேள் புகழ்மாலை, நாச்சியப்ப சுவாமிகள் சதமணிமாலை, அலர்மேல் மங்கை அந்தாதி போன்ற நூல்கள் சிற்றிலக்கியத்திற்கு அவர் அளித்த கொடைகளாகும், இலக்கண முறைப்படி இவர் இயற்றிய இந்நூல்களின் சிறப்புகளும், கவிஞரின் படைப்பாற்றலும் ஆய்வு செய்யப்பெற்று **"சிற்றிலக்கியப் படைப்புத் திறன்"** என்னும் மூன்றாம் இயல் அமைக்கப் பெற்றுள்ளது.

**இயல் நான்கு:-**

தமிழுக்கு உரையாசிரியர்களின் கொடை அளப்பரியது, சிறந்த பல நூல்களுக்குப் பல உரைகள் காலந்தோறும் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. சங்க இலக்கிய நூல்களுள் ஒன்றான அகநானூற்றிற்கும் கோவிலூர் மடம் வெளியிட்ட வேதாந்த நூல்களுக்கும், கவிஞர் உரை வகுத்த திறனை ஆய்வு செய்யும் விதமாக **"இலக்கிய உரைத்திறன்"** என்னும் நான்காம் இயல் அமைகிறது.

**இயல் ஐந்து:-**

இலக்கிய ஆசிரியரின் நடை அவரவர் தன்மைக்கேற்ப அமைகிறது. அவர் பயன்படுத்தும் சொற்கள், வாக்கிய அமைப்பு, அவர்மேற்கொள்ளும் தனி ஒலிநயம், இவை போன்றவை எழுத்தாளரின் தனித்தன்மையைச் சார்ந்ததாகும். நடை படைப்பாளரின் தனிப்பண்பைக் குறிப்பது ஆதலால் **"நடைத்திறன்"** என்னும் தலைப்பிலான ஐந்தாம் இயல் மீனவன் அவர்களின் படைப்பில் காணப்படும் தனித்த தன்மையை ஆய்வு செய்வதாக அமைகிறது.

இதையனையடுத்து அமைந்துள்ள முடிவுரையில் ஆய்வில் கண்ட முடிவுகள் எடுத்துரைக்கப்பெற்றுள. ஆய்வுக்கு துணைநின்ற நூல்களின் பட்டியல், பின்னிணைப்புகள் போன்றவை இறுதியில் இடம்பெற்றுள.

**முன்னுரை:-**

தமிழ் மொழிக்குத் தொண்டாற்றி தரணியில் உயர்ந்தோர் பலர். அவர்களுள் குறிப்பிடத்தகுந்தவர் கவிஞர் **நா.மீனவன்.** புதுக்கவிதைகள் புதுப்பொலிவுடன் விளங்கும் இக்காலகட்டத்தில் மரபுக் கவிபாடும் வித்தகராய்த் திகழ்பவர் கவிஞர் மீனவன். ஒரு படைப்பாளனின் படைப்புகளில் அவர் தம் வாழ்க்கைத் தாக்கங்கள் மறைமுகமாகவோ, வெளிப்படையாகவோ இடம் பெற்றிருக்கும். ஆகவே அவருடைய படைப்புகளின் சிறப்புக் கூறுகளை ஆராய்வதற்கு அவரது வாழ்க்கைப் பின்னணி பெரிதும் துணை செய்கின்றது. இதன் அடிப்படையில் கவிஞர் மீனவன் அவர்களின் படைப்புகளை முழுமையாகப் புரிந்து கொண்டு அணுகுவதற்கு அவரின் வாழ்வும் பணியும் குறித்த செய்திகள் இவ்வியலில் விளக்கம் பெறுகின்றன.

**கவிஞரின் பிறப்பு:-**

கவிஞர் மீனவன் வணிகத்தில் சிறந்து விளங்கிய நகரத்தார் குடியில் பிறந்தவர். “பூம்புகார் பழங்காலத்தில் **‘நகரம்’** என்றும் **‘பட்டிணம்’** என்றும் வழங்கப்பெற்றது. காவிரிப் பூம்பட்டிணத்தில் இருந்து இடம் பெயர்ந்து இங்கு வந்து குடியேறியதால் செட்டியார்கள் **‘நகரத்தார்’** எனப் பெயர் பெற்றனர்”[1] “சோழ மன்னனுக்கு நகரத்தில் கோட்டையும் இவர்களுக்கு அவ்வரசன் ஆட்சிக்குட்பட்ட நாட்டில் கோட்டையும் இருந்ததால் நாட்டுக் கோட்டையார் என்றும், புகார் நகரத்தில் நீண்ட நெடுங்காலம் தன வணிகர் நிலை பெற்றிருந்ததால் பாண்டிய நாட்டிற்கு வந்த பின் அதன் அறிகுறியாக **‘நகரத்தார்’** என்றும் பெயர் பெற்றனர்”[2] என்பர் பண்டிதமணி மு.கதிரேசஞ்செட்டியார். இந்நகரத்தார்கள் மிகுந்து வாழும் பகுதி செட்டிநாடு என அழைக்கப்பெறுகிறது. செட்டிநாட்டுப் பகுதிகளுள் சிறப்பு மிக்க ஊராக விளங்குவது கண்டரமாணிக்கம் ஆகும். இவ்வூர் திருப்பத்தூருக்குத் தெற்கே சுமார் 15கி.மீ தொலைவில் அமைந்துள்ளது.

“ஒரு காலத்தில் நகரத்தார்கள் இவ்வூரில் குடியேறி, ஊருக்குத் தேவையான தண்ணீருக்காக ஒரு ஊருணி வெட்டும் போது அங்கு அம்மன் சிலை ஒன்றைக் கண்டு எடுத்தனர். அவ்அம்மனுக்கு ஒரு கோயில் அமைத்து அதற்கு “**மாணிக்கவல்லி”** எனப் பெயரிட்டனர். அந்த மாணிக்கத்தைக் கண்ட இடம் (ஊருக்கு) கண்ட மாணிக்கம் எனப் பெயர் பெற்று, சொல் வழக்கில் இப்போது கண்டரமாணிக்கம் என வழங்கப்பெறுகிறது”[3]

இத்தகைய சிறப்பு வாய்ந்த கண்டரமாணிக்கத்தில், 1940-ஆம் ஆண்டு மே மாதம் நான்காம் நாள் மீனவன் அவர்கள் பிறந்தார். இவரது பெற்றோர் திரு.சுப.நாச்சியப்பச் செட்டியார், திருமதி.விசாலாட்சி அம்மாள் ஆகியோர் ஆவர். இவரது இயற்பெயர் மீனாட்சி சுந்தரம் என்பதாகும். இவர்தம் புனைபெயர் மீனவன். பாண்டிய நாட்டிற்குக் குடிபெயர்ந்ததால் பாண்டிய மன்னர்களின் இலட்சினையை அடிப்படையாகக் கொண்டு மீனவன் எனப் புனை பெயர் இட்டுக்கொண்டார்.

**கல்வியும் கவிதையும்:-**

கவிஞர் மீனவன் அவர்கள், கண்டரமாணிக்கம் தண்டாயுதபாணி உயர்நிலைப்பள்ளியில் தனது பள்ளிக் கல்வியைப் பயின்றார். பள்ளியில் நன்கு படிக்கக்கூடிய மாணவனாகத் திகழ்ந்து ஆசிரியர்களின் நன் மதிப்பைப் பெற்றார்.

**“இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலனுடையான் கண்ணே யுள”**[4]

என்பது வள்ளுவம். இருப்பவர்களுக்கு இல்லை என்று கூறாத பெருமையுடைய மனிதர்களுள் ஒருவரான தேவகோட்டை வள்ளல், சிவபாத சேகரர் சேவு.மெய்யப்பச் செட்டியார் அவர்கள், ஏழ்மை நிலையில் இருந்த மீனவன் அவர்களின் கல்விக்குப் பொருளுதவி செய்தார். இவ்உதவியால் யாதொரு தடையும் இன்றித் தம் கல்வியைத் தொடர்ந்த மீனவன் ஒன்பதாம் வகுப்பில் பயிலும் போது கவிதை எழுதத் தொடங்கினார். ஒரு சிறந்த மாணவனது வெற்றிக்கு அடிப்படையாக ஒரு

நல்ல ஆசிரியர் திகழ்வது இயல்பு. அவ்வகையில் கவிஞர் மீனவன் சிறந்த மரபுக் கவிதை பாடுவதில் வல்லவராய்த் திகழ்வதற்கு அவரது பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் அமரர் தானு சுப்பிரமணியன் அவர்களின் ஊக்கம் ஒரு தலையாய காரணம் ஆகும். பள்ளியில் மீனாட்சி சுந்தரம் எழுதும் விருத்தங்களையும், வெண்பாக்களையும் சரிபார்த்து அதனை எப்படி நெறிப்படுத்த வேண்டும் என்ற முறைமையை அவருக்குக் கற்றுக் கொடுத்தவர் அவரது ஆசிரியர். இது மீனவன் அவர்களின் வளர்ச்சிக்குப் பேருதவியாய் அமைந்தது.

**கல்லூரிப் பருவம்:-**

மீனவன் அவர்கள் தனது மேல்நிலைக் கல்வியை மயிலம் தமிழ்க்கல்லூரியில் பயின்றார். திறமிக்க ஆசிரியர்களின் உதவியால் கல்லூரியில் பயின்ற நான்கு ஆண்டுகளிலும் செய்யுள் யாத்தல் போட்டியில் முதற்பரிசினை வென்று சாதனை படைத்தார். அதன் பின் அழகப்பா கலைக்கல்லூரியில் தனது கல்வியினைத் தொடர்ந்தார். மீனவன் கல்லூரியில் படிக்கும் காலங்களில், பெரியாரின் நூல்களாலும், அவரது பேச்சினாலும் கவரப்பட்டு அவரின் சீடர் ஆனார். எதையும் ஆழ்ந்து கற்கும் பண்புடையவர் மீனவன். இப்பண்பு அவருக்குப் பாடமாக இருந்த திருவாசகத்தை ஆழ்ந்து படிக்கத் தூண்டியது. திருவாசகத்தின் செம்மை, கருத்தாழம் மற்றும் மேன்மை ஆகியவை அவரை ஆன்மீகத்தின் பக்கம் ஈர்த்தது.

**வாழ்வாதாரத்திற்கான முயற்சி:-**

“பறந்து போய் மலையுச்சியை அடைவோம் என்று சொல்கின்றவர்களைப் பார்த்து ஏங்கி நிற்பது வீண். படிப்படியாக நடந்து ஏறி மலை உச்சியை அடைகின்றவர்களைப் பின்பற்றுவதே கடமை”[5] என்பர் மு.வ. அவ்வகையில் கவிஞர் மீனவன் தமது கல்லூரிப் படிப்பினை முடித்ததும் வாழ்வாதாரத்திற்கான தனது முயற்சியைத் தொடர்ந்தார். அதன் விளைவாகத் திருவள்ளுர் சௌடி மேல்நிலைப்

பள்ளியில் ஆறு மாத காலமும் அதன் பின் மதுரை தியாகராசர் மேல்நிலைப் பள்ளியில் சிறிது காலமும் பணியாற்றினார். தமது கவித் திறமையால் திரையுலகக் கவிமேதை கவியரசர் கண்ணதாசன் அவர்களிடம் ஒரு வருட காலம் உதவியாளராகப் பணிபுரிந்து அதன் பின் புதுவயல் இராமநாதன் செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றத் தொடங்கினார்.

**கவிஞரின் இல்லற வாழ்வு:-**

கவிஞர் மீனவன் தமது 23-ஆம் அகவையில் இல்லற வாழ்வை இனிமையாய்த் தொடங்கினார். இவரது திருமணம் 1963-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் ஐந்தாம் நாள் சிறப்பாக நடைபெற்றது.

**"மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"**[6]

என்னும் குறளுக்கு ஏற்ப மனையறத்திற்குத் தக்க நற்குண, நற்செயல்களை உடைய மெய்யம்மை என்ற சரசுவதி அம்மையார் இவரின் வாழ்க்கைத் துணையாக அமைந்தார். இவர் காரைக்குடி ஸ்ரீமீனாட்சி சுந்தரம் பள்ளியில் இடைநிலை ஆசிரியராக 38 ஆண்டுகள் பணி புரிந்த சிறப்பிற்குரியவர். ஆசிரியப்பணி, கவிதைப்பணி, சமுதாயப்பணி என அத்துணைப் பணிகளிலும் கவிஞர் அவர்கள் வெற்றி பெறுவதற்கு அவர்தம் துணைவியார் துணை நின்றார். சிறந்த இல்லற வாழ்விற்கு இலக்கணமாய்த் திகழும் இவர்கள், விசாலாட்சி, சுசீலா, மணிமேகலை, முத்துராமன் என்னும் நான்கு மக்கட் செல்வங்களைப் பெற்று அவர்களை நன்முறையில் வளர்த்து, சமுதாயத்திற்குத் தொண்டாற்றும் சிறந்த மனிதர்களாக மாற்றியுள்ளனர்.

**கவிக்குடும்பம்:**

கவிஞர் மீனவன் அவர்களின் பாட்டனார் கூத்தலூர் இராமநாதன் செட்டியார் ஆவார். இவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் மாணவர்.

வடமொழியிலும், தமிழ்மொழியிலும் புலமை பெற்ற பண்டிதமணி கதிரேசன் செட்டியாரின் வகுப்புத் தோழர் ஆவார். மகாவித்துவானின் மாணவரும் அவரைப் போன்றே நினைத்த நேரத்தில் கவிதை பாடும் திறமையும் மரபுக் கவிதை பாடுவதில் வல்லமையும் பெற்றிருந்தார். கம்பைப் பிரபந்தப் பஞ்சகம், இலங்குடி அய்யனார் பதிகம், வல்லநாட்டுக் கருப்பர் பதிகம், மேற்குடி ஆதீனமிழகி அய்யனார் பதிகம், நாச்சியார்புரம் நாச்சியாரம்மன் பதிகம், காட்டு நாச்சியம்மன் பதிகம், பிணாங்கு தண்ணீர்மலைத் தண்டாயுதபாணிப் பதிகம் போன்ற நூல்கள் இவரது கைவண்ணத்தில் மலர்ந்தனவாகும். சான்றாக

**"சீருலவு தனிவைரக் கால்கள் நாட்டிச்**

**செம்பவள விட்டமதில் சிறக்கப் பூட்டிப்**

**பேருலவும் இரத்தினப் பொற்பலகை சேர்த்துப்**

**பிறங்குமணித் தரளவடம் பின்னி ஆர்த்து**

**காருலவு தாரழகக் கௌரி செம்பொன்**

**காந்தள்மலர்க் கைகளினால் களிப்புற நாட்டத்**

**தாருலவு கடம்பணிவேள் ஆடீர் ஊஞ்சல்**

**தண்ணீர்மா மலைக்கரசே ஆடீர் ஊஞ்சல்"( பிணா.தண்.பதி.6)**

என்பது பிணாங்கு தண்ணீர் மலை தண்டாயுதபாணிப் பதிகத்தில் உள்ள பாடலாகும். இத்தகைய சிறப்புமிக்க பாட்டனாரை முன்மாதிரியாகக் கொண்ட மீனவன் அவர்கள் இளமையில் கவிதை எழுதும் திறம் பெற்றுத் திகழ்ந்ததில் வியப்பில்லை. இவரது வழியில் இவர்தம் மகள்களான சுசிலா, மணிமேகலை ஆகிய இருவரும் கவிதை பாடும் திறமை பெற்றுள்ளனர்.

**நல்லாசிரியர் மீனவன்:-**

“மின்சாரத்தில் உள்ள ஆற்றலை உள்வாங்கிக் கொண்டு விளக்கெரிவது போல, நூற் கருத்துகளைப் புரிந்து கொண்டு அவற்றை மற்றவர்களுக்குப் புரியும் வண்ணம் எடுத்துரைப்பது **‘கற்பித்தல்’** என்ற பணியாகும்.”[7] இத்தகு கற்பித்தல் பணிக்கு இலக்கணமாகவும், இயக்கமாகவும் விளங்கிக் கல்வித் தொண்டு புரிந்தவர் மீனவன். இதனை 1998-ஆம் ஆண்டு அன்றைய முதல்வர் கலைஞர்.மு.கருணாநிதி அவர்களின் கையினால் குடியரசுத் தலைவர் இராதாகிருஷ்ணன் அவர்களின் பெயரால் அமைந்த நல்லாசிரியர் விருதினை மீனவன் அவர்கள் பெற்றமை நன்கு புலப்படுத்தும்.

**அறிஞர்கள் தொடர்பு:-**

மீனவன் அவர்கள் அழகப்பா கலைக் கல்லூரியில் பயின்ற காலங்களில் தமிழ் இமயம் வ.சுப.மாணிக்கனார், பேராசிரியர் அமிர்தலிங்கனார், பேராசிரியர் தேசிகனார், பேராசிரியர் சிவகுருநாதன், போன்றோர் இவரின் ஆசிரியராக அமைந்தனர். இவர்களது திறமிக்க வழிகாட்டுதல்கள் இவரின் வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்தன. **‘கழக இலக்கியச் செம்மல்’, ‘புலவர் மணி’, ‘இலக்கியச் செம்மல்’** என்பன போன்ற இருபதுக்கும் அதிகமான விருதுகளும், குன்றக்குடி அடிகளாரால் **‘குறள் ஞாயிறு’** என்ற பட்டமும் பெற்ற நல்லாசிரியர் இளங்குமரனார் இவரின் நெருங்கிய தோழர் ஆவார்.

**“அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை**
**திறனறிந்து தேர்ந்து கொளல்”[8]**

என்னும் குறள் நெறிக்கு ஏற்பச் செந்தமிழ் நல்லர் தெ.முருகசாமி, குறள் நெறி இலக்குவனார் போன்ற பல தமிழ் அறிஞர்களிடம் இவர் நட்பு பாராட்டியவர்.

**கோவிலூா் ஆதினத்துடனான தொடா்பு:-**

காரைக்குடி நகரிலிருந்து இரண்டு கிலோமீட்டா் தொலைவில் இருப்பது கோவிலூா் தமிழ் வேதாந்த மடம். இருநூற்று ஐம்பது ஆண்டுகால வரலாற்றைக் கொண்டதொரு ஆதினமாக இது திகழ்கிறது. இதனைத் தொடங்கியவா் தவத்திரு ஸ்ரீமுத்துராமலிங்க ஞான தேசிகா் ஆவாா். இந்தியாவிலும், இலங்கையிலும் புகழ் பரப்பியுள்ள கோவிலூா் ஆதினக் குருபரம்பரை புலமைச்சீலமும், செயல்திறனும் மிக்கது. இவ்ஆதினம் ஆண்டாண்டு காலமாக ஆன்மீகப் பணியொடு சமுதாயப் பணி, கல்விப்பணி, இலக்கியப் பணி ஆகியவற்றையும் செம்மையுடன் ஆற்றி வருகின்றது. சமஸ்கிருதம் கற்றிருந்தால் மட்டுமே வேதாந்தம் படிக்க இயலும் என்பதை மாற்றி தமிழில் வேதாந்தத்தைக் கற்றுக் கொடுப்பதைத் தனது நோக்கமாகக் கொண்டு செயல்படும் இவ்வாதினத்தொடு மீனவன் அவா்களுக்கு உள்ள தொடா்பு இங்கு குறிக்கத்தக்கது. ஆதினத்தின் ஒன்பதாவது பட்டத்தில் திரு.இராமநாத தேசிகா் இருந்த காலத்தில் நிருவாக அமைப்பு மாற்றப்பட்டது அப்பொழுது ஏற்படுத்தப்பட்ட ஆண்டவா் மன்றத்தில் மீனவன் அவா்களும் ஓா் உறுப்பினராகச் சோ்க்கப்பட்டாா். இதன் பின் கோவிலூா் ஆதினத்தின் தமிழ்ப்பணிகளில் எல்லாம் மீனவன் அவா்கள் கலந்து கொள்ளும் நல்வாய்ப்பு கிட்டியது. ஆதினத்தின் பன்னிரெண்டாவது பட்டமாகப் பொறுப்பேற்ற நாச்சியப்ப ஞான தேசிகா் அவா்கள் ஆதினம் சாா்பாகத் திங்களிதழ் ஒன்றை ஆரம்பிக்க நினைத்தாா். அதன் பொறுப்பாளராக மீனவன் அவா்களை நியமித்தாா். கோவிலூா் ஆதினத்தில் பொதுத் தொடா்பு அலுவலா் மற்றும் மேலாளராகவும் அவா் செயல்பட்டாா். கோவிலூா் மடாலயம் சங்க இலக்கியத்திற்கு ஓா் எளிய உரை கண்டு பதிப்பிக்க விரும்பியது. சங்க இலக்கிய அகநானூற்றிற்கு மீனவன் அவா்கள் உரை கண்டருளினாா். இதன் பின் உடல்நிலை காரணமாக மீனவன் அவா்களால் ஆதினப் பணி ஏதும் செய்ய இயலவில்லை. ஆயினும் ஆதினம் இவா்தம்

பணியைத் தொடர்ந்து வரவேற்றது. இதன் காரணமாகப் பல ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் ஆதினத்துடன் இணைந்த கவிஞர் இன்றளவும், வேதாந்த நூல்களுக்கு எளிய உரைகளை அருளிய வண்ணம் உள்ளார்.

**அறிந்த கலை மற்றும் மொழிகள்:-**

கவிஞர் மீனவன் அவர்கள் சித்த வைத்தியக் கலையினை முறையாகப் பயின்றவர். மேலும் தமிழ், ஆங்கிலம், இந்தி, வடமொழி, தேவநாகரி போன்ற பல மொழிகளை அறிந்தவர். இம்மொழிப்புலமை பல்வேறு மொழி நூல்களை ஆராய்ந்து ஆழ்ந்து கற்க இவருக்குப் பெரிதும் துணை நின்றது. கோவிலூர் ஆதினத்தின் சிற்பக் கல்லூரியின் பாடத் திட்டத்தை வகுக்கும் பொறுப்பு மீனவன் அவர்கட்கு வழங்கப்பெற்ற போது சிற்ப சாத்திரத்தை முழுமையாகப் படித்தால் ஒழிய அப்பாடத்திட்டத்தை வரையறுக்க இயலாது என்பதை அறிந்து கொண்ட மீனவன் அவர்கள் வடமொழியினையும் தேவநாகரியையும் வலிந்து கற்றுக்கொண்டார். இது செய்வன திருந்தச்செய்யும் அவர் தம் பண்பைப் புலப்படுத்தும்.

**தமிழ் மொழி வளர்ச்சியில் கவிஞரின் பங்கு:-**

தமிழ் நாட்டில் அரசியல் மொழி தமிழாக இருத்தல் வேண்டும். தமிழ்நாட்டில் தமிழைத் தவிர வேறு எந்த மொழியும் கட்டாயப் பாடமாக இருத்தலாகாது; தமிழ் மக்களின் வாழ்வு, தாழ்வு, வழிபாட்டு முறைகளைத் தமிழ் மொழியில் தமிழர்களைக் கொண்டே நடத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்களால் **'தமிழ்க்கழகம்'** தொடங்கப்பட்டது. இதனைத் தொடர்ந்து தமிழினைக் காத்து உயர்த்த வேண்டும் என்ற நோக்கத்தோடு 1963-இல் இலக்கியச் செம்மல் பேராசிரியர் இளங்குமரன் அவர்கள், தமிழ்க் காப்புக் கழகம் என்னும் ஓர் அமைப்பினை உருவாக்கினார். இதில் கவிஞர். மீனவன் முக்கியப் பங்கு வகித்தார், அப்பொழுது நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில்

காவலர்களால் கண்காணிக்கப்பட்ட ஒருவராக விளங்கினார். தமிழ் மொழியின் வளர்ச்சிக்குத் தம் இலக்கியங்களால் மட்டுமின்றி செயல்பாடுகளாலும் தொண்டாற்றிய பெருமை கவிஞர் மீனவன் அவர்களுக்குண்டு.

**படைப்புகளும் பரிசுகளும்:-**

தமிழில் உரைநடை, காப்பியம், சிற்றிலக்கியம் எனப் பல வகைமைகளில் இவர் நூல்கள் இயற்றியுள்ளார். மணிமேகலையின் தொடர்ச்சியாக இவர் இயற்றிய காப்பியமான மாதவமேகலை இவருக்குப் பெரும்புகழ் ஈட்டித் தந்தது. குறள்நெறி, கையெழுத்து, நகரத்தார் இதழ்கள் போன்றவற்றில் இவரின் கவிதைகள் வெளிவந்துள்ளன. மேலும் திருச்சி, மதுரை வானொலி நிலையங்களில் நிகழ்த்தப்பட்ட இவரது கவிதைப் பொழிவுகளும், பொதிகைத் தொலைக்காட்சியில் இவர் அளித்த நகரத்தார் வரலாற்றுத் தொடரும் இவரது சிறப்பினைப் பலரறியச் செய்தது.

**கவிஞர் மீனவன் அவர்களின் படைப்புக்கள்:-**

**காப்பியங்கள்:-**

1. மாதவமேகலை
2. மின்மினி

**சிற்றிலக்கியங்கள்:-**

1. கம்பர் பிள்ளைத்தமிழ்
2. கம்பனடிப் பொடி பிள்ளைத்தமிழ்
3. அரசர் முத்தையவேள் புகழ் மாலை
4. நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை
5. அலர்மேல் மங்கை அந்தாதி

**உரைகள்:-**

சங்க இலக்கியநூல்களுள் ஒன்றான அகநானூற்றிற்கும் கோவிலூர் ஆதினம் வெளியிட்ட வேதாந்த நூல்களான கீதாசாரத் தாலாட்டு, மகாராஜாதுறவு, வேதாந்த சூடாமணி, ஈசுவரகீதை போன்ற நூல்களுக்கும் இவர் உரை எழுதியுள்ளார்.

**பரிசுகள்:-**

மரபுக் கவிதை பாடுவதில் வல்லவரான மீனவன் அவர்கள் அதற்காகப் பல பரிசுகளைப் பெற்றுள்ளார். இவரது மாதவ மேகலை என்னும் காப்பியம், மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் முதல் பரிசினைப் பெற்றது. இவர் இயற்றிய கம்பர் பிள்ளைத்தமிழ் பிணாங்கு தமிழ்ச்சங்கத்தின் முதல் பரிசினைப் பெற்றது. அமுதசுரபி இதழ், ஸ்ரீராம் நிதி நிறுவனம், இந்தியன் வங்கி ஆகியவை இணைந்து நடத்திய போட்டியில் இவரது **'மின்மினி'** என்னும் காவியம் இரண்டாம் பரிசினைப் பெற்றது. இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட கவியரங்குகளில் ஆன்மீகம், இலக்கியம், சமுதாயச் சிந்தனை, வாழ்வியல் குறித்த பல கவிதைகளைப் படைத்த இவர் அதற்காகப் பல்வேறு பரிசுகளைப் பெற்றுள்ளார்.

**பணிகளும் பட்டங்களும்:-**

புதுவயல் இராமநாதன் செட்டியார் மேல்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக 34 ஆண்டுகள் சிறப்பாகப் பணியாற்றினார். காரைக்குடி அரிமா சங்க உறுப்பினராக 37 ஆண்டுகள் இருந்து சமுதாயப் பணிகளை ஆற்றியுள்ளார். காரைக்குடி இந்து மதாபிமான சங்கச் செயலராக 15 ஆண்டுகள் பொறுப்பு வகித்துள்ளார். முகவை மாவட்டத் தமிழ்க் கழகத் தலைவராகவும் சிவகங்கை மாவட்ட எழுத்தாளர் சங்கத் தலைவராகவும் அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் துணைத்தலைவராகவும் விளங்கி தமிழ் எழுத்துலகை வளர்ச்சிப் பாதையில் செலுத்திய சிறப்பும் இவருக்குண்டு.

கவிஞர் மீனவன் அவர்கள் தமிழுக்கு ஆற்றிய இலக்கியப் பணிகளின் பயன் அவரைப் பல்வேறு பட்டங்களுக்கு உரியவராக்கியது. காப்பியம் படைக்கும் திறத்தினைப் பாராட்டி காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரி இவருக்கு "**காப்பியக் கவிஞர்**" என்னும் பட்டத்தினை அளித்தது. அனைத்துலக எழுத்தாளர்களின் சங்கத்தின் சார்பில் இவருக்குப் பொற்கிழிக் கவிஞர், கவிமாமணி, பாரதிபணிச்செல்வர் போன்ற பட்டங்கள் வழங்கப்பெற்றுள.

**ஆதினம் அருளிய விருதுகள்:-**

கவிஞர் மீனவனின் கவிதைப் பணியைப் பாராட்டி குன்றக்குடி ஆதினம் சேக்கிழார் பொற்பதக்கத்துடன் "**கவிஞர்கோ**" என்னும் விருதினைக் கொடுத்து இவரைக் கௌரவித்தது. திருவாவடுதுறை ஆதின குருமுதல்வர் அருள்மிகு நமசிவாயமூர்த்திகள் இவரது அருந்தமிழ்ப் பணிகளைப் பாராட்டி, அருட்கவசமாகப் பொன்னாடை போர்த்தி உருத்திராக்க மாலை அணிவித்து பொற்கிழியாக ரூபாய் ஐயாயிரமும் அளித்து **'நற்றமிழ் நாவலர்'** என்னும் சிறப்பு விருதும் கொடுத்துச் சிறப்பித்தார். இங்ஙனம் பல்வேறு சிறப்புகளைப் பெற்றுள்ள மீனவன் அவர்கள் இன்றும் கம்பன் கழகம், கோவிலூர் மடாலயம், அரிமாசங்கம் போன்றவை நிகழ்த்தும் கூட்டங்களில் கலந்து கொண்டு எழுத்துப்பணி, பேச்சுப்பணி, கவிதைப்பணி என அனைத்து நிலைகளின் வாயிலாகவும் தமிழ்ப்பணி ஆற்றிவருவது குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை

- சிவகங்கை மாவட்டத்தில் 1940-ஆம் ஆண்டு மே மாதம் நான்காம் நாள், கண்டரமாணிக்கம் என்னும் ஊரில் வணிகத்தில் சிறந்து விளங்கிய நகரத்தார் குடியில் மீனவன் பிறந்தார்.
- மீனாட்சி சுந்தரம் என்னும் இயற்பெயர் கொண்ட மீனவன் பள்ளியில் படிக்கும் காலம்தொட்டு கவிதை எழுதுவதில் வல்லவராய் விளங்கினார்.
- புதுவயல் இராமநாதன் செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியில் சேர்ந்து எண்ணற்ற மாணவர்களின் எதிர்காலம் சிறக்க உதவினார்.
- கவிஞர் மீனவன் தமது முப்பத்துநான்கு ஆண்டுகால ஆசிரியப் பணியின் செம்மை காரணமாக 1998-ம் ஆண்டு நல்லாசிரியர் விருது பெற்றார்.
- பன்மொழிப் புலமை கொண்ட மீனவன், வ.சுப.மாணிக்கனார், அமிர்தலிங்கனார், தேசிகனார் போன்ற அறிஞர்களிடம் நட்பு பூண்டு தமது தமிழ்ப் பணியை இடையறாது ஆற்றினார்.
- மீனவன் அவர்கள் மாதவமேகலை, கம்பர் பிள்ளைத்தமிழ், கம்பனடிப் பொடி பிள்ளைத்தமிழ், அரசர் முத்தையவேள் புகழ்மாலை, அலர்மேல் மங்கை அந்தாதி, நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை போன்ற பல்வேறு நூல்களைப் படைத்த பெருமைக்குரியவர்.
- **‘கவிஞர்கோ’, ‘கவிமாமணி’ ,’நற்றமிழ் நாவலர்’, ‘காப்பியக் கவிஞர்’** போன்ற பல்வேறு விருதுகளைப் பெற்று இன்றளவும் தமிழுக்குத் தொண்டாற்றி வரும் பெருமை மீனவன் அவர்களுக்குண்டு.

**சான்றெண் விளக்கம்**

1. சோ.ம.லெ, செட்டிநாடும் செந்தமிழும், ப.7
2. பழ. அண்ணாமலை, செட்டிநாடு ஊரும் பேரும், ப.9
3. மேலது, ப.91
4. அ.மாணிக்கம் (தெளிவுரை), திருக்குறள்-223
5. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.8
6. அ.மாணிக்கம் (தெளிவுரை), திருக்குறள்-51
7. வெ.சுபாசு சந்திரபோசு, கவியோகி சுத்தானந்த பாரதியார், ப.100
8. அ.மாணிக்கம் (தெளிவுரை), திருக்குறள்-441

ஈராயிரம் ஆண்டுகளுக்கும் அதிகமான காலப்பரப்பு கொண்ட தமிழிலக்கிய வரலாற்றுக் களத்தில் பல்வேறு இலக்கிய வகைகள் தோன்றித் தமிழர்களின் இலக்கியப் பெருமையை மிகுத்துள்ளன. இவற்றுள் காப்பிய இலக்கியமும் ஒன்றாகும். கதை நீட்சி, புனைவுச் சூழல், பாத்திரப்பன்மை போன்றவற்றால் இலக்கிய வகைமையுள் காப்பியங்கள் தனித்தடம் பதிக்கின்றன. "இலக்கியத் தோற்றத்தின் இரண்டாம் கட்ட வளர்ச்சியாகக் காப்பியம் என்னும் இலக்கிய வகை கருதப்படுகிறது. தனிப்பாடல் முறைமை வளர்ச்சி பெற்ற நிலையில் அடுத்த கட்டமாகக் காப்பிய இலக்கியம் தோன்றி நிலைபெறும் மரபு கிரேக்கம், இலத்தீன், பாரசீகம், தமிழ் ஆகிய மொழிகளில் காணப்படுகிறது. சமுதாய இயல் பார்வையில் இது வரை கிடைத்துள்ள தரவுகளின்படி வீரயுகப் பாடல்கள் தாம் முதற்கட்ட இலக்கிய மரபாகக் கூறப்படுகின்றன"[1] என்பர் டாக்டர் அ.அ.மணவாளன்.

தமிழ்ப் பாட்டுலகில், சங்கத் தனிப்பாடல்களுக்குப் பின் பாடுபொருளிலும் யாப்பிலும், புதுமை புகுந்தது. அப்புதுமை இளங்கோவடிகளால் வடிவம் பெற்று சிலப்பதிகாரக் காப்பியமாய்ப் பிறந்தது. சிலப்பதிகாரம் தொடங்கி இன்று வரை பல்வேறு சிறப்பினதாய்க் காப்பியங்கள் படைக்கப்பட்டு வருகின்றன. புதுக்கவிதையும், கதை இலக்கியங்களும் பெருகி வரும் இந்த நூற்றாண்டில் கவிஞர் மீனவன் அவர்கள், காப்பிய இலக்கியத்தைப் படைத்துத் தனிச் சிறப்புடையவராய்த் திகழ்கிறார். கவிஞர் மீனவன் அவர்கள் தாம் படைத்த காப்பியச் சிறப்பின் காரணமாய்க் காப்பியக் கவிஞர் என்று அழைக்கப்படுவது இங்கு குறிக்கத்தக்கது. எனவே அவர் படைத்த காப்பியங்களைப் பகுத்தாய்ந்து அவர்தம் காப்பியப் படைப்புத் திறனை எடுத்துரைப்பது இவ்வியலின் நோக்கம் ஆகும்.

**மீனவனின் காப்பியங்கள்:-**

கவிஞர் மீனவன் அவர்கள் படைத்த இலக்கியங்களுள் காப்பியங்கள் தனித்த சிறப்புடையதாய்த் திகழ்கின்றன. மாதவமேகலை, மின்மினி ஆகியவை மீனவனின் காப்பியப் படைப்புகள் ஆகும். மின்மினி என்னும் காப்பியத்தின் பிரதி ஆசிரியரிடம் கூட இல்லை என்பதால் ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் போல மாதவமேகலை மட்டும் ஆராயப் பெற்றுள்ளது.

**மாதவமேகலை காப்பியத் தோற்றம்:-**

மணிமேகலையைத் தொடர்ந்து ஒரு காப்பியம் எழுந்தால் என்ன? என்னும் வினாவிற்கு விடையாகத் தோன்றியது மாதவமேகலை. மாதவமேகலையை நூலாக்கம் செய்து வெளியிட்ட வானதி திருநாவுக்கரசு அவர்கள் தனது பதிப்புரையில் மாதவமேகலை தோற்றம் பெற்ற சூழலைப் பின்வருமாறு பதிவு செய்துள்ளார்.

“சிலப்பதிகாரத்தின் தொடர்ச்சியாக மணிமேகலை இயற்றப் பெற்றது. மணிமேகலையில் அக்காப்பியத் தலைவியின் முழு வாழ்வும் நிறைவு பெறவில்லை. எனவே மணிமேகலைக் காப்பியத்திலிருந்து மற்றொரு காப்பியம் பிறக்க வழியில்லையா என அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் கலைமாமணி டாக்டர் ஆறு.அழகப்பன் அவர்கள் ஒரு வினாவை எழுப்பினார்கள், அவர்கள் ஒரு நல்ல படைப்பாளர். ஆதலால் அவர்களின் வினாவில் படைக்க முடியும் என்ற குறிப்புப் பொருந்தியிருத்தல் இயல்பே. அவர்களின் எண்ணத்தை மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் செயற்படுத்தக் கருதினர். இதன் விளைவே மாதவமேகலை”[2] என்கிறார். **‘மணிமேகலைத் துறவு’** என்னும் தொடர் சாத்தனாரின் காப்பியப் படைப்பிற்கு வித்தாகியது போல் பேராசிரியர் அழகப்பனாரின் வினா, மீனவனின் காப்பியப் படைப்பான மாதவமேகலை தோன்றக்

காரணமாய் அமைந்தது. போட்டிச் சூழலில் எழுந்த காப்பியமானாலும் பல நாள் முயன்று தந்த சீர்மை மிக்க ஒரு படைப்பாக மாதவமேகலை திகழ்கிறது.

**மாதவ மேகலை - காப்பியக் கட்டமைப்பு:-**

காப்பியக் கட்டுக்கோப்பு அல்லது கட்டமைப்பு என்பது காப்பிய நிகழ்ச்சிகளின் கோப்புத் தன்மையைக் குறிக்கும். இதன் படி மாதவமேகலை காப்பியத் தொடக்கம், நிகழ்ச்சிக் கோப்பு, தலைப்புப் பொருத்தம், அறம் சார் செய்திகள் போன்ற பலவற்றைத் தன்னிடத்துக் கொண்டு திகழ்கிறது.

**காப்பியப் பகுப்பு:-**

மாதவமேகலை காண்டப் பகுப்பு அற்றது. மாதவமேகலையில் காஞ்சி மட்டும் முதன்மை பெறும் நகரமாய்க் காணப்படுதலால் இதில் காண்டப் பகுப்புச் செய்தற்கு இடமில்லை. மாதவமேகலை முப்பது உட்பிரிவுகள் கொண்டதாய் அமைகிறது. அவற்றின் பெயர்களும், அவை கொண்டுள்ள அடியளவும் பின் வருமாறு,

| | பெயர்கள் | | அடியளவு |
|---|---|---|---|
| 1. | **கச்சி காண் காதை** | - | **137** |
| 2. | **வரலாறு உரைத்த காதை** | - | **144** |
| 3. | **பசித்தார்க்குதவப் பாவை செல்காதை** | - | **70** |
| 4. | **புண்ணியப் பாவையைப் போற்றிய காதை** | - | **180** |
| 5. | **கானில் குழவி கண்ட காதை** | - | **98** |
| 6. | **குழவி வளரக் கொடுத்த காதை** | - | **148** |
| 7. | **பெயர் சூட்டு காதை** | - | **85** |
| 8. | **நலமுறு கல்வி நாடிய காதை** | - | **84** |
| 9. | **உயர்நல ஞானம் உணர்த்திய காதை** | - | **162** |
| 10. | **புத்தரின் நல்லறம் புகட்டிய காதை** | - | **82** |

| | | | |
|---|---|---|---|
| 11. | **கன்னிதன் துயரம் களைந்த காதை** | - | 86 |
| 12. | **அன்பினை மதத்தார்க்கறிவித்த காதை** | - | 65 |
| 13. | **அமுதசுரபியை அகற்றிய காதை** | - | 82 |
| 14. | **பாவை அறவணர்பாற் செல்காதை** | - | 65 |
| 15. | **பாத்திரம் வருமெனப் பகர்ந்த காதை** | - | 76 |
| 16. | **இல்லாப் பழியை இயம்பிய காதை** | - | 104 |
| 17. | **கவலுறு மாந்தரைக் கண்ட காதை** | - | 56 |
| 18. | **பாத்திரம் மீளப் பார்த்த காதை** | - | 56 |
| 19. | **காமம் கால் கொண்ட காதை** | - | 84 |
| 20. | **மாதவன் மயங்கிய காதை** | - | 98 |
| 21. | **மாதவன் மணம்பெற மனங்கொள் காதை** | - | 57 |
| 22. | **அன்னம் செய்தி அறிவித்த காதை** | - | 51 |
| 23. | **மகள்தர நம்பி மறுத்த காதை** | - | 67 |
| 24. | **அன்னத்தை அரவு தீண்டிய காதை** | - | 57 |
| 25. | **மாதவன் புலம்பி மயங்கிய காதை** | - | 47 |
| 26. | **மாதவனை அறவணர்பால் உய்த்த காதை** | - | 65 |
| 27. | **அறவணர் அல்லல் அகற்றிய காதை** | - | 70 |
| 28. | **மாதவன் பழம்பிறப்பு உணர்த்திய காதை** | - | 109 |
| 29. | **அறவணர் மேகலைக்கறிவித்த காதை** | - | 55 |
| 30. | **மேகலை முக்தி மேவிய காதை** | - | 133 |

இவற்றொடு தொடக்கத்தில் வாழ்த்துப்பாயிரம் - 28அடிகள், பதிகம் 133அடிகள், இறுதியில் நூற்கட்டுரை - 15அடிகள் வாழத்துரை - 20 என மாதவமேகலை 2941 அடிகளைக் கொண்டு அமைந்துள்ளது.

1. **கச்சிகாண் காதை:-**

கோவலன், மாதவி, இணையருக்குப் பிறந்த மணிமேகலை கலைநிறை காஞ்சிக்குச் சென்றாள். அறவண அடிகளின் அருளாசி பெற்று அவர்தம் பள்ளி நீங்கினாள். காஞ்சிநகர்ச் சோலை, செய்குன்று, வாவி, ஆடலரங்கு ஆகியவற்றின் அழகினைக் கண்டு கடந்து நகர் மருங்கிருந்த மண்டபம் சேர்ந்தாள். அங்குள்ள பசித்தோர், பிணியாளர்களுக்கு அமுத சுரபியிலிருந்து அள்ளக் குறையாத உணவளித்து மகிழ்ந்தாள்.

2. **வரலாறு உரைத்த காதை:-**

உணவினை உண்ட மக்கள் மகிழ்ந்து மணிமேகலையை வாழ்த்தினர். அங்கிருந்து அகன்று அறவோர் பள்ளியை அடைந்தாள். அறவோர் பள்ளிக்கு வந்த ககனசாரிகள் மணிமேகலையின் வரலாற்றை அறவோர்க்கு உணர்த்தினார். அறவோர் அவளை மகிழ்ந்து வரவேற்றனர்.

3. **பசித்தார்க்குதவப் பாவை செல் காதை:-**

அறவோர் பள்ளியிருந்த முனிவர்கள் மேகலையிடம் காஞ்சியின் புறத்தே மழையின்மையால் அவ்வூருக்குச் சென்று அவர்களுக்கு உணவளித்து உதவுமாறு வேண்டிக் கொண்டனர். அது கேட்ட மணிமேகலை கன்றினை நினைத்துச் செல்லும் பசு போல் அவர்களைத் தேடிச் சென்றாள்.

4. **புண்ணியப் பாவையைப் போற்றிய காதை:-**

சோழநாட்டில் நாகநாட்டைச் சேர்ந்த பீலிவளை, சோழன் நெடுமுடிக்கிள்ளியின் காதலுக்கு ஆட்பட்டு மகனைப் பெற்றெடுத்தாள். நாகநாடு திரும்பிய அவள் கம்பளச் செட்டி மூலம் தன் மகனைக் கிள்ளியிடம் சேர்க்குமாறு அனுப்பினாள். வழியில் கலம் உடைந்தது. தப்பிய செட்டி மூலம் செய்தியறிந்த மன்னன் மகனைத் தேடினான். அலைகளின் வழி வந்த குழந்தையை இளந்திரையன் எனப் பெயரிட்டு வளர்ப்பதாக ஏவலர் கூறினர்.

சோழன் அவனைத் தேடிக்கண்டுபிடித்து காஞ்சியின் மன்னன் ஆக்கினான். அவனது ஆட்சியில் காஞ்சி பஞ்சமுற்றதை எண்ணி வருந்தினான். அவனது வருத்தம் மறையுமாறு பஞ்சமுற்ற பகுதிகளில் மணிமேகலை மக்கட்கு உதவினாள். மக்கள் மகிழ மழை பொழிந்தது. மேகலையால் பஞ்சம் தீரும், மழை பொழியும் என ஒரு தெய்வம் தன்னிடம் கூறியதை மேகலைக்கு எடுத்துரைத்த மன்னன் அவளை மனதார வணங்கிப் போற்றினான்.

**5. கானில் குழவி கண்ட காதை:-**

காஞ்சிப் பதிகளில் அறம் புரிந்து வந்த மணிமேகலை கருவீனும் நிலையில் உள்ள கன்னி ஒருத்தியைக் கண்டாள். அப்பெண் பெற்றோரையும் வளர்த்த அத்தையையும் இழந்தவள். அதன் பின் ஞானமாநிதியெனும் ஆசிரியரிடம் வளர்ந்த பொழுது அவரிடம் கல்வி கற்ற சங்கமன் பால் காதல் கொண்டு கருவுற்றதையும் அவனது பெற்றோர் அதனை ஏற்காமல் இருந்ததால் அக்கவலையிலேயே சங்கமன் இறந்ததையும் மீண்டும் காஞ்சி வரும் வழியில் அக்கானகம் அடைந்ததையும் மேகலையிடம் கூறினாள். குழந்தையை ஈன்ற அவள் உடன் உயிர் துறந்தாள். அழுகின்ற குழந்தையைக் கையில் ஏந்திய மேகலை கானகத்தைக் கடந்தாள்.

**6. குழவி வளரக் கொடுத்த காதை:-**

மணிமேகலை தான் எடுத்த குழந்தையை வளர்ப்பார் யாரென எண்ணினாள். அப்பொழுது சிறுகுடி என்னும் ஆயர்பாடியில் வில்லவன் என்பானும் கோதை என்பாளும் பிள்ளையில்லாக் குறையால் தெய்வத்தை வணங்க வந்ததை அறிந்தாள். குழந்தையொடு அங்கு தோன்றிய மேகலை, தாயற்ற அக்குழந்தைக்கு மாதவன் எனப் பெயரிட்டு வளர்க்குமாறு வேண்டினாள். அவர்களும் மகிழ்வோடு ஏற்றனர்.

**7. பெயர் சூட்டு காதை:-**

மணிமேகலை தந்த குழந்தையோடு வில்லவனும் கோதையும் மனைக்குச் சென்றனர். உறவினரை அழைத்துக் குழந்தையைத் தொட்டிலிட்டு விழாக் கொண்டாடி மகிழ்ந்தனர். அக்குழந்தைக்கு மணிமேகலை கூறியவாறே மாதவன் எனப் பெயரிட்டனர்.

**8. நலமுறு கல்வி நாடிய காதை:-**

வறட்சி மாற்ற வந்த மழை போல வில்லவனும், கோதையும் இன்பமுற மாதவன் ஏற்றமுடன் வளர்ந்தான். ஐந்து வயதான பொழுது அவனுக்குக் கல்வி உணர்த்த எண்ணிய வில்லவன் ஓங்கிய கல்வி முழுதுணர்ந்த செந்தமிழ்க் குமரனார் பால் மாதவனுடன் சென்று அவனுக்குக் கல்வி கற்றுத்தர வேண்டினான். மணிமேகலை மாதவனைத் தந்த வரலாற்றைக் குமரனாரிடம் வில்லவன் கூறினான் அவரும் மாதவனுக்குக் கல்வி கற்றுத்தர மகிழ்வுடன் ஒப்பினார்.

**9. உயர்நல ஞானம் உணர்த்திய காதை:-**

செந்தமிழ்க் குமரனார் மாதவனுக்கு ஞானச்சிறப்பு, கற்றோர் சிறப்பு, ஞானம் பெறுதற்குரிய வழிகள், தமிழ்மொழியின் சீர்மை, தோன்றிய வரலாறு, தமிழகத்தின் சிறப்பு, தமிழர்களின் பண்பு ஆகியவற்றை ஐயமறக் கற்றுக் கொடுத்தார். மாதவன் கற்பவை கசடறக் கற்றுச் சிறப்புற்று விளங்கினான்.

**10. புத்தரின் நல்லறம் புகட்டிய காதை:-**

நல்லறம் நாட்டும் மேகலை வில்லவனைக் கண்டு மாதவனை அழைக்கப் பணித்தாள். ஆசை, ஆசை அவித்தல், துக்கமேற்றல், துக்க நிவர்த்தி என்ற நான்கு உண்மைகளையும் புத்தம், சங்கம், தம்மம், என்னும் முத்திற மணியின் சிறப்பினையும் மாதவனுக்கு விளக்கினாள். பசித்தோர்க்குதவுதல் பேரறமென்றும் அதுவே தருமச் செவ்வழி என்றும் எடுத்துரைத்து இவற்றை நெஞ்சில் கொண்டு இனிது வாழுமாறு வாழ்த்தினாள்.

**11. கன்னிதன் துயரம் களைந்த காதை:-**

தருமச் செவ்வழியில் தலைநின்று ஒழுகும் மெய்த்தவமாந்தா் வாழ்கின்ற காஞ்சியில் பொய்த்தவம் பூண்ட சிலரும் வாழ்ந்தனா். மக்களை ஏமாற்றிப் பொருள் பறிக்கும் அவா்கள், மேகலையை மகப்பெற்ற தாய் எனவும் மாயத்திறமுளாள் எனவும் தூற்றினா். அவற்றையெல்லாம் மனங்கொள்ளாத மேகலை புண்ணியம் செய்தலே புத்தன் விழைந்த நெறியெனப் போற்றி அவா்களையும் நல்லாற்றுப்படுத்தினாள்.

**12. அமுதசுரபியை அகற்றிய காதை:-**

காஞ்சியிலும், சுற்றுப்புறத்திலும் பசியால் கவலலுற்ற மக்களுக்கு அமுதசுரபியின்வழி உணவளித்துக் கருணை செய்து வரும் மேகலையின் தவநெறியைப் பழித்து வந்த தருக்கா்கள் வஞ்சக எண்ணங் கொண்டு மணிமேகலையொடு வாதிட்டனா். வாதிட்டவா்க்கு மேகலை அறிவுரை வழங்கினாள். அதனை ஏலாத அக்கயவா்கள் அமுதசுரபியைக் கவர எண்ணிச் சூழ்ச்சி செய்து கள்வா் மூலம் இரவில் அவள் அறியாதவாறு அதனைக் கவா்ந்து வரச் செய்தனா். பாத்திரங் காணாத மேகலை வருந்திப் பாத்திரம் மறைந்த மாயம் அறியாது பசித்தோா்க்குதவ முடியாத நிலையை எண்ணி மயங்கினாள்.

**13. பாவை அறவணா்பாற் செல் காதை:-**

பாத்திரங் கவா்ந்த கள்வா் அதனை ஏவியோா் பால் கொடுத்து அத்தொழில் செய்தமைக்கான பொருள் பெற்றுச் சென்றனா். பாத்திரங் காணாத மேகலை அறவோரிடம் சென்று முறையிட்டனள். அவா்கள் ஆறுதல் கூறினா். பசித்தோா்க்குதவும் பணி நின்றது குறித்து வருந்துவதாகக் கூறிய மேகலை இத்திறம் அறிய அறவணா்பால் செல்வேன் என அங்கிருந்தகன்று அவா் வாழும் பள்ளி போந்தாள்.

**14. பாத்திரம் வருமெனப் பகர்ந்த காதை:-**

அறவணரைக் கண்ட மேகலை அவர் பாதம் பணிந்தாள். அவளை வாழ்த்திய அறவணர் அவளது துன்பத்திற்கான காரணத்தை வினவினார். பசித்தார்க்கு உதவும் பாத்திரம் காணாத தன்மையை மேகலை கூறினாள். வருந்த வேண்டாம் என அவளைத் தேற்றிய அறவணர், அப்பாத்திரம் கயவர் கைப்படின் ஏதும் எய்திடாத் தன்மையதாகும் என்றும் இரண்டொரு நாளில் அப்பாத்திரம் அவள் கை மீளும் எனவும் கூறினார். வருத்தம் நீங்கிய மேகலை தன் தவப்பள்ளி சேர்ந்தாள்.

**15. இல்லாப் பழியை இயம்பிய காதை:-**

அறவணர் அருளுரை கேட்ட மேகலை, ஆயர்பாடி வந்து மாதவனுக்கு அருளாசி வழங்கினாள். பாத்திரம் மறைந்த நிலையைக் கூறினாள். அவளை மகப்பேறு பெற்றவள் என அங்குள்ள கயவர்கள் மீண்டும் இழித்தும் பழித்தும் பேசினர். பாத்திரம் போன துன்பத்தோடு இவர்கள் பழியும் இன்று சேர்ந்ததே என்றவள் சிந்தை மெலிந்தாள். பின் தெளிந்து அறத்தை நெஞ்சில் போற்றித் தவப்பள்ளி நோக்கி நடந்தாள்.

**16. கவலுறு மாந்தரைக் கண்ட காதை:-**

வயிற்றுப்பசி வாட்டிட வருந்திய மக்கள், மேகலை அப்பசி ஆற்றுவாள் எனக் கருதி வந்தனர். பசித்தோரின் அவலக்குரல் மேகலையைத் தீப்போல் சுட்டது. பசி போக்கும் பாத்திரம் காணாததை அவர்களிடம் அயர்ந்து கூறினாள். இந்நிலையில் மேகலை பால் வசை பல கூறி அங்கு வந்த கயவரை மக்கள் எதிர்த்து விரட்டினர்.

**17. பாத்திரம் மீளப் பார்த்த காதை:-**

பாத்திரங் கவர்ந்த கயவர் அதனுள் கைவிட்டு அள்ளக் கருதினர். அதனுள் ஒன்றும் தோன்றா நிலை கண்டு களிப்பு மாறி இன்னலுற்றனர்.

பாத்திரத்தை மேகலை அறியாதவாறு இரவில் அவள்பால் வைத்து மீண்டனர். பாத்திரங் கண்ட மேகலை, அறவணரின் அருளுரையை எண்ணி அகங்களித்து, பசித்தோர்க்குதவும் பேரறம் இனித் தொடரும் என மகிழ்ந்தாள்.

**18. காமம் கால் கொண்ட காதை:-**

மேகலை பசித்தோர்க்குதவி செய்து வரும் நாளில் கோவலர் குடிக்கண் வளர்ந்த மாதவனின் அழகு கண்டு, நம்பிக்கும், பத்திரைக்கும் பிறந்த நல்லெழில் வாய்ந்த அன்னம் என்பாள் அவன் மீது காதல் கொண்டு உள்ளம் வாடினாள், வண்டு, பூ, தென்றல், புள், நிலவு, குயில், ஆகியவற்றோடு புலம்பி மெல்லணை பொருந்தாது வருந்தினாள்.

**19. மாதவன் மயங்கிய காதை:-**

அறவழி வளர்ந்து வந்த மாதவன் ஆற்றுக்காட்சி கண்டவாறு வருங்கால், அன்னத்தைக் கண்டு அவள் மேல் காதல் கொண்டு அவளது நலமெலாம் புனைந்துரைத்தான்.

**20. மாதவன் மணம்பெற மணங்கொள் காதை:-**

ஆறு, சோலை, பொழில் ஆகிய இடங்களில் எல்லாம் மாதவனும், அன்னமும் சந்தித்து மகிழ்ந்தனர். காதல் கைம்மிக மாதவன் செய்பணி மறந்தான். மாதவனின் வாட்டம் கண்டு அவனை ஆய்ந்த வில்லன் அவன் அன்னத்தின் பால் காதல் கொண்ட செய்தியைக் கோதையிடம் கூறி மணிமேகலையின் மனக்கருத்தறியாமல் ஏதும் செய்யக் கூடாதென இயம்பினான். மேகலை இதை மறுத்துரையாள் எனக்கோதை கூற அன்னத்தை மாதவனுக்கு மணம் செய்யக் கருதி வில்லவன் ஏற்றன செய்யத் தொடங்கினான்.

**21. அன்னம் செய்தி அறிவித்த காதை:-**

மாதவனைச் சந்திக்க வந்த அன்னம் குலமறியா ஒருவனை மணத்தல் முறையன்று எனத் தந்தை நம்பி கூறியவற்றை எடுத்துரைத்தாள். தந்தை, தாய் முடிவை எதிர்த்து அவனை மணப்பதாகக் கூறிச் சென்றாள்.

**22. மகள் தர நம்பி மறுத்த காதை-**

வில்லவன் மாதவனுக்கு மணம் செய்தற்கான செயலில் ஈடுபட்டகாலை மேகலை அங்கு வர வில்லவன் வணங்கி மாதவனுக்கு மணம் பேசப் பெரியவர் சென்றுள்ளார் என்றான். பேசச் சென்றவர் மீள வந்து அன்னத்தின் தந்தை நம்பி, குலம் காட்டி மகட்கொடை மறுத்ததை எடுத்துரைத்தார். வில்லவனும், கோதையும் வருந்தியதைக் கண்ட மேகலை, மாதவன் வாழ்வில் பெரும்பயன் வர இருப்பதால் இம் மணம் தடைப்பட்டதாக ஆறுதல் கூறினாள். இருவரும் துயரொழிந்து மகிழ்ந்தனர்.

**23. அன்னத்தை அரவு தீண்டிய காதை:-**

நம்பி மகள் தர மறுத்தமையை அறிந்த அன்னம் துயரத்தில் மூழ்கினாள், மாதவனே மணாளன் என்னும் தன் உள்ள உறுதியை அவனிடம் கூற எண்ணிச் சோலைக்குச் சென்றாள். அவன் வருகையை எதிர்பார்த்து மல்லிகைப் பந்தருக்கு அருகிருந்த மேடை ஒன்றில் அமர்ந்த அவளை அரவமொன்று உயிர் போகத் தீண்டிற்று. நஞ்சு தலைக்கொண்டு அன்னம் உயிர் விடுத்தாள். அங்கு வந்த மாதவன் அன்னம் இறந்தமை கண்டு மயங்கி வீழ்ந்தான்.

**24. மாதவன் புலம்பி மயங்கிய காதை:-**

மயக்கம் நீங்கி எழுந்த மாதவன் துயரத்தீ நெஞ்சினைச் சுடப் பித்தன் போற் கலங்கினான். இறந்த அன்னத்தை அவள் பெற்றோர் அழலிடைச் சேர்க்க எடுத்துச் சென்றனர். அன்னத்தை இழந்த மாதவன் ஆற்றொணாத் துயரால் பலவாறு புலம்பி அழுதான்; உடல் இளைத்தான்.

**25. மாதவனை அறவணர் பால் உய்த்த காதை:-**

அன்னத்தை இழந்த மாதவன் துன்ப வடிவானான். அன்னத்தின் இறப்பினை எண்ணி வருந்திய மாதவனை மணிமேகலை அறவணர் பால் ஆற்றுப்படுத்தினாள். அறவணர், மணிமேகலையிடம் மாதவனைத் தாம் நன்னெறியில் செலுத்துவதாகக் கூறினர்.

**26. அறவணர் அல்லல் அகற்றிய காதை:-**

அறவணர் மாதவனுக்குப் புத்தரின் வரலாற்றை எடுத்துரைத்தார். இன்பதுன்பம் இணைந்திருப்பது தான் மனித வாழ்வு என்பதனை உணர்த்தினார். மேகலைக்குப் பின் பசிப்பிணி அறுக்கும் பேரறம் மாதவன் வாயிலாகவே நிகழுமென உரைத்து, மாதவனது பழம்பிறப்பினைக் கூறத் தொடங்கினார்.

**27. மாதவன் பழம்பிறப்புணர்த்திய காதை:-**

காசி வாழ் அந்தணன் அபஞ்சிகன் மனைவி சாலினி கற்பை இழந்த துயர் நீங்க தென்திசைக் குமரியில் நீராடப் போந்தாள். வழியிடைக் குழந்தை பெற்று அங்குள்ள சோலையில் விட்டுச் சென்றாள். அழும் குழந்தையை ஆவொன்று காப்பாற்றியது. வயனங்கோட்டில் வாழும் இளம்பூதி என்பான் மனைவியொடு கடவுளை வணங்க வருங்கால் குழந்தையைக் கண்டெடுத்து ஆபுத்திரன் எனப் பெயரிட்டு வளர்த்தான். அந்தணர் இல்லத்தில் வளர்ந்த அவன், அந்தணர்கள் வேள்விக்கென வைத்திருந்த பசுவைப் போக்கியமையால், சினமுற்ற அந்தணர்கள் இளம்பூதியிடம் கூறி ஆபுத்திரனை வீட்டை விட்டுத் தூரத்தினர். பிச்சையேற்ற அவனது பிச்சைப் பாத்திரத்தில் கல்லும், மண்ணும் கலந்து இட்டனர். ஆபுத்திரன் மதுரை சென்று பிச்சையேற்றுத் தானும் உண்டு பசித்தோர்க்கும் உதவினான். இதனால் மகிழ்ந்த சிந்தாதேவி அள்ளக் குறையா அடிசில் வழங்கும் அமுதசுரபியை அளித்தாள். அதன் மூலம் அவன் உணவளித்தான். இந்திரனால் மதுரையில் பஞ்சம் நீங்கிடச் சாவக நாட்டிலுள்ளோர் பஞ்சத்தால் வாடுதலறிந்து

கலமேறிய ஆபுத்திரன் மணிபல்லவம் சேர்ந்தான். யாருமற்ற அவ்விடத்தில் பாத்திரம் பயன்படாமை கண்டு கோமுகிப் பொய்கையுள் இட்டு அறநெஞ்சுடையார் பாற்சேர்க எனக் கூறி உயிர் துறந்தான். புகாரிலிருந்து மணிமேகலா தெய்வத்தால் அங்கு கொண்டு வரப்பட்ட மணிமேகலையிடம் அப்பாத்திரம் சேர்ந்தது. தனக்குப் பின்னும் அவ்வறம் தொடர வேண்டும் என்னும் மேகலையின் வேண்டுதலால் சாவக நாட்டில் புண்ணியராசனாய்ப் பிறப்பெடுத்த ஆபுத்திரன் இப்பிறப்பில் மாதவன் வடிவில் உள்ளதாக மாதவனுக்கு எடுத்துரைத்த அறவணர், மேகலையின் கையிலிருக்கும் அமுதசுரபியை மாதவனிடம் அடைக்கலப்படுத்தினார்; மாதவன் அமுதசுரபியை மகிழ்வுடன் ஏற்றான்.

**28. அறவணர் மேகலைக் கறிவித்த காதை:-**

உலகோர் பசிநீக்கும் பணியை உயிர்ப்பணியாகக் கொள்வதாக அறவணரிடம் உறுதி கூறிய மாதவன், கண்ணிய வழியிற் புண்ணிய ராசனாய்ப் பிறந்த போது வராத பாத்திரம் மறுமுறை அல்வழிப் பிறந்த காலை தன் கை சேர்ந்தது ஏன் என வினவினான் அதற்கு அறவணர் பிறப்பில் உயர்வு தாழ்வில்லை என அவனுக்கு உணர்த்தினார். பின் மேகலையை நோக்கிப் புத்தர் பிறந்த விசாக முழுமதியில் முத்தி பெறுவாய் என உரைத்தார். இதனைக் கேட்ட மேகலை மகிழ்ந்து தவப்பள்ளி சேர்ந்தாள்.

29. **மேகலை முக்தி மேவிய காதை:-**

துறவு பூண்ட மாதவன் இல்லம் அடைந்து வில்லவனிடமும், கோதையிடமும் நடந்தன கூறினான். மணிமேகலை முக்தி பெறும்நாளும் உரைத்தான். அதுபோலவே விசாக முழுமதி நாளில் போதியின் கீழ் வீற்றிருந்த அவள் சென்னியில் அறவணர் நீர் தெளிக்க மேகலையின் ஆவி, ஒளி வடிவில் வானாடு சென்றது. மக்கள் அவலம் தாங்காது புலம்பினர். மரங்களும், செடிகளும் புலம்பின. பின் மணிமேகலையின் உடலை அகிலும், சந்தனமும்

விரவிய குழிக்கண் இட்டுச் சேமஞ் செய்து மேடை எழுப்பினா். மக்கள் அவளை வணங்கி மீண்டனா். மணிமேகலை செய்து வந்த அறத்தை மாதவன் செய்யப் புறப்பட்டான் பசித்தோரை அழைத்து உணவிட்டுப் பாா் வாழ உதவினான்.

**காப்பியப் பாயிரம்:-**

பண்டைத் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களுக்கு அமைந்துள்ள பாயிரம் போன்று இக்காப்பியத்திற்கான பாயிரத்தை மீனவன் அவா்கள் அமைத்துள்ளாா். காப்பியப் பாயிரம் குறித்து,

**“முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன்முகம்**
**புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்”**[3]

என்கிறது நன்னூல். மேலும் பாயிரத்தில் இடம் பெறும் செய்திகள் குறித்து,

**“நூலே நுவல்வோன் நுவலுந் திறனே**
**கொள்வோன், கோடல், கூற்றாம் ஐந்தும்**
**எல்லா நூற்கும் இவை பொதுப் பாயிரம்”**[4]

என உரைக்கும்.

சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இரு காப்பியங்களிற் காணப்படும் பதிகங்கள் அவ்வக்காப்பியப் பொருள் பற்றிச் சுருங்க உரைக்கின்றன. சீவகசிந்தாமணியில் உள்ள பதிகமும் இவ்வாறே காப்பியப் பொருளின் சுருக்கத்தைத் தருகிறது. எனவே பாயிரப் பகுதியில் அல்லது பதிகத்தில் காப்பியப் பொருளின் சுருக்கத்தைக் கூறும் மரபினை மீனவன் அவா்களும் அமைத்துள்ளாா். காப்பியத்தில் இடம்பெறும் காதைகளை மீனவன் அவா்கள்,

**“…………கச்சிகாண் காதையும், ககன சாரிகள்**
**அறவோா் உணர அவள் வரலாற்றை**
**உரைத்த காதையும் உயா் பேருலகிற்**
**பசித்தாா்க் குதவப் பாவை செல் காதையும்**

..........................................

**தாய்நிகர் மேகலை தன் கைப் பாத்திரம்**

**பெற்ற மாதவன் பெருநிலம் பேண**

**மேகலை முத்தி மேவிய காதையும்**

**ஆக இவ்வணம் ஆறைந் தாகத்....”      (மாதவ.மே.100-104)**

என அமைந்துள்ளார். இப்பதிகத்தில் அவையடக்கமும் அமையப் பெற்றுள்ளது. **‘அவையடக்கம்’** என்னும் பாயிரக் கூறு எடுத்துக் கொண்ட கதைப் பொருளின் பெருமையையும், அவையோரின் உயர்வையும் குறிப்பிட்டுக் கவிஞன் தன் பெருமையைக் கூறுவதாய் அமையும் இம்முறையில் மீனவன் தாம் யார் எனத் துணிந்து கூறி, நூல் வெளிவர உதவிய நெஞ்சங்களையும், நூலாக்கம் பெற வித்திட்ட உள்ளங்களையும் பதிகத்தில் சுட்டிக் காட்டுகிறார்.

**“வழுதியார் ஆண்ட பாண்டிய நாட்டைச்**
**சார்ந்துறு பசும்பொன் சார்ந்த மாவட்டக்**
**கண்டர மாணிக்கக் கவின்பதிப் பிறந்தோன்**
**உம்பர்நா டிருக்கும் உயரமு தொப்பக்**
**கவிதை பாடிய கம்பர் தம் பெயரால்**
**உள்ளுறு சந்தத் தொண்கவி சேர்ந்த**
**பிள்ளைத் தமிழ் நூல் பெட்புறப் பாடி**
**ஆயிரம் பரிசென அடைந்த நற் கவிஞர்**
**தூய நற் கவிதை துலங்குபல் லரங்கில்**
**ஆய கவிதை யார்க்கு நற் புலவன்**
**மீனவன் பாட மேல்வகை செய்து**
**நெறிதந் துதவிய தமிழ்நெஞ் சுடையார்**
**நாளும் உயரும் நற்பே ராசான்**
**கலைமா மணியெனக் கற்றோர் போற்றும்**
**பல்கலை கண்ட அண்ணா மலையார்**
**வளர்ந்த கழகம் வளர் தமிழ்த் துறையின்**

**தலைவர் மேன்மைத் தமிழ்ச் சுரங்கத்தின்**

**தலைவரான தண்டமிழ் வாணர்**

**…………………………………….**

**…………………………………….**

**ஆ(று) அழகப்பன் அளித்தனன் நூலென்'' (மாதவ.மே.பதி.109-134)**

வழுதி என்னும் பட்டப் பெயரைப் பெற்ற பாண்டிய மன்னர்களின் ஆட்சிக்குட்பட்ட பசும்பொன் மாவட்டத்தைச் சார்ந்த கண்டரமாணிக்கத்தில் பிறந்த மீனவன், அமுதொத்த கவிதை எழுத வல்ல கம்பனின் பெயரால் பிள்ளைத்தமிழ் பாடி ஆயிரம் பணம் பரிசு பெற்ற நல்ல கவிஞர். இவர்தம் மாதவமேகலை என்னும் நூலை வெளியிட, அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர், கலைமாமணி ஆறு அழகப்பன் அவர்கள் உதவியுள்ளார் என்பது அவையடக்கத்தில் இருந்து பெறப்படுகிறது.

**வாழ்த்துப் பாயிரம்:-**

பாயிரம் அல்லது பனுவல் அன்று என்பது தமிழ்மரபு. அதிலும், வாழ்த்துப் பாயிரம் இல்லாத பனுவல் இல்லை எனலாம். பொதுவாக, வாழ்த்துப் பாயிரம் கடவுளை முன்னிறுத்திப் பரவுதலாக அமையும். காப்பியப் புலவர்கள் பலரும் இம்முறையினைப் பின்பற்றி உள்ளதனைக் காணமுடிகிறது.

"தமிழ்க் காப்பிய மரபில் சிலப்பதிகாரம் ஞாயிறு, திங்கள், மழை, பெருநகர் ஆகிய இயற்கைப் பொருள்களை வாழ்த்துகிறது. மணிமேகலையில் வாழ்த்துப்பகுதி என்பது இடம்பெறவில்லை. பெருங்கதையில் முற்பகுதி கிடைக்காமையால் அதன் அமைப்பினை அறிய வாய்ப்பில்லை. சமணக் காப்பியங்களான சிந்தாமணியிலும் சூளாமணியிலும் தான் முதன் முதலாகச் சமயக் கடவுள் வாழ்த்து இடம் பெறுகிறது. இவற்றின் பின்னர்த் தோன்றிய கம்பரது காப்பியமும் சமயக் கடவுளைப் பரவுகிறது"[5]

மீனவனுடைய கடவுள் வாழ்த்து இம்மரபினின்று வேறுபட்டதாய் உள்ளது. அவர் தலைமை சான்ற இறைவனை, அகிலம் போற்றும் இயற்கையை வாழ்த்தவில்லை. மாறாகத் தாயாய் அமைந்த தமிழ்மொழியை வாழ்த்துகிறார்.

பொதிய மலையில் பிறந்து, நீர்வளம் கொண்ட சோழநாட்டிலும் பாண்டிய நாட்டிலும் உள்ள புலவர்களின் அகத்தில் நடனமிட்ட தமிழன்னை சேரநாட்டுப் புலவர்களின் வாழ்விற்கும் வளமளித்து தமிழகத்தை ஆண்ட முடிகெழு மூவேந்தர்க்கும் மகளாய்த் திகழ்ந்தாள். கற்றவரின் பெருஞ் செல்வமாய், தமிழர் கலையின் தாயகமாய், துறவிக்கும் பாசம் ஏற்படச்செய்யும் பாவாய், அமுத ஊற்றெடுக்கும் சொல் வளமும் கொண்ட தமிழ் அனைவரின் வாழ்வையும் உய்விக்க வல்லது. இத்தகைய தமிழை, முற்றாத இளமயிலை, மொழிகளுக்கெல்லாம் மூத்தவளை வாழ்த்தி வணங்கியுள்ளார்.

**“பொதிய மெனும் மலைப்பிறந்தாய்! புனல்கொ ழித்த**
**பொன்னியிலும் நீ நடந்தாய்! தமிழ் மணக்கும்**
**நதி வைகைக் கரையினிலும் நடன மிட்டாய்!**
**நற்புலவர் அகமிருந்தாய் புறத்துச் சென்று**
**பதிசிறந்த வஞ்சியிலும் பாட நின்றாய்!**
**பாவலர்க்கும் படியளந்தாய்! பாரை யாண்ட**
**மதிமன்னர் மூவருக்கும் மகளே யானாய்**
**கற்றவர் தம் பெருந்தனமே! தமிழர் நாட்டுக்**
**கலைகட்குத் தாயகமே! ஆசை விட்டும்**
**பற்றறுத்த துறவியர்க்கும் பாவாய் நின்று**
**பாசத்தைப் பொழிந்தவளே! அமுத ஊற்றாம்**
**வற்றாத சொல்வளமே! எம்மை எல்லாம்**

**வாழ்விக்கும் தெய்வதமே! வாழ்க! வாழ்க!**

**முற்றாத இளமயிலே! மொழிக ளுக்குள்**

**மூத்தவளே! வணக்கம் யான் மொழிகின்றேனே!**

**(மாதவ.மே.1-41-47-10)**

எனத் தன்னை உயர்த்திய தமிழ்மொழியைப் பரவியுள்ளார். சமயச் சார்புடைய கவிஞர்கள் தத்தம் வழிபடு கடவுளரைப் போற்றுவது வழக்கம் எனினும் ஒரு சமயத்திற்குரியார் பிறிதொரு கடவுளுக்குரிய பொருள் பற்றிப் பாடுமிடத்துத் தம் வழிபடு கடவுளை விடுத்து எடுத்துக் கொண்ட பொருளுக்குரிய ஏற்புடைக் கடவுளை வாழ்த்துவதும் உண்டு; மீனவன் எச்சமயத்திற்கும் கடவுள்கட்கும் இடம் தரவில்லை. மாறாகத் தாய்மொழியான தமிழ்மொழியைத் தன் காப்பியத்திற்குரிய கடவுளாய்ச் சுட்டி வாழ்த்தியுள்ளார். பதிகத்தில், மரபு மாறாத்தன்மையையும் வாழ்த்துப் பாயிரத்தில் புதுமையையும் புகுத்தியுள்ளமை குறிக்கத்தக்கது.

**மாதவமேகலை பெயர்ப் பொருத்தம்:-**

காப்பியங்கட்குப் பெயரிடும் முறை குறித்து “உலக மொழிகளில் காப்பியங்கள், கதைத் தலைவன் அல்லது கதைத் தலைவியின் பெயரைப் படைப்புகளுக்குப் பெயராகச் சூட்டுவதை மரபாகக் கொண்டு விளங்கின. யுலிசஸ், இலியட், சாகுந்தலம் போன்ற காப்பியங்கள் இதற்குச் சான்றாகும்”[6] என்பர். தமிழிலும் காப்பியங்கள் அவ்வகைத்தனவாகவே பெயர் பெற்றன. இம்மரபினை மாற்றி ஓர் அஃறிணைப் பொருளின் பெயரைத் தலைப்பாகச் சூட்டிக் கொண்ட மாபெரும் படைப்பு சிலப்பதிகாரம் ஆகும்.

**மாதவனும் மேகலையும்:-**

மாதவமேகலை மேகலையால் கண்டெடுக்கப்பட்ட மாதவன் பற்றியது. மணிமேகலைக் காப்பியத்தில் அமுதசுரபி கொண்டு அறம் வளர்த்த ஆபுத்திரனின்

இரண்டாம் பிறப்பு மாதவன். மணிமேகலையில் அறத்திற்கு ஊறு வந்த போது ஆருயிர் நீத்த ஆபுத்திரன் தன்னைக் காத்த நற்பசுவின் வயிற்றில் தோன்றிச் சாவக வேந்தனின் மகனாக வளர்க்கப்பட்டான் என்னும் சிறு குறிப்பினைக் கொண்டு ஆபுத்திரன் மீண்டும் பிறப்பெடுத்து மாதவனாய் வளர்ந்து மணிமேகலையால் சீரிய வாழ்வு பெற்றான் என்னும் கதையமைப்பைக் கொண்டது மாதவமேகலை. மாதவனின் வாழ்வைக் கருவாகக் கொண்ட இக்காப்பியத்தில் மணிமேகலையின் வாழ்வு நிறைவு பெறுகிறது. மேலும், மாதவமேகலையில் மாதவன், மணிமேகலை ஆகிய இருவருமே தலைமைப் பாத்திரங்களாகக் கொள்ளத்தக்கவர்கள். மாதவனும், மேகலையும் என உம்மைத் தொகையால் இக்காப்பியம் பெயர் பெற்றுள்ளது எனப் பொருள் கொள்ள இயலும்.

மாதவ மேகலையைத் கதைத் தலைவியின் பெயரால் அமையும் மரபு மாறாப் பெயர் கொண்ட காப்பியமாகக் கருத இடமுளது மாதவமேகலையில் இரு தலைமைப் பாத்திரங்கள் என்பது போல் காணப்பட்டாலும் காப்பியப் போக்கில் மணிமேகலை பேரிடம் பெறுகின்றாள். அவளின் அறத்திறமும் தவத்திறமும் முதன்மைப்படுத்தப்பட்டுள்ளன.

**“மாறா அறஞ்செய் மணிமேகலை” (மாதவ.மே 1:64)**

**“தகைசால் அறஞ்செய் தகைமிகு தையல்”(மாதவ.மே. 2:12)**

**“அல்லல் தீர்க்கும் அருளுடை மேகலை” (மாதவ.மே.3:12)**

**“மாதவத் தரசி மணிமேகலை யிவள்” (மாதவ.மே.9:3)**

**“தெய்வச் சேயிழை திருத்தவ மேகலை” (மாதவ.மே 6:12)**

என்று காப்பியத்துள் வரும் பல தொடர்கள் அவளின் மாண்பைப் பறை சாற்றுகின்றன. மேலும் மணிமேகலையை ஆசிரியர் பலவிடங்களில் மாதவத்துறவி, மாதவச் செல்வி, மாதவத்தாட்டி என்று குறிக்கின்றார். எனவே மாதவம் பூண்ட

மணிமேகலை எனப் பெயர் கொள்ளலாம், மேலும் மாதவி பெற்ற மேகலையாதலால் மாதவமேகலை எனப் பல்வேறு பொருள் கொள்ள இடமளிக்கிறது.

**காப்பிய மாந்தர்கள்:-**

மனிதனின் செயல்பாடுகள் தாம் இலக்கியங்களாகப் படைக்கப்படுகின்றன. இச்செயல்பாடுகளை வெளிப்படுத்துகின்ற கருவியாக மாந்தர்களைப் பயன்படுத்த வேண்டியிருக்கிறது. இவ்வாறு பயன்படுத்தும் போது "படைப்பின் சிக்கலான பன்முக வளர்ச்சியினால் கதை மாந்தர்களே செயல்பாடுகளை நடத்திச் செல்கிற முதல்வர்களாக ஒரு கட்டத்தில் வளர்ந்து விடுகிறார்கள்."[7] எந்த ஒரு படைப்பும் சிறப்புப் பெறுவதற்கான காரணங்களில் ஒன்று, அக்காப்பியத்தில் படைக்கப் பெற்றிருக்கும் கதை மாந்தர்கள் ஆவர்.

காப்பியத்துள் இடம்பெறும் கதை மாந்தர்களை அவர்தம் பங்கை அடிப்படையாகக் கொண்டு இரு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று முதன்மை மாந்தர்கள் மற்றொன்று துணைமை மாந்தர்கள்.

**மாந்தர்களின் வகைப்பாடு:-**

பால் அடிப்படையில் மாந்தர்களைப் பாகுபடுத்துகின்ற பொழுது ஆண் மாந்தர்கள், பெண் மாந்தர்கள் எனப் பகுப்பர். இக்காப்பியத்தில் இடம் பெறும் ஆண், பெண் மாந்தர்களை மூன்று வகையாகப் பகுக்க இயலும்.

1. **தலைமை மாந்தர்**
2. **எதிர்த்தலைமை மாந்தர்**
3. **துணைமை மாந்தர்**

**தலைமை மாந்தர்:-**

தலைமை மாந்தர் படைப்பு முழுவதும் நிறைந்து நிற்றல் வேண்டும் அறிமுகப்படுத்தும் நிலையிலிருந்து வளர்ச்சி பெற்று முழுமை நிலை அடைதல் வேண்டும், அவ்வகையில் மாதவ மேகலையின் ஆண் தலைமை மாந்தராக மாதவனும், பெண் தலைமை மாந்தராக மணிமேகலையும் விளங்குகின்றனர்.

**மணிமேகலை:-**

மக்கட் சமுதாயத்தை அல்வழி நீக்கி நல்வழிப்படுத்த எழுந்த ஒரு சீர்திருத்தக் காவியம் சாத்தனாரின் மணிமேகலை. இதில் காணப்படும் மேகலை, இளங்கன்னியாய் உதயகுமரனோடு போராடினாலும் துறவு நெறியின் பால் உள்ள உறுதியினளாய்க் காணப்படுகின்றாள். மாதவமேகலையின் மணிமேகலை தாயன்போடு காணப்படுகிறாள். பசித்தோர்க்கு உதவுவதோடன்றி மாதவனை அவள் பேணும் முறையில் தாயன்பு மேலிடுகிறது.

**“இருகால் உதறி இணைந்தழு மகவின்**
**திருமுகம் நோக்குத் தேற்றாத் துன்பம்**
**ஊற்றாய்ப் பெருக உலகை நடத்தும்**
**மாற்றா விதியின் மாவலி எண்ணித்**
**தன்னிரு கரத்தால் தாமரைப் பூவென**
**மண்ணிற் கிடக்குமப் பிள்ளை மதியினை**
**எடுத்தவள் அணைத்தவா றேகினள்” (மாதவ.மே.5:3-97)**

என்பதில் இரு கால்களையும் உதறி அழும் குழந்தையின் முகத்தைக் கண்டு துன்பம் ஊற்றாய்ப் பெருகத் துடித்த மேகலை உலகத்து விதியை எண்ணியவாறு தாமரைப் பூவென இருந்த மென்மையான குழந்தையை ஆதரவாய்த்தூக்கி அணைத்தவாறு அங்கிருந்து சென்றதாக உரைக்கப்பெறுவது மேகலையின்

கருணைக்குச் சான்றாய் அமைகிறது. மாதவன், மேகலை ஈன்ற குழந்தை எனக் கயவர் சிலர் அவதூறு பேசும் பொழுதும் மன உறுதியோடு நின்று அவர்களையும் தன் அறத்திறத்தால் திருத்தும் மாண்புடையவளாய் மேகலை படைக்கப்பட்டுள்ளாள். அறிவுத்திறம், அனைத்து உயிர்கள் மாட்டும் அன்பு, மனஉறுதி, நெஞ்சுரம், கனிவு கொண்ட முதியள் என மேகலையின் பாத்திரம் விளங்குவது குறிப்பிடத்தக்கது.

**மாதவன்:-**

கன்னி ஒருத்தியின் மகவாய்ப் பிறந்து மணிமேகலையால் கண்டெடுக்கப்பட்டவன் மாதவன். பிள்ளையில்லாக் குறை கொண்ட ஆயர்குலத்தைச் சார்ந்த வில்லவனும், கோதையும் எழிலுற வளர்க்க இளங்காளை என வளர்ந்த மாதவன் உயர்நல ஞானத்தைக் கல்வியால் எய்தினான். செந்தமிழ்க் குமரனார் என்னும் தன் ஆசிரியர் உணர்த்திய பாடம் முழுமையும் குற்றமற மாதவன் கற்றான் என்பதை,

**“ஆசான் குமரன் உணர்த்திய அறிவின்**
**எல்லைகள் முற்றும் இனிதின் உணர்ந்து**
**தொல்லைகள் நீக்குமத் தூயபே ரறிவை**
**முற்றிறம் உணர்ந்து முதிர்ந்த நல் ஞானம்**
**உற்றமா தவன் …………….. “ (மாதவ.மே.9:143-147)**

என்னும் அடிகள் உணர்த்தும். பருவ வயதில் அன்னத்தின் பால் காதற் கொண்டு அவள் இறந்த பின் துன்பமெய்தி, அறவணர் பழம்பிறப்புணர்த்திய பின் உண்மையான இன்பம் எது என உணர்ந்து செயலாற்றுவதாய்ப் படைக்கப்பட்டுள்ளான். வில்லவன் செல்வனாய் வளர்ந்த மாதவன் கலைமகளின் அருள்மட்டுமன்றி மலைமகளின் மேன்மையும் பெற்று வீரத்தொடு விளங்கியதை.

**“வில்லவன் செல்வன் வீரமும் உணர்ந்து**

**பலபடப் போற்றினர் பாடவன் அடைந்த**

**கயவரும் அவனைக் காண்குறு பொழுதெலாம்**

**புயவலி உணர்ந்தும் புன்சொல் கூறா**

**திருந்தினர் போற்றியும் நின்றனர்…”** (மாதவ.மே11:83-86)

என்னும் அடிகள் விளக்கும்.

வீரத்தில் செழித்திருந்த மாதவனின் வீரத்தைப் பலரும் போற்றினர். கயவர்கள் அவனைக் காணும் போதெல்லாம் அவனது புயவலிமை உணர்ந்து தீயசொல் கூறாது, அவன் மேன்மை உணர்ந்து போற்றவும் செய்தனர். மணிமேகலையின் அறப்பணி மாதவன் வாயிலாகத் தொடர வேண்டும் என்பதால் மாதவன் உயர்நல ஞானம் கொண்டு தன்னிலை உணர்ந்து செயல்படும் பேராண்மை மிக்கவனாய்க் காப்பிய ஆசிரியரால் படைக்கப்பட்டுள்ளான்.

**எதிர்த்தலைமை மாந்தர்:-**

தலைமை மாந்தர்களுக்கு முரண்பட்டுச் செயல்படும் தன்மை கொண்டவர் எதிர்த்தலைமை மாந்தர் ஆவர். இம்முரண்பாடு கதையில் விறுவிறுப்பு அமையக் காரணமாகிறது **“தலைமை மாந்தர்களுக்கு எதிரான செயல்களைச் செய்பவர் எதிர்நிலைத் தலைமை மாந்தர்கள்”**[8] என்பர். “ஒரு பொருளைத் தனித்து நோக்குவதிலும் மாறுபடும் பொருளோடு வைத்து நோக்கும் போது அதன் அழகு, கவர்ச்சி, பண்பு என அனைத்திலும் அது மேம்பட்டு நிற்பதைக் காண முடியும். வெறும் வெண்மையிலும் கருமையின் அருகே இருக்கும் வெண்மைக்குக் கவர்ச்சி அதிகம்”[9] என்பர். அது போல தலைமை மாந்தரின் பண்பு நலன் புலப்படுவதற்கு எதிர்த்தலைமை மாந்தரே பெரிதும் துணை நிற்பர்.

**நம்பி:**

மாதவமேகலையில் எதிர்த்தலைமை மாந்தராக அன்னத்தின் தந்தையான நம்பி விளங்குகிறார். காப்பியத்தின் போக்கு சரியான முறையில் அமைய இவரது பாத்திரப் படைப்பு பயன்பட்டுள்ளது. மாதவனுக்கு மணம் பேச வில்லவனும், கோதையும் பெரியவர் ஒருவரைத் தமது சார்பில் அன்னத்தின் தந்தையிடம் தூதாக அனுப்புகின்றனர், அவர்களிடம் நம்பி, வில்லவன் பெற்ற மகனா மாதவன்? எவரோ பெற்றவன்! எக்குடியோ? எம்மரபோ? என அறிவதற்கில்லை. எனவே மகவு தர முடியாது என மனம் வருந்தும்படிப் பேசி அனுப்பினான்.

**“போத்தநற் பெரியீர்! புகல்வன கேட்பீர்!**
**வில்லவன் கோதை விழைவோடு பெற்ற**
**நல்லசேய் மாதவ நம்பியா சொல்வீர்!**
**எவரோ ஈன்றனர் எடுத்து வளர்த்தனர்**
**உவகையில் அன்னாள் உயர்மணங் காண**
**நுங்களை அனுப்பினர் நோகும் என் மனம்**
**தந்தம் குடியா? நற்குல மரபா?**
**எக்குடிப் பிறந்தான் இவனென அறியோம்**
**தக்கோர் நீவிர் தருகெனக் கேட்பீர்!**
**தருகிலோம் நீவிர் சாற்றுவீர்**
**சென்றிடு வீரெனச் செப்புவோம் போவீர் (மாதவ.மே.23:40-50)**

என்னும் அடிகள் இதனை உணர்த்தும். அன்னத்தை மணங்கொள நினைத்த மாதவனின் எண்ணம் ஈடேறி இருப்பின் காப்பியக் கதை திசை மாறியிருக்கும். அவ்வாறு அன்றிக் குலம் காட்டி நம்பி மகவு தர மறுத்ததால் மட்டுமே காப்பியக்

குறிக்கோள் குறைவறச் சென்றுள்ளது எனின் நம்பியின் பாத்திரப்படைப்பு ஈண்டு இன்றியமையாததாகிறது.

**துணைமை மாந்தர்கள்:-**

துணைமை மாந்தர் என்பவர் தலைமை மாந்தர்க்கு வலுச்சேர்க்கும் வண்ணம் படைக்கப்படுபவர். காப்பிய வளர்ச்சிக்கும், திருப்பத்திற்கும் முடிவிற்கும், துணைமை மாந்தர்கள் பல வகையில் உதவுகின்றனர். சில துணைமை மாந்தர்கள் கதையில் பல இடங்களில் வருவதுண்டு. சில துணைமை மாந்தர்கள் ஒரு சில இடங்களில் மட்டும் வந்து விட்டுப் போவர். எனினும், தலைமை மாந்தர்கட்கு மறைமுகமாகவோ,நேரடியாகவோ உதவுபவர்களாகத் துணைமை மாந்தர் காணப்படுவர்.

“இவ்வுலகில் எந்த மனிதனும் தனித்து இயங்க இயலாது, பிறரோடு கலக்காமலோ, பிறரைப் பார்க்காமலோ? பிறரின் உதவியின்றியோ வாழ்வது இயலாது என்பர். அவ்வகையில் காப்பியமும் துணைமை மாந்தர்கள் இன்றிச் சிறப்புப் பெறுவதில்லை”[10]

‘‘தன்னிகரில்லாத் தலைவன் உடையதாகக் காப்பியம் அமைந்தாலும் அவனுக்கு உதவியாகப் பல ஊன்று பாத்திரங்களும் தேவைப்படுகின்றன’’[11]. அவ்வகையில் மாதவமேகலையில் அறவணா், அன்னம், வில்லவன், கோதை, செந்தமிழ்க்குமரனார், நம்பி, பத்திரை ஆகியோர் ஊன்று பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளனர்.

**அறவணா்:-**

மணிமேகலை மற்றும் மாதவனுக்கு அறம் உணர்த்தும் கதைமாந்தராக அறவணா் படைக்கப்பட்டுள்ளாா். மணிமேகலை பசி நீக்கும் பாத்திரங் காணாது வருந்தி அறவணரிடம் சென்று இதுபற்றி உரைக்கின்றாள். அதற்கு அறவணா்,

**“வருந்தேல் நங்காய்! வான்பொருள் அதுதான்**
**வருவதும் போவதும் வசம் நமக்கில்லை**
**உறுதுயர் வருங்கால் உள்ளம் தேறிப்**
**பெறுபயன் வருங்கால் போ தேற்று**
**வாழ்தல் என்பதே வல்லோர் கொள்கை**
**ஊழ்வினைச் செயலென உள்ளந் தெளிந்தினி**
**தவச்செய லாற்றியே தகுமுனக் கெனவே”  (மாதவ.மே.15:32-38)**

என ஆறுதல் உரைக்கிறார். இதனுள் அறவணரின் உலக ஞானம் புலப்படுகிறது. அன்னத்தின் இறப்பிற்குப் பின் கலங்கித் தவிக்கும் மாதவனை, அறவணரிடம் அழைத்துச் செல்கிறாள் மணிமேகலை. ஆங்கவர் “நிகழ்ந்தவை அனைத்தையும் அறிவேன். வாழ்வில் பொருந்தியவை எல்லாம் நற்பயன் தருவது மட்டும் அல்ல, துன்பமும் தோன்றக் கூடும். கல்லுக்கு இடையில் கசியும் நீர் போலச் சொல்லுதற்கு அரிய இன்பம் சில நாள் இருப்பது இயல்பு. வருவன எல்லாம் இன்பமாக மட்டும் இருக்க வேண்டும் என்பது பொருந்தாத கொள்கை. பூமியில் பிறந்த உயிர்கள் யாவும் ஒரு நாள் மடிவதென்பது உலகில் தொடர்ந்திடும் உண்மை. எல்லாம் தமக்கென இருப்போரால் உலகம் நிலைபெறுவதில்லை. உலகில் உள்ளவை அனைத்தும் மக்களின் வாழ்விற்கென என்னும் பெரியோர்களால் மட்டுமே இவ்வுலகம் நிலைத்து நிற்கிறது என நிலையாமைக் கருத்தினை விரிவாய்க்கூறி மாதவனை ஆற்றுப்படுத்துகிறார். ஆற்றுப்படுத்தும் அறவேந்தனைப் போல் அறவணரது பாத்திரம் காப்பியத்தில் மிளிர்கிறது.

**அன்னம்:-**

அன்னம் என்பவள் நம்பி, பத்திரை இணையரின் அன்பு மகள் ஆவாள். அழகு மிக்கவள். நடனம் போல் அமைந்த நடையும், வேல் போன்ற விழியும், நூல்

போன்ற மெல்லிய இடையும், ஒளி பொருந்திய மேனியும், தாமரை இதழ்களும், பத்தரை மாற்றுத் தங்கமென மிளிரும் மேனியும், மேகம் போன்ற கரிய கூந்தலும் கொண்டு பூ போன்ற மென்மையானவள். தன் மென்மையாலும், மேன்மையாலும் மாதவனின் உள்ளம் கவர்ந்தவள் ஆவாள். மகவு தரத் தந்தை மறுத்த போதும், உள்ளம் கொண்டவனைக் கைப்பிடித்தே தீருவேன் என்னும் அவளது உள்ள உறுதி மாதவன் மீது அவள் கொண்ட அளவிலாத அன்பைப் புலப்படுத்துகிறது. இறுதியில் அன்னம் அரவு தீண்டி இறக்கும் நிலை அவரைத் துன்பியல் மாந்தராக உணரச்செய்கிறது.

**வில்லவன் – கோதை :-**

மேகலையால் கண்டெடுக்கப்பட்ட மாதவன் நற்றிறத்துடன் வளரத் துணை புரிந்த அவளது வளர்ப்புப் பெற்றோர் வில்லவன், கோதை ஆகியோராவர்.

**“வள்ளல் மனம் போல் வளப்பால் சுரக்கக்**
**கொள்ளும் செல்வக் குடியெனத் திகழும்**
**ஆயர் குலத்திற் கருமருந் தானோன்**
**தூயபால் போலத் துலங்கிடு மனத்தன்**
**வில்லவன் என்பான் விளங்குவேற் கண்ணாள்**
**இல்லத் தரசி இனியவள் கோதை**
**அன்புடை யாளொடும் அகமதிந் தில்லறப்**
**பண்புடை வாழ்க்கை பயின்றிருந் தனனே” (மாதவ.மே6:27-34)**

என்னும் அடிகள் இவர்களது பண்பை விளக்கும். வள்ளலின் மனம் போல் வளமான பால்சுரக்கும் பசுக்களைக் கொண்ட செல்வக் குடியான ஆயர்குலத்தில், தூய்மையான பால் போன்ற கலங்கமற்ற மனம் கொண்டவனாய் விளங்குபவன்

வில்லவன். அவனது கண் போன்றவளாய் அமைந்தவள் அவனது இல்லத்தரசி கோதை. இல்லற வாழ்வைப் பண்புடையதாய் வாழும் இவர்களின் குறை மக்கட்பேறு இல்லாமை ஆகும். மேகலையிடமிருந்து மாதவனைப் பெற்ற வில்லவன் கோதை இணையர் அவனைத் தம் சொந்த மைந்தனைப் போல் எண்ணி வளர்த்தனர். அவனது பருவமறிந்து செய்வன செய்ததில் பெற்றோருக்குரிய இலக்கணத்திற்குப் பெரிதும் பொருத்தமுடையவராய் விளங்கினர்.

**செந்தமிழ்க் குமரனார்:-**

தலைமை மாந்தரான மாதவனின் வளர்ச்சிக்குத் துணை புரியும் மாந்தராய்ச் செந்தமிழ்க்குமரனார் சித்திரிக்கப்பட்டுள்ளார். செந்தமிழ்க் குமரனார், மாதவனுக்குக் கல்வி போதிக்கும் ஆசிரியர் ஆவார். குற்றமில்லாத கல்வியறிவும் தேடுதற்கு அரிய ஞானத்திறனும் நன்னயமும் உடைய சிறப்பு மிக்கவர் செந்தமிழ்க் குமரனார்.

**"ஓவிலாக் கல்வியின் உயர்பே ரறிஞர்**
**தேடரும் ஞானத் திறன்மிக் குடையார்**
**நாட்டும் ஒழுக்கின் நன்னயம் உணர்ந்தோர்**
**செந்தமிழ்க் குமரனார் செவ்வி யறிந்தே (மாதவ.மே.8:23-26)**

என்னும் அடிகள் இதனை விளக்கும். மாதவனுக்கு அனைத்து விதமான நெறிகளையும் கற்றுக்கொடுத்து அவனது மகிழ்ச்சி கண்டு மனம் மகிழும் ஒரு பண்பான குருவாய்ச் செந்தமிழ்க்குமரனார் காணப்படுகிறார்.

**பெயர் சுட்டா மாந்தர்கள்:-**

காப்பியத்தில் பெயர் சுட்டப் படாத சில மாந்தர்களும் காணப்படுகின்றனர். மேகலைக்கு ஆதரவாய் நிற்கும் காஞ்சி நகர மக்கள், மணிமேகலையிடம் பாத்திரத்தைக் கவரும் கயவர்கள், பின்னோக்கு உத்தியில் காட்டப்படும்

கதைமாந்தர்கள் ஆகியோரின் பங்கு காப்பிய வளர்ச்சிக்குத் துணை செய்வதாக விளங்குகின்றது.

**காப்பிய யாப்பு:-**

மாதவ மேகலையின் பதிகமும், முப்பது காதைகளும் நிலை மண்டில ஆசிரியப்பாவில் பாடப்பெற்றுள்ளன. சில காதைகளில் ஆசிரிய விருத்தங்களும், கண்ணிகளும் இடைமடுக்கப்படுகின்றன. வேண்டாத வகையில் எதுகை மோனைகள் இடம் பெறாது இயல்பான நடையோட்டத்தில் கவிஞர் மீனவன் காப்பியம் யாத்துள்ளார். மணிமேகலையைப் பலகாலும் பயின்ற பயிற்சியர் மீனவன் என்பதற்கு இக்காப்பிய யாப்பு சான்று பகர்கிறது.

மாதவமேகலையில் அவலப்பாடல்கள் அறுசீர் விருத்தத்தில் அமைந்துள்ளன. பூங்கொடி போன்ற மென்மையான மேகலை தன் இளமையான வயதில் இன்பம் துறந்து உலகில் பல அறங்களைச் செய்தாள். அமுதசுரபி கொண்டு உலக உயிர்களின் பசி போக்கித் தாயாய்க் காத்தருளினாள். அவள் உயிர் துறந்த இந்த நாள் நெஞ்சத்தைத் துயரடையச் செய்கிறது என்னும் பொருள்படும்,

**“பூவைச் சுமந்த கொடிபோலப்**
**பொலியும் இளைய அகவைக்கண்**
**பாவை இன்பம் துறந்தானால்**
**பாரில் அறங்கள் செய்தாளால்!**
**தாவில் அடிசில் தந்துயிரைத்**
**தாய் போற் காத்தே வந்தாளால்!**
**ஆவி துறந்தாள் இந்நாளில்**
**அந்தோ! நெஞ்சம் அயர்ந்தேமால்! (மாதவ.மே.30:51-54)**

என்னும் பாடல் இதற்குச் சிறந்தசான்றாகும்.

**தண்டியலங்காரக் காப்பிய இலக்கணம் மாதவமேகலையில் பொருந்தும் பாங்கு:-**

காப்பிய இலக்கணங்களை உணர்த்தும் நூல்கள் பல வடமொழியில் உள்ளன. அணியிலக்கணக் கொள்கையினை விளக்குகின்ற நூல்கள், சுவைக் கொள்கையினை விளக்குகின்ற நூல்கள், தொனிக் கொள்கையை விளக்குகின்ற நூல்கள் எனப் பல்வேறு கொள்கைகளைத் தனித்தனியே விளக்கும் நூல்கள் தமிழில் உள்ளன. இந்நூல்களில் சில பகுதிகள் காப்பியத்திற்கான இலக்கணத்தை எடுத்துரைக்கின்றன. தமிழில் தொல்காப்பியம் காட்டும் எண்வகை வனப்புகளில் **"தொன்மை", "தோல்"** என்பன காப்பியத்தைக் குறிப்பதாக உரையாசிரியர்கள் உரைக்கின்றனர்.

**''தொன்மை தானே சொல்லுங் காலை**
**உரையொடு புணர்ந்த பழமை மேற்றே"**[12]
**"இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்**
**பரந்த மொழியான். அடிநிமிர்ந் தொழுகின்**
**தோலென மொழிப தொன்னெறிப் புலவர்"**[13]

என்று தொன்மை மற்றும் தோல் குறித்துத் தொல்காப்பியர் விளக்குவர். பழமைப் பொருள் ஒன்றை விரிவாகக் கூறுவது **"தொன்மை"** என்றும் விழுமிய பொருள் பயக்குமாறு புனைவது **"தோல்"** என்றும் இதனை விளக்க இயலும். தமிழில் உள்ள பழம்பெரும் இலக்கணத்தில் காப்பியம் குறித்த செய்தி தொடர்பாக இதனை மட்டுமே கருத முடிகிறது. பாட்டியல் நூல்களில் பன்னிரு பாட்டியல் ஒழிந்த பிற பாட்டியல் நூல்கள் காப்பியத்திற்கான இலக்கணத்தைக் கூறுகின்றன. ஆனால் அவை தண்டியலங்காரம் கூறுவதையே வழிமொழிகின்றன. எனில் தமிழ்

அணியிலக்கண நூல்களின் வழித் தமிழ்க்காப்பியக் கொள்கையை ஒருவாறு உருவாக்க முற்படின் அதில் தண்டியலங்காரம் முதன்மை பெறுகிறது.

முத்தகம், குளகம், தொகைநிலை, தொடர்நிலை என்னும் நான்கு வகைச் செய்யுள்களுள் தொடர்நிலை என்பது காப்பியத்தைக் குறிக்கிறது. இதனைத் தண்டியலங்காரம் சொல்தொடர் நிலை, பொருள் தொடர் நிலை எனப் பகுத்துப் பொருள் தொடர்நிலையின் கீழ் பெருங்காப்பியம், காப்பியம் என இரண்டு வகையினதாய்க் கொண்டு இலக்கணம் கூறுகிறது. இதனை,

**“பெருங்காப் பியநிலை பேசுங் காலை**
**வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றின்**
**ஏற்புடைத் தாகி முன்வர வியன்று**
**நாற்பொருள் பயக்கு நடை நெறித்தாகித்**
**தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்**
**மலை கடல் நாடு வளநகர் பருவம்**
**இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து**
**நன்மணம் புணர்தல், பொன்முடி கவித்தல்**
**பூம்பொழி னுகர்தல், புனல் விளையாடல்**
**தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்**
**புலவியற் புலத்தல், களவியற் களித்தலென்று**
**இன்ன புனைந்த நன்னடைத் தாகி**
**மந்திரம் தூது செலமிகல் வென்றி**
**சந்தியிற் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்**
**பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி**
**நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்**

**கற்றோர் புனையும் பெற்றிய தென்ப"[14]**

என்னும் நூற்பா விளக்கும்.

**தண்டி இலக்கணம் மாதவமேகலையில் பொருந்தும் பான்மை:-**

வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல் என்பனவற்றுள் ஒன்று காப்பியத்தின் முன் உறுப்புகளாக வரும் என்கிறது தண்டியலங்காரம். இவை வடமொழியில் வழங்கும் மரபு ஆகும். தமிழிலும் இவை மூன்றும் பெருமளவு காணக்கிடக்கிறது. வாழ்த்து என்பது வணக்கத்திற்கு உரியவற்றின் இயல்புகளைப் புகழ்ந்துரைப்பது ஆகும். மாதவமேகலையின் வாழ்த்துப்பாயிரம் தமிழ்மொழியின் புகழை,

**"சங்கத்தார் சீதனங்கள் பத்துப் பாட்டு**
**சபை மணக்கும் தொகைவரிசை எட்டேயாக**
**அங்கத்தில் மணிசேர்த்துப் பரதம் ஆடும்**
**அடிகளிலே சிலம்பணிந்து வளையும் தாங்கிப்**
**பொங்குமொழிற் குண்டலத்தைக் காதிற் பூட்டிப்**
**பொன்னழகு மேகலையும் பொலியச் சூட்டி**
**செங்கையிற் குறட்செங்கோல் ஏந்தி நின்ற**
**சீருக்கே வணக்கங்கள் கோடி சேர்த்தோம்"**

**(மாதவ.மே.பா.5:)**

வாழ்த்துவதாய் அமைந்துள்ளது.

**உறுப்புகளின் பெயர்கள்:-**

உறுப்புகளின் பொதுப்பெயர்களாக, சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் என்னும் பகுதிகள் குறிக்கப் பெறுகின்றன. இவற்றுள் சருக்கம் என்பது சூளாமணியிலும், இலம்பகம் என்பது சிந்தாமணியிலும் இடம்பெற்றுள்ளன. பரிச்சேதம் என்பது தமிழ்

நூல்களில் வழங்கப்படவில்லை. மாதவமேகலை, சிலம்பு, மேகலை ஆகியவற்றின் தொடர்ச்சியாக எழுதப்பட்டதால் சருக்கம், இலம்பகம் எனும் பகுப்பின்றிக் காதை என்னும் அமைப்பில் பாடப்பெற்றுளது.

**காப்பியத்தின திரண்ட பொருள்:-**

அறம், பொருள், இன்பம், வீடு, என்னும் நான்கையும் பெருங்காப்பியத்தின் திரண் பொருளாய்த் தண்டியலங்காரம் சுட்டுகிறது. இவற்றில் ஒன்று குறையினும் அது சிறுகாப்பியம் என்றே கொள்ளப்படும். மாதவமேகலையில் மேகலை, மாதவன் வாயிலாக அறம் மற்றும் வீடுபேறு மாதவனது செயல்கள் வழிப் பொருள் மற்றும் இன்பம் ஆகியனவும் புலப்படுத்தப்பட்டுள்ளன. கவியின் பாவிகத்திற்கு ஏற்ப நாற்பொருளில் ஒன்றும் பலவும் சிறப்பாக அமைந்திருக்கும். அவ்வகையில் அறம், வீடு ஆகியன மாதவமேகலையின் மையமாய் விளங்குகிறது.

**வருணனைகள்:-**

மாதவமேகலையில் பலதிறத்த வருணனைகள் காணப்படுகின்றன. பூமித்தாயின் மேனி இயற்கை வளத்தால் சூழ, புலவர்களின் நாவில் நடனமிடும் சிறப்பிற்கு உரியதாய், செந்தாமரை மலர் மீது வீற்றிருக்கும் திருமகளின் அருள் பெற்றதோடு வெண்தாமரையில் வீற்றிருக்கும் கலைமகளின் கருணைப் பார்வையும் பெற்று விளங்கும் மாநகராய்க் காஞ்சி விளங்குகிறது. இதனை,

**“பூமகள் மேனி புளகம் போர்க்க**
**நாமகள் நாவில் நடமிட் டிலங்கச்**
**செம்மலர்த் திருவின் சீரருள் சுரக்க**
**அம்மலர்க் கியைவன் அணிமல ராளின்**
**கண்ணருள் பெருகிக் கலந்த மாநகரென”   (மாதவ.மே.1:1-5)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

மலைமகளான ஆதிசக்தியின் திருவருள் பெற்று எண்ணற்ற புகழ் மொழி பொருந்திய மதில்களைப் பெற்ற காஞ்சி மாநகரம், அறம் வளர்க்கும் மாதர்களைத் தொழக் கூடிய நற்பண்பினைக் கொண்டது என்பதை,

**“இமயத் திருந்த இறைவியின் திருவருள்**
**சுமந்த நகரெனச் சொல்லுமோர் மொழிக்கு**
**பொருந்திய வாறு பொருள்பல வற்றால்**
**அறம்வளர் மாதர் அடிமலர் படியக்**
**கனிவது மதில்சேர் காஞ்சிமா நகரம்” (மாதவ.மே.1:24-32)**

என்னும் அடிகள் புலப்படுத்தும்.

**ஆறு - வருணனை:-**

“பொன்னும், மணியும், பூவும் தனக்குள் தள்ளி தன் மலர் போன்ற விழியெனத் தவழ்கின்ற மீனை ஒத்திருப்பவள் காவிரித்தாய். அவள் உழவர்களின் நெஞ்சத்தில் மகிழ்ச்சியை ஊட்டக் கூடியவள். சோழ நாட்டின் உயர்ந்த பெண்ணாய்த் திகழ்பவள், சிப்பிகள் சங்குகள் போன்றவற்றை எல்லாம் தன் அணிகலனாய்ப் பூண்டு தத்தி நடைபயிலும் பெண்அவள். பக்கத்தில் உள்ள அத்துணைப் பகுதிகளையும் வளமாக்கும் இறைவி காவிரி” (**மாதவ.மே.2:59-68)** எனக் காவிரி நதியை அழகாய் வருணித்துள்ளார்.

**இன்பச் செய்திகள்:-**

மாதவமேகலை, துறவின் மேன்மையை விளக்கும் ஓர் உன்னதக் காப்பியம். கதைத் தலைவன் மாதவன் அன்னம் என்னும் பெண்ணின்பால் காதல் கொண்டு அவளை மணங்கொள்ள நினைக்கும் காட்சிகள் மட்டுமே இதனுள் இன்பச் செய்திகளாக உள்ளன. அன்னத்தின் மறைவிற்குப் பின் மாதவன் துறவின் மேன்மையை உணர்ந்து அறவழி மேற்கொண்டதாகக் கதை பின்னப்பட்டுள்ளது.

ஆதலால், தண்டி கூறும் நன்மணம் புணர்தல், பொன்முடி கவித்தல், பூம்பொழில் நுகர்தல், புனல் விளையாடல், சிறுவரைப் பெறுதல், புலவியிற் புலத்தல், களவியிற் களித்தல் போன்ற செய்திகள் மாதவமேகலையில் இடம் பெற்றில.

**தன்னிகரில்லாத் தலைவன்:-**

தண்டி தன்னிகரில்லாத் தலைவன் ஒருவனைத் தலைமை மாந்தராகக் கொண்டு அமைய வேண்டும் என்கிறது. பொதுவாக அரசர்களுள் ஒருவனைக் குறித்த காப்பியம் என்பதையே இவை குறித்து நின்றது என்பதற்கு மந்திரம், தூது, செலவு, இகல், வென்றி போன்ற பகுதிகள் இடம்பெற வேண்டும் என்று இலக்கணம் வகுத்தது சான்றாக அமைகிறது.

சிலப்பதிகாரம், மணிமேகலை போன்று மாதவமேகலையும் தன்னேரில்லாத் தலைவியைக் கதைத்தலைவியாகக் கொண்டு பாடப்பெற்றுள்ளது. தண்டி வடமொழியிலிருந்து பெறப்பட்ட மொழிபெயர்ப்பு வடமொழிக்குரிய காப்பிய இலக்கணங்களே தமிழுக்கும் கூறப்பட்டுள்ளதால் அதில் கூறப்பட்டுள்ள இலக்கணங்கள் தமிழுக்கு ஏற்புடைத்தாய்த் திகழவில்லை. மாதவமேகலைக் காப்பியத்தில் தண்டி கூறும் காப்பிய இலக்கணம் சிலவிடத்து மட்டுமே பொருந்தியுள்ளது.

**முக்காப்பியம்:-**

“ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம் என்பன போல இரட்டைக் காப்பியம் என்பதும் பயிற்சியாக வந்த தொடர். இம்முப்பெயர்களில் இரட்டைக் காப்பியம் என்பது பொருத்தமிக்க தொகைப் பெயர். சிலப்பதிகாரத்தின் தொடர்ச்சியே மணிமேகலை, இம்மணிமேகலையின் தொடர்ச்சியே மாதவமேகலை ஆதலின் சிலப்பதிகாரம், மணிமேகலை, மாதவமேகலை, ஆகிய மூன்றும் நெருங்கிய பிணைப்பின. சிலம்பிற்கும் மேகலைக்கும் கால இடைவெளி இல்லை, ஒத்த

காலத்தின் கால இடையீடு உண்டு என ஆய்வாளர் கணித்தாலும் மிகுந்த இடைவெளி என்று கூறவியலாது, ஆனால் மாதவமேகலை பெருத்த இடைவெளிக்குப் பின் தோன்றியது. இவ்வளவு கால இடைவெளி இருந்தாலும் கருத்து இடைவெளி இல்லாக் காப்பியமாக மாதவமேகலை திகழ்கின்றது. எனவே இம்மூன்றனையும் **'முக்காப்பியம்**' எனப் புதுத்தொகைப்பெயர் கொடுத்து வழங்குதல் சாலப் பொருத்தம்"[15] என்பர் மாதவமேகலைக்கு அணிந்துரை வழங்கிய டாக்டர்.சி.பாலசுப்பிரமணியம். இக்கூற்று மெய்ப்புடையது ஆகும். மாதவமேகலை சிலம்பு மற்றும் மேகலையின் சுருக்கத்தை வரலாறு உரைத்த காதையில் தெளிவுற விளக்குகிறது. சிலப்பதிகாரம், மணிமேகலை, மாதவமேகலை இம்மூன்றும் முப்பது உட்பிரிவுகள் கொண்டன. சிலம்பு பாடல், காதை, வரி, குரவை, மாலை என உட்பிரிவுகளுக்குரியதாய் அமைந்துள்ளது. மணிமேகலையின் பிரிவுகள் முப்பதும் காதை என்னும் பெயர் பெற்றனவாய் உள்ளன. மாதவமேகலை இதனைப் போல் முப்பது காதை அமைப்புடையதாகத் திகழ்கிறது. மேலும் சிலம்பு 5001 அடிகளைக் கொண்டது. மணிமேகலை 4759 அடிகளையும், மாதவமேகலை 2941 அடிகளையும் பெற்றுள்ளது. அடியளவிலும் சிலப்பதிகாரம் முதலும் மணிமேகலை வழியும் மாதவமேகலை சார்புமாக நிற்கும் ஒற்றுமை குறிப்பிடத்தக்கது.

**மாதவமேகலை உணர்த்தும் அறங்கள்:-**

மாதவமேகலை சமுதாய அறங்களைப் பேசும் கொள்கைக் காப்பியமாய்த் திகழ்கிறது, மணிமேகலைக் காப்பியத்தைத் தொடர்ந்து அவள்தம் வாழ்வின் தொடர்ச்சியைக் கூறுவதாகப் புனையப்பட்ட காப்பியம் மாதவமேகலை. ஆதலால் பசியொழிப்பு என்னும் அறம் இதனுள்ளும் ஆழமாய்ப் பதிந்துள்ளது. எனினும் கதையோட்டத்தின் ஊடே தொடர்புடைய எண்ணற்ற அறங்களையும் மாதவமேகலை பேசுகிறது.

**பசியொழிப்பு அறம்:-**

எண்ணற்ற இலக்கியங்கள் வறுமை குறித்துப் பேசுகின்றன வறுமையின் கொடிய முகத்தை,

**"கொடிது கொடிது வறுமை கொடிது**

**அதனினுங் கொடிது இளமையில் வறுமை"[16]**

என **ஔவையார்** புலப்படுத்தியுள்ளார். உண்ண உணவின்றி வாடும் மக்களின் நிலை மிகுந்த அவலத்திற்குரியது. இதனாலேயே மணிமேகலை பசிப்பிணியைப் பாவி என்றழைக்கிறது. இதனை நீக்கும் பசியொழிப்பு அறம் மாதவமேகலையில் பாங்குடன் அமைகிறது.

நரை கூடிய முதியோர், நாளடைந்த நோய் முற்றியோர், தவறு செய்து திருந்தியோர், தேற்றுவார் இல்லாது தனித்த மக்கள், பெரும்பசி என்னும் நோய் கொண்டோர் ஆகிய அனைவருக்கும் அமுதளிப்பது கடமை என்கிறது மாதவமேகலை. இதனை கச்சி காண் காதையில் உள்ள,

**"நரை-மூதாளர் நலிபிணிப் பட்டோர்**

**திருந்துவாழ் வில்லார் தேற்றுவார் அற்றார்**

**பெரும்பசித் தீயெனும் பெரும்பணி யுற்றார்**

**அருந்திடு வீரென அமுதளித்து"** **(மாதவ.மே.1:42-45)**

என்னும் அடிகள் காட்சிப்படுத்துகிறது. மேலும், வரலாறு உரைத்த காதையில், பசி என்னும் கொடிய நோயில் வாடுவோர்க்கும், பல்வேறு பிணி உற்றோர்க்கும், துன்பத்தின் பிடியில் வீழ்ந்தோர்க்கும் உணவளித்து துயர் நீக்கிய காரிகையாய் மேகலை திகழ்ந்ததை,

**"பசிநோ யாளர் பல்பிணி யுற்றார்**

**தொடரும் வருத்தத் தொடக்கினில் வீழ்ந்தோர்**

**ஆற்றா மாக்கள் அல்லல் நீக்கி**

**மாற்றிய காரிகை...............''** **(மாதவ.மே.2:130-139)**

என்னும் அடிகள் நன்குரைக்கும். இவை பசியொழிப்பு என்னும் அறத்தின் இன்றியமையாமையைப் புலப்படுத்துகின்றன.

**சமூக அறங்கள்:-**

மாதவமேகலை இன்றைய காலச்சூழலுக்குத் தேவையான அறங்களை விரிவாகப் பேசுகிறது. இல்லாதவர்க்கு உணவளித்து உதவுதல், நீண்ட தூரம் பயணம் செய்வோருக்கு இடையில் தாகம் தணிக்க நீர்ப்பந்தல் அமைத்தல், வாழ்வில் எந்தவிதப் பற்றுக்கோடுமின்றி இருப்போர்க்கு ஆதரவளித்தல் மனவேறுபாட்டால் பிரியும் இணையரைத் தக்க அறிவுரை கூறிச் சேர்த்தல் போன்ற எண்ணற்ற சமுதாய அறங்களைச் சுட்டுகிறது.

மேலும் அனைத்துக் குழந்தைகளையும் ஆதரித்தல் என்னும் அறம் மாதவமேகலையில் பேசப்பட்டுள்ளது. யாருமற்ற குழவியான மாதவனை ஆற்றுப்படுத்திய கதை காப்பியத்துள் அமைவது இங்கு குறிக்கத்தக்கது. ஆதரவில்லாத குழந்தையை ஆதரித்தல் ஆயிரம் புண்ணியத்திற்குச் சமம் என்கிறது மாதவமேகலை. இதனை,

**''அன்ன யாவினும் ஆயிரம் புண்ணியம்**

**ஆதர வில்லாக் குழவியை அன்புடன்**

**தீதிலா வண்ணம் திருந்திடக் காத்தல்''** **(மாதவ.மே.6:128-130)**

என்பதன் வழி அறிய இயலும்.

**முதன்மையான மூவறங்கள்:-**

இன்றைய காலகட்டத்திற்குத் தேவையான அறங்களை மாதவமேலை,

**''பொல்லா வறுமை புளுக்கிய தாலே**

**மங்கல வேலி எனுமணித் தாலி**

**தங்கழுத் தேறும் தனி மகிழ் காணாக்**

**கோதையர் வாழ்வில் கொழுமணம் சேர்த்தும்**

**மாதவர் மகிழ் மாண் பொருள் அளித்தும்**

**வல்லகாண் முளைகள் வாய்த்திட லின்றி**

**இல்லச் சுமையென இருந்திடு முதியோர்**

**உள்ளப் பாலையில் உயர்நீர் பெய்தும்**

**கொண்ட கொழுநன் குறைவா ணாளில்**

**உயிர் உலந் தேக உறுதுணை இழந்தே**

**துயர்ப்பட் டரற்றும் தோகையர்க் குதவியும்'' (மாதவ.மே.11:10-19)**

என்றுரைக்கின்றது. இதில் சுட்டப்பெறும் மூவறங்களும் இன்றைய சமுதாயத்திற்கான முதன்மையறங்கள் ஆகும். ஏழ்மையால் மணம் காணா மங்கையர்க்கு உரிய காலத்தில் திருமணம் செய்து வைத்தல், முதியோரைக் காத்தல், கணவனை இழந்த பெண்ணிற்கு வாழ்வளித்தல் போன்றவற்றைத் தலையான அறமெனக் கொண்டு செயல்பட வேண்டும், என்பது படைப்பாளியின் உள்ளக்கருத்தைத் தெற்றெனப் புலப்படுத்தும்.

**அனைவரும் பின்பற்றப்பட வேண்டிய பேரறம்:-**

உலக சமுதாயத்தை உய்விக்கும் எண்ணற்ற அறங்களைப் பேசும் மாதவமேகலை, மக்கள் அனைவரும் பின்பற்ற வேண்டிய ஒரு பேரறத்தையும் சுட்டியுள்ளது. எத்தகைய சூழலிலும் உடல் வலிமையால் உலகை அடக்கலாம் என்ற எண்ணத்தைக் கைவிட்டு, அறமும், அருளும், அன்பும் நிறைந்த அறவழியினையும், அருள்வழியினையும் மக்கள் பின்பற்ற வேண்டும் என்பதை,

**“அறமும் அருளும், அன்பும், நிறைந்து**

**மறவழி போக்கி மக்கட் குதவும்**

**அறவழி ஒன்றே அருள்வழி"** **(மாதவ.மே.9:148-150)**

என்னும் அடிகள் வாயிலாக உணர்த்துகிறது.

**காப்பியப் பாவிகம்:-**

**"பாவிகம் என்பது காப்பியப் பண்பே"**[17] என்பதன்வழி படைப்பின் அடிக்கருத்து பாவிகம் என்பது புலனாகும்.

"ஒரு குறிக்கோள் வைத்து இலக்கியம் யாப்பவனே எழுத்தாளன்"[18] என்பர் வ.சு.ப.மாணிக்கனார். அவ்வகையில் சமுதாயத்திற்குத் தேவையான அனைத்தறங்களையும் தம் காவியத்தில் மீனவன் அழகாகச் சுட்டுகிறார். இதில் அவரது குறிக்கோள் பசியொழிப்பு பற்றிப் பேசுவதாகவே அமைந்துள்ளது. மணிமேகலை போல மாதவமேகலையும் பசியொழிப்பு என்பதையே பாவிகப் பண்பாகக் கொண்டு அமைந்துள்ளது.

## தொகுப்புரை

- ❖ கவிஞர் மீனவன் அவர்கட்கு காப்பியக் கவிஞர் என்னும் பட்டத்தைப் பெற்றுத்தந்தது அவரெழுதிய மாதவமேகலை என்னும் காப்பியம்.
- ❖ சிலப்பதிகாரம், மணிமேகலையைத் தொடர்ந்து கதையமைப்பால் வளர்ந்த காப்பியம் மாதவமேகலை ஆகும்
- ❖ மாதவமேகலை 30 காதைகளையும், 2941 அடிகளையும் கொண்டு அமைக்கப்பெற்றுள்ளது.
- ❖ காப்பியத்தின் முதற்பகுதியான பதிகம் மரபு மாறாத் தன்மையினையும், வாழ்த்துப் பாயிரம், தமிழ் மொழியின் சிறப்பினைக் கூறும் புதுமையினையும் பெற்று அமைந்துள்ளது.
- ❖ மாதவமேகலை என்னும் பெயர் காப்பியத்திற்கு மிகுந்த பொருத்தமுடையதாய்க் காணப்படுகிறது. மாதவனும் மேகலையும், மாதவம் செய்த மேகலை, மாதவி பெற்ற மேகலை என்று மூன்று கோணங்களில் காப்பியத் தலைப்பு சிறப்புறப் பொருந்தியுள்ளது,
- ❖ மாதவமேகலை காப்பியக் கதையோட்டத்தை உயிர்ப்புடன் நகர்த்தக்கூடிய கதை மாந்தர்களைக் கொண்டு அமைந்துள்ளது.
- ❖ மாதவமேகலையில் தலைமை மாந்தர்களாக இருவரும், (மணிமேகலை, மாதவன்) எதிர்த்தலைமை மாந்தராக ஒருவரும், (நம்பி) துணைமை மாந்தர்களாக எழுவரும், (அறவணர், அன்னம், வில்லவன், கோதை, செந்தமிழ்க்குமரனார், நம்பி, பத்திரை ) பெயர் சுட்டா மாந்தர்கள் சிலரும் காணப்படுகின்றனர்.
- ❖ மாதவமேகலை ஆசிரிய விருத்தத்தால் இயற்றப்பட்டுள்ளது. தண்டியலங்காரம் கூறும் காப்பியத்திற்குரிய இலக்கணத்தில்

சிலவற்றைக் கொண்டும் சிலவற்றைத் தள்ளியும் அமைந்துள்ளமை சுட்டத்தக்கது.

- ❖ மாதவமேகலை சிலம்பினை முதல் நூலாகவும், மேகலையை வழி நூலாகவும் கொண்டும் முக்காப்பியம் என்னும் பெயர் பெறும் சிறப்பினைப் பெற்றுள்ளது.
- ❖ மாதவமேகலை தன் பாவிகமாக **'பசியொழிப்பு'** என்னும் அறத்தை உறைக்கின்றது எனினும் இன்றைய காலச் சூழலிற்கு ஏற்ற சமூக அறங்களையும் எடுத்துரைப்பதன் வழி இலக்கியம் காலத்தின் கண்ணாடி எனும் கருத்தாக்கத்தையும் நன்கு விளக்கி நிற்பது சுட்டத்தக்கது.

**சான்றெண் விளக்கம்**

1. டாக்டர்.அ.அ.மணவாளன், இலக்கிய ஒப்பாய்வுக் காப்பியங்கள், ப:1
2. வானதி திருநாவுக்கரசு, மாதவமேகலை, பதிப்புரை, ப.3
3. பவணந்தி முனிவர், நன்னூல்-1,
4. மேலது.3
5. டாக்டர்அ.அ.மணவாளன், இலக்கிய ஒப்பாய்வுக் காப்பியங்கள், ப.49-50
6. மேலது. ப.45
7. க.பஞ்சாங்கம், சிலப்பதிகாரத்திறனாய்வுகள், ப.102
8. நா.இராமச்சந்திரன், துடியான சாமிகள் ப.90
9. கலா.கே.தாக்கர், கல்கியும் முன்ஷியும், ப.293
10. கரு.முத்தையா, ஜெயகாந்தன் நாவல்களின் பாத்திரப்படைப்பு, ப.68
11. மீனாட்சி சுந்தரனார், சிலம்பில் துணைப்பாத்திரங்கள், ப.07
12. முனைவர்.ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியத்தெளிவுரை-1493,
13. மேலது-.1494
14. தண்டியலங்காரம், சூத்திரம் 6
15. கவிஞர்.நா.மீனவன், மாதவமேகலை, அணிந்துரை ப.3
16. ஔவையார், தனிப்பாடல்கள், ப.25
17. தண்டியலங்காரம், சூத்திரம் 91
18. வ.சுப.மாணிக்கனார், இரட்டைக்காப்பியங்கள்-காப்பியப்பார்வை, ப.49

இலக்கியங்களைப் பேரிலக்கியம், சிற்றிலக்கியம் என்று வகைப்படுத்தும் மரபு உள்ளது, சிற்றிலக்கியம் என்பது பாடல் எண்ணிக்கை அல்லது அடிகளின் எண்ணிக்கை சுருங்கியதாக, அகப்பொருள் அல்லது புறப்பொருளில் ஏதேனும் ஒரு துறையைப் பற்றியதாக, பாடப்பெறும் கடவுள் அல்லது மன்னன் அல்லது வள்ளல் ஆகியோருடைய வாழ்வின் ஒரு சிறு கூற்றை விளக்கி அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கு உறுதிப் பொருளுள் ஏதேனும் ஒன்றைத் தருவதாக அமைவது என்னும் அடிப்படையில் அமைகிறது. சிற்றிலக்கியங்களை முதலில் பிரபந்தங்கள் என்று வழங்கினர். பிரபந்தம் என்ற வடசொல்லுக்கு **'நன்கு வடிவமைக்கப்பட்டது'** என்பது பொருள். இது அனைத்து இலக்கியங்களுக்கும் பொதுவானதாகக் கருதப்படினும், காலப்போக்கில் சிற்றிலக்கியம் என்ற சொல் இவ்வகை இலக்கியங்களைக் குறிக்க நிலைபெற்றது. கவிஞர் மீனவன் அவர்கள் சிற்றிலக்கியப் படைப்பிலும் முத்திரை பதித்தவராய் விளங்குதலை அவர் தம் சிற்றிலக்கியங்கள் கொண்டு ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

**சிற்றிலக்கிய வகைமை:-**

பிரபந்தத்தீபிகை, பிரபந்தத்திரட்டு, பிரபந்த மரபியல் போன்ற பாட்டியல் நூல்கள் சிற்றிலக்கியத்தை, தொண்ணூற்றாறு என்று வகைப்படுத்துகின்றன. கி.பி.பதினாறாம் நூற்றாண்டில் தோன்றிய பிரபந்த மரபியல் சிற்றிலக்கியத்தை,

"**பிள்ளைக் கவி முதல் புராணம் ஈறாகத்**

**தொண்ணூற் றாறு என்னும்**

**தொகையது ஆம்"**[1] என்கிறது

வீரமாமுனிவர் இயற்றிய சதுரகராதியும் 96 வகை சிற்றிலக்கியங்களைக் குறிப்பிடுகின்றது. இவற்றால் சிற்றிலக்கியங்கள் 96 என்று கூறப்படும் பொதுவான

மரபு இருந்துள்ளமை புலனாகிறது. சிற்றிலக்கியங்கள் இன்று பல்நூறு வகையினதாய் வளர்ந்துள்ளது.

**“விருந்தே தானும் புதுவது புனைந்த யாப்பின் மேற்றே”**[2] என்பதன் வழி எண்ணற்ற சிற்றிலக்கியங்கள் தோன்றிடினும் சீரிய திறத்தால் செல்வாக்கோடு நிலைத்திருக்கும் இலக்கியங்கள் ஒரு சிலவே ஆகும். சிற்றிலக்கியத்தின் கால எல்லை மிகப்பெரியது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் நாவல், சிறுகதை, நாடகம், கட்டுரை முதலான உரைநடை இலக்கியங்கள் தமிழில் பல்கிப் பெருகத் தொடங்கின. 19, 20 ஆம் நூற்றாண்டுகளில் புத்திலக்கிய வகைகளின் எழுச்சி பழைய மரபிலக்கிய வகைகளை வீழ்த்திவிட்டன என்று தோன்றும். கிட்டத்தட்ட எழுநூறு ஆண்டுகாலம் செல்வாக்கோடு திகழ்ந்த தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் காலம் முடிந்தது என்று ஒரு மாயத் தோற்றத்தை உரைநடை இலக்கியங்களின் பெருக்கம் ஏற்படுத்தினாலும், உண்மை இதற்கு நேர்மாறானது. ஏனைய நூற்றாண்டுகளை விடவும் இருபதாம் நூற்றாண்டில் தான் சிற்றிலக்கியங்கள் அதிக அளவில் பாடப்பட்டன என்பது ஒரு வியக்கத்தக்க உண்மை. பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை சிற்றிலக்கியப் பாட்டுடைத் தலைவர்கள் கடவுள்களாகவோ, அரசர்களாகவோ, வள்ளல்களாகவோ அமைந்தனர். இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் சமூக, சமய, பண்பாடு, அரசியல் மாற்றங்களினால் பாட்டுடைத் தலைவர்கள் பல்கிப் பெருகினர். சமயம் சார்ந்ததாகவும், சமயம் சாராததாகவும் எண்ணற்ற சிற்றிலக்கிய வகைமைகள் தோன்றின. ஏனைய இலக்கிய வகைகளைப் போலவே சிற்றிலக்கிய வகையும் தமிழில் காலந்தோறும் கிளைத்து வந்திருக்கிறது. இதனை “ஐந்தருவி போல இடையறாது சிற்றிலக்கியமாகிய அருவி தமிழில் கொட்டிய வண்ணம் இருந்ததென்று தான் கூற வேண்டும்”[3] என்பர் தமிழண்ணல்.

முனைவர் ந.வீ.செயராமன் தம் சிற்றிலக்கியச் செல்வம் என்ற நூலில், "தொல்காப்பியர் காலத்தில் இடம் பெற்ற சிற்றிலக்கிய வித்து சங்க காலத்தில் ஆற்றுப்படையாக முளைவிட்டு, ஐந்தாம் நூற்றாண்டில் அந்தாதியாகத் துளிர்த்து ஆறு, ஏழாம் நூற்றாண்டில் உலாவாக மரமாகி, ஒன்பது பத்தாம் நூற்றாண்டில் கலம்பகமாகக் கிளைத்து, பதினோராம் நூற்றாண்டில் சதகமாகவும், பரணியாகவும் அரும்பி, பன்னிரண்டாம் நூற்றாண்டில் பிள்ளைத் தமிழாக மொட்டாகி, பதிமூன்று, பதினான்காம் நூற்றாண்டில் தூதாகப் பூத்து, பதினாறாம் நூற்றாண்டில் பள்ளாகக் காய்த்து, பதினெட்டாம் நூற்றாண்டில் குறவஞ்சியாகக் கனிந்தது"[4] என்று சிற்றிலக்கியம் குறித்து உரைப்பது இதன் வளர்ச்சி நிலையைக் காட்டும்.

தன் இலக்கியப் படைப்புத் திறத்தால், மரபிலக்கியத்தில் தனியிடம் பதித்த கவிஞர் மீனவன் அவர்கள் எண்ணற்ற சிற்றிலக்கியங்களைப் பாடியுள்ளார். அவை பின்வருமாறு,

- **கம்பன் பிள்ளைத்தமிழ்**
- **கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ்**
- **அரசர் முத்தைய வேள் புகழ் மாலை**
- **நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை**
- **அலர்மேல் மங்கை அந்தாதி**

மீனவன் அவர்களின் சிற்றிலக்கிய நூல்களை பிள்ளைத்தமிழ் நூல்கள், மாலை நூல்கள், அந்தாதி, என்னும் வகையினதாய்ப் பிரித்தாய்வதின் வழி அவர்தம் படைப்புத் திறன் புலப்படும்.

**பிள்ளைத்தமிழ்:-**

சிற்றிலக்கியங்களில் தலையாயது பிள்ளைத்தமிழ் என்பர். தமிழ் இலக்கியத்தில் பேரிடம் பெறும் பிள்ளைத்தமிழ் தமிழில் மட்டும் காணும் இலக்கிய

வகை என்னும் கூற்று முற்றிலும் மெய்ம்மை உடையது. பல்வேறு மொழிகளில் குழந்தையைப் பற்றிய இலக்கியக் கூறுகள் காணப்படினும் குழந்தையைப் பாட ஒரு தனித்த வகை இலக்கியத்தை ஏற்படுத்திய மொழி தமிழ் ஆகும். பிள்ளைக்கவி, பிள்ளைப்பாட்டு, நற்றமிழ்க்கவி, சேய்த்தமிழ்ப்பா என்று பல்வேறு பெயர்களைக் கொண்டு விளங்கும் இவ்விலக்கியம் சங்ககாலம் முதலாகக் காணப்பட்டமைக்குத் தொல்காப்பியம் சான்று பகரும்.

**"குழவி மருங்கினும் கிழவதாகும்"**[5] என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு '**சிறுபிள்ளை பாட்டுடைத் தலைவராக அமைவர்'** என்பது பொருள். பிள்ளைத்தமிழ் இலக்கியத்திற்குப் பரந்துபட்ட ஓரமைப்பினை நல்கிய பெருமை பெரியாழ்வாருக்குரியது. யசோதையாய் நின்று இவர் குழந்தைக் கண்ணனைப் பாடிய பாசுரங்கள் பிள்ளைத்தமிழின் பருவ வளர்ச்சிக்கு வித்திட்டது. இதன் பின் எழுந்த இலக்கண நூல்களிலும், பாட்டியல் நூல்களிலும் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் இலக்கணம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. கடவுளரையேனும் அரசரையேனும், சிற்றரசர்களையேனும் குழந்தையாக வைத்துக் காப்பு முதலிய பத்துப்பருவங்கள் அமைத்து ஆசிரிய விருத்தம் என்னும் பாவகையால் பாடுவது பிள்ளைத்தமிழ் ஆகும். அது ஆண்பால் பிள்ளைத்தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படுகிறது. பிள்ளைத்தமிழில் காப்பு, தால், செங்கீரை சப்பாணி, முத்தம், வருகை (அ) வாரானை, அம்புலி ஆகிய பருவங்கள் இரு பாலருக்கும் பொதுவானவை. ஆண்பாற் பிள்ளைத் தமிழில் இறுதியாக, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்னும் பருவங்கள் காணப்படும். பெண்பாற் பிள்ளைத் தமிழாயின் கிழங்கு, அம்மானை, ஊசல் என்னும் பருவங்கள் காணப்படும். செங்கீரை, சப்பாணி போன்ற சொற்களுக்குப் பலவித அர்த்தங்கள் தரப்படுகின்றன. ஒவ்வொரு பருவமும் குழந்தையின் எந்தக் காலப்பகுதியில் அல்லது வயதில் அமைவது

என்பதற்கும் விதிகள் பலவாகச் சொல்லப்படுகின்றன. பொதுவாகக் காப்பு என்பது பிறந்தவுடன் பாடுவதாகவும், தால், சப்பாணி போன்று அடுத்துவரும் பருவங்கள் 3, 5, 7, 9, 11, 13 போன்ற மாதங்களுக்கும், இறுதிப் பருவங்கள் மூன்றாம், ஐந்தாம், ஏழாம் ஆண்டிற்கும் உரியவை எனக் கருதப்படுகிறது. மூன்றாம் மாதம் முதல் 21-ஆம் மாதம் வரை பாடப்படுவது என்ற கருத்தும் உண்டு. குழந்தை ஆணாயின் திருமணம் முடியும் வரையிலும் பெண்ணாயின் பூப்பெய்தும் வரையில் பாடலாம் என்றும் விதிகள் கூறுகின்றன. பல்வேறு புலவர்களால் இன்றளவும் பாடப்பட்டு வரும் பிள்ளைத்தமிழ், '**பிள்ளைத்தமிழே பெரியதமிழ்'** என்று போற்றுமளவு இன்று பல்கிப் பெருகியுள்ளது. இவற்றுள் சீரிய பெருமைக்குரிய பிள்ளைத்தமிழ் நூல்களாய் மீனவன் அவர்களின், கம்பன் பிள்ளைத் தமிழும், கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழும் திகழ்கின்றன.

**கம்பர் பிள்ளைத்தமிழ், கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ் அமைப்பு முறைமை:-**

பிள்ளைத்தமிழ் நூலுக்கு இலக்கணம் கூறும் பாட்டியல் நூல்கள் பருவங்களின் வரையறை, பருவ முறை வைப்பில் காலவரையறை, யாப்பமைதி என்னும் மூன்று கூறுகளை உள்ளடக்கி அதன் அமைப்பியலைச் சுட்டிக் காட்டுகின்றன, இவ்விலக்கண அடிப்படையில் கம்பர் பிள்ளைத்தமிழ், கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ் ஆகியவற்றைப் பொருத்திப் பார்ப்பது அதன் இலக்கிய மதிப்பீட்டை அறிய உதவும்.

**பருவங்களின் வரையறை:-**

ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகையாகப் பகுக்கப்பெற்ற பிள்ளைத்தமிழ் நூல்கள், பால்வகைமையாற் வரையறுக்கப்பட்ட பருவங்களைக் கொண்டு அமைகின்றன. காப்பு, தால், செங்கீரை, சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் ஆகியன ஆண்பால் பிள்ளைத் தமிழுக்கு உரிய பத்துப் பருவங்களாகும். இதனை,

**“சாற்றரிய காப்புத் தால் செங்கீரை சப்பாணி**

**மாற்றிரிய முத்தமே வாராணை – போற்றரிய**

**அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே**

**பம்பு சிறு தேரோடும் பத்து”[6]**

என்கிறது வெண்பா பாட்டியல். பிள்ளைத்தமிழ், பத்துப் பருவங்களில் தான் பாடப்பெறவேண்டும் என்னும் வரையறையின்றி ஒற்றைப் படையிலும், இரட்டைப் படையிலும், பாடல்கள் கொண்ட பிள்ளைத்தமிழ் நூல்கள் பல தமிழில் காணக் கிடக்கின்றன.

பாடல், பருவம், வரிசைமுறை ஆகிய வரையரையில் எவ்வித மாற்றமும் இன்றி, பாட்டியல் நூல்கள் கூறும் இலக்கண முறைமையோடு பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் என மொத்தம் நூறு பாடல்கள் கொண்டதாக மீனவனின் இரு பிள்ளைத்தமிழ் நூல்களும் அமைகின்றன. பொதுவான வரையறைப்படியே இரு நூல்களிலும் விநாயகர் வணக்கம் அமைக்கப்பட்டுள்ளதைக் காண முடிகிறது.

**பாட்டுடைத் தலைவர்கள்:-**

பேசருந் தெய்வம், பரப்பிரமம், மனுகுலத்தில் கோசலை வயிற்றில் குழந்தையாய்ப் பிறந்து இராமன் என்னும் நாமம் கொண்டு வாழ்ந்தவனது வரலாற்றை சீர்தமிழில் சிறப்பினதாய்ச் செதுக்கிய கம்பனைக் குழந்தையாய்ப் பாவித்துப் பாடப்பட்டது கம்பர் பிள்ளைத்தமிழ்.

கம்பன் கவியை உளச் செவியால் நிறைத்து உலகமெலாம் உணரச் செய்தவர் சா.கணேசனார். இவர் கம்பனை மறவாத நெஞ்சினர். தேசீயத்தையும் தமிழையும் தம் இரு கண்களெனப் போற்றியவர். கொடைவள்ளல் அழகப்பரின் இனிய தோழர். காரைக்குடியில் கம்பன் கழகம் கண்டு கம்பன் அடிப்பொடியாய்

உலகறியப் பெற்ற கணேசனாரைக் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெற்றது கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ்.

**அ.காப்புப் பருவம்:-**

பிள்ளைத்தமிழில் முதலாவதாக அமைவது காப்புப்பருவம். இது குழந்தை பிறந்த மூன்றாம் திங்கள் பாடப்படுவது. அனைத்தையும் காக்கவல்ல இறைவனைப் பாட்டுடைத் தலைவனைக் காப்பாற்றியருளும்படி வேண்டிக்கொள்ளும் காப்புப் பருவத்தில் காக்கும் கடவுளான திருமாலை முதற்கடவுளாக வைத்துப் பாடுதல் பாட்டியல் நூல்கள் கூறும் மரபு. இதனை,

**“பூவிற் றிருவை புணர்தலிற் பொன்முடி**
**பூண்கடாம்**
**மேலப் படுதலின் வெண்சங்க மாழி**
**விரும்புதலிற்**
**காவற் கடவுளை கார்முகில் வண்ணனைக்**
**காசிணி யோர்**
**பாவுக்கு முன்னே பகருவர் காப்பாய்**
**பனிமொழியே”**[7]

என்கிறது நவநீதப் பாட்டியல்.

**“விரிசடைப் பிஞ்ஞகன் வேய்த்தோ ளெழுவர்-முன்**
**காக்கவென்ன**
**அருள்பெறக் கூறினவரவர் செய்யும் கொலையகற்றி**
**உரியநற் கங்கை யுமையாள் மதியூர் விடை கடுக்க**
**விரைமலர்த் தார்மற்று மங்கலமாக விளம்பினரே”**[8]

என்று சிவனையும் காப்புக் கடவுளாக நீட்டிக்கிறது எனினும்,

**“காப்பின்முத லெடுக்குங் கடவுள டானே**

**பூத்தமிழ் துழாய் முடி புனைந்தோ னாகும்”[9]**

என்னும் பன்னிருபாட்டியல் வழி காப்புப்பருவ முதற்கடவுளாய்த் திருமால் திகழ வேண்டும் என்பது புலனாகிறது. திருமால் காத்தல் கடவுள் ஆதலால் அவரைக் காப்பாக வைத்துப் பாடும் மரபைப் புலவர்கள் பின்பற்றியுள்ளனர். இதன் அடிப்படையில் திரு.மீனவன் அவர்களும் கம்பர் பிள்ளைத் தமிழில் திருமாலினையே முதற் கடவுளாய் வைத்துப் பாடியுள்ளார். தொடர்ந்து சிவபெருமான், சிவசக்தி, விநாயகர், முருகன், நான்முகன், இந்திரன், திருமகள், கலைமகள், சத்தமாதா ஆகியோரைக் காக்கும் கடவுளராய்க்கொண்டு பாடியுள்ளார்.

“உள்ளத்தில் மகிழ்வை ஊட்டி, மனிதனைக் காக்கும் ஆனை முகத்தான் விநாயகனை குழந்தையாய்த் திகழும் கவிமகன் கம்பனைக் காக்க வேண்டிப் போற்றுவோம் **(கம்ப.பிள்.1.1)** செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளைப் பிரியாத மார்பன், எழில் வடிவானவன், விசயனுக்குத் தேரின் சாரதியாய் இருந்து உலகிற்குக் கீதை தந்தவன். இத்தகையோனை கவிதை என்னும் பூவினால் போற்றிடுவோம். இராமனாய் அவதரித்தவனின் கதையினை மகிழ்ந்து பாடப் பிறந்த கம்பனைக் காக்க வேண்டிப் போற்றுவோம்”. **(கம்ப.பிள்.1.2)**

**“பொங்கும் கிழிப்பொன் தருமிபெறப்**

**புகழ்சால் கீரன் வெம்மைபெறப்**

**புலவன் ஆன புரவலனைப்**

**பூந்தா(து) உகுக்கும் நறுங்கொன்றை**

**தங்கும் முடியில் நதிஅரவம்**

**தாங்கும் மதிசால் வேணியனைத்**

**தாயாம் உமையாள் இடத்தவனைத்**

**தண் ஆர் மதுரைத் தனியரசை**

**எங்கும் திருநீற்(று) ஒளிபரப்பி**

**இயலும் சிவனை வணங்குதுமே**

**இதயக் கமலம் தனில் தமிழை**

**இலங்கும் திருஎன்(று) ஏற்றியவன்**

**கொங்கும் நாணக் கவிதரும்ஓர்**

**கோலக் கம்பன் இயல் கவிஞர்**

**குழாத்துள் மன்னன் எனவரும் ஓர்**

**குழந்தை தன்னைக் காக்க என்றே" (கம்ப.பிள்.1.3)**

'உலக உயிர்களைக் காக்கும் ஆதி சக்தியாய் பெம்மானின் தங்கையாய், நான்கு மறையும் உணர்ந்த சிவசக்தியை, ஓயாத தீமை கொண்ட அரக்கரினத்தை அழிக்க உருவெடுத்த இராமனின் கதையைப் பாடிய கம்பனைக் காக்குமாறு வேண்டிப் போற்றுவோம".

'உயிர்களின் கவலையை அறுக்கும் யானை வடிவுடையோன், கருணை மனம் கொண்டான், கொன்றை மாலையை அணிந்து மகிழ்பவன், மரகதம் போன்று ஒளியுடைய உருவினனான விநாயகப் பெருமானை, சீதையின் கணவனான இராமனைப் பற்றி அழகிய காவியம் பாடிய கம்பனைக் காக்கப் போற்றுவோம்'.

'தினைபுனங் காவல் காத்த குறமகள் வள்ளியை வேடனாக வேடமிட்டு மணந்தவன், உயிர்பலவும் படைக்கும் நான்முகனோடு வம்பிட்டுத் தந்தைக்கும் ஏனையோர்க்கும் மறையும் சொன்னவனான முருகனை, இராமபாதம் பணிந்து அவன் புகழ் எழுதிய கம்பனெனும் குழந்தையைக் காக்கப் போற்றுவோம்'.

‘கலைகள் பல கண்ட வெண்கமலத்தினை உடைய கலைமகளின் துணைவன், எண்ணற்ற உயிர்களை உலகிற்குள் உய்வித்த நான்முகனைக் கம்பன் என்னும் குழந்தையைக் காக்கப் போற்றுவோம்’.

‘அமராவதிக்குத் தலைவனும், சிந்தாமணி உடையவனும், காமதேனு உடையவனும், பணி செய்யப் பலரைக் கொண்டவனுமான இந்திரனைக் கம்பனைக் காக்கப் போற்றுவோம்’. **(கம்ப.பிள்.1.4-7)**

**“செந்தா மரையில் சேர் அன்னம்**
**சீர்சால் மாயன் அடிவருடிச்**
**சிந்தைக் கோயில் குடிகொண்டு**
**செகத்திற்(கு) அருளும் பெருமாட்டி**
**சிந்தா குலம்தீர் செல்வமகள்**
**செழிக்கும் கருணைத் திருக்கோவில்**
**செல்வப் பயனை உலகுணரச்**
**செய்யும் திருவை வணங்குதுமே**
**வந்தா தரிக்கும் இனிய குணம்**
**வாய்த்த பெம்மான் தந்தைஉரை**
**வாழக் கானிற்(கு) ஏகியவன்**
**வாழ்க்கைச் சரிதம் கவிஆக்கி**
**கந்தாம் இவள்தான் பற்று கெனக்**
**காட்டும் கருணைப் பெருங்கவியைக்**
**கம்பன் என்னும் திருமகனைக்**
**கருணை செய்து காக்கவென்றே”** **(கம்ப.பிள்.1:8)**

கற்றோரின் நெஞ்சத்தில் ஒளிர்கின்ற கலையாக, நான்முகனின் நாவில் நிற்பவளும், வெள்ளன்னம் கொண்டவருமான கலைமகளை, கைகேயி வரத்தினால் காடேகிய இராமனின் கதையைப் போற்றிப் பாடிய கம்பனைக் காக்கப் போற்றுவோம்.

வேதம் போற்றும் பூமுகத்தினாள், புனிதர்களின் வாழ்வு மேம்பட வேல் கொண்டவள்; கடல் கொண்ட பாம்பின் மீது அமர்ந்தவளான சத்த மாதாவைக் கம்பன் எனும் குழவியைக் காக்கும் படிப் போற்றி வாழ்த்துவோம். (கம்.பிள்.1.9-10) இவ்வாறு கலைமகனாம் கம்பனைப் பத்துத் தெய்வங்கள் காக்க வேண்டிப் போற்றுகிறார். இதில் சத்தமாதா எனும் தெய்வத்தைக் குறிப்பிடுவது படைப்பாளியின் வழிபாட்டுநிலையைப் புலப்படுத்தும்.

இவ்வாறான வரைமுறை இன்றிக் கவிஞர் தம் எண்ணப்படி காப்புப்பருவத்தைக் கையாளும் முறைமை தற்காலப் பிள்ளைத்தமிழ் நூல்களில் காணப்படுகிறது. பாட்டுடைத் தலைவரின் இயல்புக்கு ஏற்ற வகையில் காப்புப் பருவம் பாடப்பெறுகிறது. மீனவன் அவர்கள் கம்பன் அடிப்பொடி கணேசனாரை நாயகனாய்க் கொண்டு பாடிய பிள்ளைத்தமிழில் அகத்தியர், தொல்காப்பியர், நக்கீரர், புகழேந்தி, ஒட்டக்கூத்தன், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், சுந்தரர், தமிழ்த்தாய் ஆகியோரைக் காப்புப் பருவத்திற்குரிய கடவுளராய்ப் பாடியுள்ளார்.

‘முக்கண்கள் கொண்ட சிவபெருமானை, மண்ணில் என்றும் மதிப்பொடு வணங்கும் பொதிய மலை வாழ்கின்ற அகத்தியரை, கலைகள் பல பயின்று, கம்பன் எனும் பாவலனைப் பாரறியச் செய்யப் பிறந்த கம்பனடிப்பொடி கணேசனாரைக் காக்க செய்யப் போற்றுவோம்’.

'பாண்டித் திருநாட்டில் வளர்ந்த தமிழைத் தேர்ந்து கற்ற தெய்வமுனியாம், புகழ் வாய்ந்த தொல்காப்பியம் தந்த தொல்காப்பியரை, கம்பன் கவிதை காக்கக் காரைக்குடியில் பிறந்த கணேசனாரைக் காக்கப் போற்றுவோம்'. **(கம்.அடிப்.பிள்.1)**

**"நெற்றிக் கண்ணன் சிவபெருமான்**
**நேரில் போந்து வாதாடி**
**நெருப்புக் கண்ணால் அச்சுறுத்த**
**நெஞ்சம் குலையா திருந்து தமிழ்ப்**
**பற்றால் சிவன் தன் பகைக்கஞ்சாப்**
**பாவின் செல்வா செவ்வேள்மேல்**
**பாவல் லாற்றுப் படைபாடிப்**
**பத்துப் பாட்டில் இடம்பெற்ற**
**கற்றார் புகழும் நக்கீரா**
**கவிதைத் துறையின் கலைமுடியாம்**
**கம்பன் என்னும் கவியரசின்**
**காலின் பொடியாய் விளங்குபிரான்**
**பற்றிப் போற்றும் விழா வெடுத்த**
**பண்பார் கம்பன் அடிப்பொடியைப்**
**பரவும் சேயை நாள்தோறும்**
**பாது காத்திங் கருள்வாயே" (கம்.அடிப்.பிள்.1.3)**

எண்ணற்ற கவிதை பாடுவதில் வல்லவனும் நன்னாடுடைய நளனை வெண்பாவில் பாடியவனுமான புகழேந்தியைக் காந்தியின் வழி நடந்து, பாரதத்தின் விடுதலைக்குப் பாடுபட்ட கணேசனாரைக் காக்க வேண்டிப் போற்றுவோம்.

'குலோத்துங்க சோழன் போற்றிய சோழ நாட்டு அவைப் புலவனாகிய ஒட்டக்கூத்தனை, தமிழைத் தழைக்கச் செய்த கணேசனாரைக் காக்கும் படிப் போற்றுவோம்'.

‘உமையால் ஞானப்பால் ஊட்டப்பட்டவர், ஊட்டிய அப்பாலால் செந்தமிழ் ஞானம் பெற்றவர், தான் பெற்ற ஞானத்தால் திருமுறை வழங்கிய ஞானசம்பந்த வள்ளலைக் கணேசனாரைக் காக்கப் போற்றுவோம்’. **(கம்.அடிப்.பிள்.1:4-6)**

‘கங்கைச் சடையனாம் சிவனைக் கை தொழ மறுத்து சமண நெறியைக் கைக்கொண்டவன், சூலை நோயினால் அவதிப்பட்டு தமக்கை திலகவதியின் நெறிகாட்டுதலில் சிவனைப் போற்றி நாவுக்கரசரான அப்பரை, சாமிநாதர் சேயாம் கணேசனாரைக் காக்கப் போற்றுவோம்’’.

‘திருவாதவூரின் பெருமை துலங்க வாழ்ந்த இவருக்காகச் சிவன் வனத்தில் உள்ள நரியைப் பரியாக்கி, பரியை நரியாக்கினார். இத்தகைய அன்பை மண்ணில் பெற்ற மாணிக்கவாசகரை, கணேசனாரைக் காக்க வேண்டிப் போற்றுவோம்’.

‘கன்னி இருவரின் கைப்பிடித்தவனும் சிவனின் நட்புக்குரியவனும் ஆன நம்பி ஆரூரான் சுந்தரரை, கம்பர் புகழைக் கனிந்து பரவிய கணேசனாரைக் காக்கப் போற்றுவோம். புலவர் நாவில் பூத்தவன், சங்கப் பாடல்களில் குலுங்கும் புதுமலர், பொங்கும் வைகைப் பூமகள், தென்பொதிய மலையில் வீசும் நறுமணமாம் தமிழ்த்தாயை அவள்தம் சேயான கணேசனைக் காக்க வேண்டுவோம்’. **(கம்.அடிப்.பிள்1:7-10)**

‘இவ்வாறாகத் தமிழறிந்த தகைமையர், தமிழன்னைக்குக் கோயில் அமைத்த சிந்தனைவாதி கம்பன் அடிப்பொடி கணேசனாரைக் காக்கும்படி தமிழுக்கு அணி செய்த மூத்த சான்றோர்களைக் கடவுளாகப் பாவித்துக் காக்குமாறு கவிஞர் வேண்டுவது அவர் தம் புதிய சிந்தைக்குச் சான்றாம்’.

‘கம்பன் பிள்ளைத்தமிழில் மரபு மாறாது காப்புப் பருவத்தைப் படைத்த கவிஞர், கம்பன் அடிப்பொடியாம் கணேசனாரைப் பாடும் பிள்ளைத்தமிழில்

தமிழையும், தமிழ்த்தாயைத் தம் பாமாலையால் அலங்கரித்த தமிழ்ச் சான்றோர்களையும் காப்புக் கடவுளாய்ப் படைத்துப் புதுமை செய்துள்ளார்'.

**செங்கீரைப் பருவம்:-**

பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் இரண்டாவது பருவம் செங்கீரை. "கீர் என்பதற்குச் சொல் எனப் பொருள் கொண்டு இது குழந்தைகள் மழலையை விட இனிமையான பொருள் தெரியாத ஓசையை எழுப்பும் பருவம் என்றும் ஆடுக செங்கீரை எனப்படுவதால் குழந்தை ஒரு காலை உயர்த்தியும் ஒரு காலை மடக்கியும், இரு கைகளையும் நிலத்தில் ஊன்றி முகத்தை மேலே உயர்த்தி ஆடுதலாகிய பருவம் என்றும் அவ்வாறு ஆடும் பொழுது சுற்றத்தார் சிறந்த சொற்களை குழந்தை கூற வேண்டும் என்று வேண்டிக் கொள்வர்"[10] என்றும் கூறுவர்.

குழந்தை தலையெடுத்து முகமசைத்தாடும் நிலையே பெரும்பாலான பிள்ளைத் தமிழ் நூல்களில் காணப்படுகிறது. கம்பன் பிள்ளைத்தமிழ் கம்பனடிப்பொடிப் பிள்ளைத் தமிழ் ஆகிய இருநூல்களும் இவ்வமைப்பிலேயே காணப்பெறுகின்றன.

**கம்பன் பிள்ளைத்தமிழ் - செங்கீரைப் பருவம் சுருக்க விளக்கம்:-**

விசுவாமித்திர முனி கானகத்தில் ஆற்றிய வேள்வியைக் காத்தவனும், எழில் பொருந்திய வாயும், முத்தின் முறுவலும், கயலின் விழிகளும் கொண்ட சீதை என்னும் முழு நிலவைக் கரம் பற்றிய இராமனின் சரிதையினைப் பசுந்தமிழில் பாடவந்த பாவரசனாம் கம்பா செங்கீரை ஆடுவாயாக! **(கம்ப.பிள்.2:1)**

**கார்ஆழி நிறவண்ணன் அவதாரம் பலவாகிக்**

**காட்டும்உயர் உண்மை எல்லாம்**

**ககனங்கள் முடியாக நின்றாடும் உலகத்தில்**

**கடல்போலப் பெருகு மக்கள்**

**நீர்ஆழி அலைபோல நிகழ்கின்ற துயரத்தில்**

**நினைவின்றிச் சிக்கி என்றும்**

**நிலையாக இருக்கின்ற துயர்மாற்றி இன்பங்கள்**

**நிதங்கோடி எய்த வைக்கும்**

**பேராளன் என்றுமறை தினம்பேச வருகின்ற**

**பெம்மானின் ஆடல் எல்லாம்**

**பெருங்காதல் களிகூரப் பெருகிவரு சொல்லாலே**

**பேசுகவி மேகம் ஆனாய்**

**சீராளு கின்றகவி பாராள வருகம்ப**

**செங்கீரை ஆடி அருளே**

**செழிக்கின்ற கவிமாரி பொழிகின்ற கவிமன்ன**

**செங்கீரை ஆடி அருளே (கம்ப.பிள். 2:2)**

‘கரிய நிறம் கொண்டு பெரிய அறம் வளர்த்தவன், கருணை மனம் கொண்ட தயரதனுக்கு மகனானவன், தேவர்களும், முனிவர்களும் அடி தொழும் நாயகன். அரக்கர்களின் பகைவனான நாராயணின் மாண்பைப் பாடிய வான்மீகியை அறிந்து, புரிந்து, அதற்குள் தமிழின் இசை கூட்டி நவின்ற தேரழுந்தூர் புலவரான கம்பனே! செங்கீரை ஆடுக’’.

‘உலகத்தை ஆளும் மன்னருக்கு மன்னராய், கோசலத்தில் வறுமையென்ற சொல் விளங்காத அளப்பரிய தருவினாய், மக்களின் முகத்தில் நகை கூட்டிய, இராமனின் காதையை, அழகிய கவிதையாய் ஆக்கிய பெருமையுடைய கம்பனே! செங்கீரை ஆடுக’.

‘வான் ஆட, வண்டு ஆட, மலர் ஆட, மங்கையர் ஆட, தன்கைகள் அணிந்த தவக் கால் மலர்கள் தாளமோடு ஒன்றி ஆட, கோடித் தமிழ் மலர்களை, சொல் மலரால் ஆடுகின்ற கம்பனே! செங்கீரை ஆடுக’.

‘நிலவு போன்ற நெற்றியில் சுடர் எனப் பொற்சுட்டி ஆட, நினைவு என்னும் தமிழ் மகள் நெஞ்சில் ஆட, காகுத்தனாம் இராமனின் காதைகள் சொல்லி உலகினை மகிழ்வித்த கம்பனே! செங்கீரை ஆடுவாயாக’. **(கம்ப.பிள். 2:3-6)**

‘கரிய மேகம் போன்ற கூந்தல் கதிர்கள் பாய்ந்து ஆட, கயல் போன்ற விழிகளும், மதி போன்ற முகமும் மகிழ்ச்சியில் ஆட, உயர் அறம் என்னும் மழை கம்பனின் உரைதனில் ஆட, ஆடுக! செங்கீரை ஆடுக’.

‘வெண்கமலத்தில் அமர்ந்திருக்கும் கலைமகளின் அருளால், இதழ் திறந்து தேனாய்க் கொட்டிடும் பாக்களைப் பாடிய கவிக் கம்பரே! செங்கீரை ஆடி அருள்க!’

‘பொங்கி வருகின்ற மழை ஒரு கோடி முத்துக்களாய் மலைகளில் சிதறுதல் போல், அறியாமை எனும் புலம் உழுது கல்வி என்னும் மழை பாய்ச்சிய கம்பனே செங்கீரை ஆடி வருக!’

‘மண்குளிர உழவர் மனம்குளிர பெய்த மழையால் உழவர்கள் நிலத்தில் விதைத்துப் பேணி, உரம் இட்டு விளைச்சலை அறுவடை செய்து தனிவருவாய் காணும் மருதத்தின் புகழ் ஓங்கிய சோழ நாட்டில் சொல்லால் தமிழ் வளர்த்த கம்பனே! செங்கீரை ஆடுக!’ **(கம்ப.பிள். 2:7-10)**

கம்பனின் கவித்திறம், கம்பனின் கவித்திறத்தால் சிறக்கும் இராமனின் மேன்மை, ஆகியவை மீனவனின் சொல் திறத்தால் செங்கீரையில் சிறக்கின்றது.

**கம்பனடிப் பொடி பிள்ளைத்தமிழ் - செங்கீரை:-**

**நீதிவளர் சோணாட்டில் ஆதிமுதல் மனுநீதி**
**நெறிநின்றோர் பெருமை காக்கும்**
**நெஞ்சமுடன் பாராண்டு பகல்மரபின் வழியோர்ந்த**
**நிகரில் புகழ் வேந்தன் ஆகி**
**மாதரசி மூவர் மனை அரசியென மணங்கொண்ட**
**மாமன்னர் தயர தற்கே**
**மகனாகி மகிழவென மன்பதைக்கு வந்துமால்**
**மானிடநல் வடிவு கொண்டு**
**வேதவழி கரிபரிநல் விற்பயிற்சி வசிட்டன்பால்**
**வியன்துறைகள் கற்றுத் தேர்ந்து**
**வீரர்குல திலகமென விளங்குமொரு கலைவில்லி**
**வித்தகங்கள் விளங்க வைத்த**
**சீதமொழிக் கம்பனடி சேவிக்கப் பிறந்தவன்நீ**
**செங்கீரை ஆடி அருளே**
**சீர் கொண்ட கவிகொண்டு செந்தமிழில் உரைசெய்தாய்**
**செங்கீரை ஆடி அருளே (கம்ப..பிள். 2:1)**

‘ஐம்பூதங்களின் கலவையாய் விளங்கும் உலகில் செல்வத்தின் கலவையாய் அவதரித்தவன் இராமன். சிற்றன்னை சொன்ன வழி கேட்டு அதன்படி நடக்க முடிவெடுத்துச் சீதையொடும் இளவலோடும் சென்ற அன்பினன் இராமனை வழிபட்டவன் கம்பன். அக்கம்பனைத் தன் தெய்வமாய்ப் போற்றிய கணேசனாரே!’ செங்கீரை ஆடுவாயாக.

‘கைகேயியின் வரத்தால் கானகம் சென்ற இராமனின் பின் அயோத்தி வாழ் மக்களெலாம் துயர் கொண்டு பின் சென்ற காட்சியைப் படம் வரைந்தாற் போல் உரைத்தவன் கம்பன் அவனது அடியைச் சேவிக்கப் பிறந்த கணேசனாரே! செங்கீரை ஆடுக!’

‘ஆலிலையில் துயில் கொள்ளும் திருமாலின் அவதாரமாகிய இராமனின் திருக்கதையை, போற்றி விளக்கியவன் கம்பன். காரை நகரில் பிறந்து எண்ணற்ற கவிகள் பாடிப் பண்புடையவனாய் பலவிடத்து அக்கம்பனைப் பாடிய கணேச! செங்கீரை ஆடுக!’ **(கம்ப.அடிப்.பிள்.2:2-4)**

‘நாடாள வேண்டும் என்னும் ஆசை இல்லாமல் பெற்றவர் சொல் காக்க, உற்றவர் வருந்திஅழ கானகம் சென்ற இராமனது கதையை உருக்கமாய்ச் சொல்லிய கம்பனை உளம் வைத்த உத்தமனாம் கணேசனாரே செங்கீரை ஆடுக!’

‘கல்விக் கடலாய்க் காணும் முனிவர்களின் கருத்தில் இருப்பவன், முக்தியடைவதற்கு வழிகாட்டும் முதல்வன் இறைவன் என்று முற்றும் துறந்தவன், திருமாலின் அடி பற்றிப் பணியாற்றும் கம்பன், அவனைத் தூய தமிழில் பாடிப்போற்றி வணங்கும் கணேசனாரே ஆடுக!’**(கம்ப.அடிப்.பிள். 2:5)**

**அடையாக் கதவன் அஞ்சேல் என்றிங்**
**கருளும் சொல்லானாய்**
**அளவில் நிதியம் அளிக்கும் கொடையன்**
**அருள்சேர் சடையனிடம்**
**உடையான் கம்பன் உள்ளான் என்றே**
**உவக்கும் தமிழ்ச்சோழன்**
**உள்ளக் கிடக்கை உணர்ந்தே இராமன்**
**உயர்ந்த சரிதத்தை**
**மடைபாய் வெள்ளம் எனுமாம் படியே**
**மணியாம் கவிதையினால்**

**மகிழ்ந்து சொன்னான் அடியில் வீழ்ந்த**
**மாண்பார் அடிப்பொடியே**
**தடையே இன்றித் தமிழைச் சொல்வாய்**
**செங்கோ செங்கீரை**
**தமிழ்த்தேர் கம்பன் திருவடி சேர்வாய்**
**செங்கோ செங்கீரை (கம்ப.அடிப்.பிள்.2:7)**

வளம் நிறைந்த சோழ நாட்டை ஆளும் சோழனின் அவைக்களப் புலவனும், விருத்தப் பா பாடுவதில் வல்லவனுமான கம்பனைத் தலைமேல் ஏற்றிப் புகழ்ந்த கணேசா! செங்கீரை ஆடியருள்க!

கம்பனின் திருவடியைக் காலமெலாம் போற்றிக் கம்பனுக்கு விழா நடத்தி, பெற்றவர் மகிழ பெருமையுடன் காரை நகரில் வாழும் கணேசா! செங்கீரை ஆடி அருளே!

உலகத்தைத் தன் அடியால் அளந்த பெருமானை வாழ்த்தி அவனது புகழை வளமான கவிதை வடிவில் தந்த கம்பனின் காலில் பொடியனாய், அவனைக் கடவுள் எனக் கண்ட கணேசா! செங்கீரை ஆடுவாயாக! **(கம்ப.அடிப்.பிள்.2:8-10)** என்று கம்பனடிப் பொடி கணேசனாரை, கம்பன் புகழ்பாடி செங்கீரை ஆடச் செய்வர் கவிஞர் மீனவன்.

**தாலப்பரும்:-**

பிள்ளைத் தமிழின் மூன்றாம் பருவம் தாலப் பருவம் ஆகும். இது குழந்தையின் ஏழாம் திங்களில் நிகழ்வது ஆகும். தால் என்பது நாக்கு நாக்கை அசைத்துத் தாலாட்டி குழந்தைகளைத் தூங்க வைக்கப் பாடுவது இப்பருவமாகும். பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் ஒரு பருவமாக விளங்கும் தாலாட்டு நாளடைவில் தனியொரு சிற்றிலக்கியமாக உருப்பெற்றமை குறிப்பிடத்தக்கது.

குழந்தைகள் தூங்க இயற்கை ஒத்துழைக்க வேண்டும் என்பதால் மீனவன் இரு பிள்ளைத்தமிழ் இலக்கியத் தாலப் பருவத்திலும், இயற்கையை அதிகம் பாடியுள்ளார்.

**கம்பனுக்கான தாலாட்டு:-**

**பங்கப் பழனத்(து) எழுவாளை**
**பாயத் தெங்கின் காய்உடைந்து**
**பாயும் புனலோ(டு) எழுகுவாளைப்**
**பைந்தேன் பாயக் கமலமலர்**
**தங்கும் அன்னப் பார்ப்பினங்கள்**
**தன்வாய் மடுத்தே உண்(டு) உவக்கத்**
**தளரும் மடிசார் மேதிஇனம்**
**தன்வாய் குதட்டும் கருநீலும்**
**பொங்கும் செந்தேன் வழிந்(து) ஓடிப்**
**பூவார் கழனித் தடம்பாயப்**
**பொலியும் சாலி வான்பார்க்கும்**
**பொன்னித் துறைசேர் வளநாடா**
**கங்கைப் பெருக்காய்க் கவிபுனையும்**
**கம்பா தாலோ தாலேலோ**
**காகுத் தன்தன் சீர்பாடும்**
**கண்ணா தாலோ தாலேலோ (கம்ப.பிள்.3:1)**

‘ஓதுகின்ற மறையின் பொருளை உணரத் துடிக்கும் முனிவர்கள், உள்ளத்தை அடக்கி ஒரு காலில் தவம் ஏற்பது போல, மோதும் அலைகள் நடுவில் பெருமீன்களைக் காண கொக்கினங்கள் ஒற்றைக் காலில் நிற்கின்றன.

தவளையினம் விரும்பி ஒலிக்கும் நீரினதாய், கயல் இனங்கள் மகிழ்வுடன் துள்ளும் மணிமகுடமாய் இயற்கையில் சிறந்து விளங்கும் சோழ நாட்டில் பிறந்த கம்பனே! தாலோ! தாலேலோ!'

'பொன்னால் ஆன கதிர் கொண்டு சூரியன் வர, உழவர்கள் உழும் வயல் நடுவில் வெண்சங்கினங்கள் காணப்படுகின்றன. கெண்டை மீன்கள் துள்ளி விளையாடும் நீர்த்துறையைக் கொண்ட பொன்னி வளநாட்டைச் சார்ந்த கம்பனே! தாலோ! தாலேலோ!'

'பசித்தவரின் முகம் பார்த்து அருள் செய்யும் சடையப்ப வள்ளலைப் போல, குடகு நாட்டில் இருந்து வழிந்து ஆறாய்ச் சென்று, வயல்வெளிகளைச் செழிக்கச் செய்யும் காவிரி பாயும் கம்பநாடனே! தாலோ! தாலேலோ!' **(கம்ப.பிள்.3:2-4)**

'முத்தையும், பவளத்தையும், முழுநிலவையும், முழுதுமாக வெல்லும் முகம் கொண்ட பெண்கள் முல்லைக் காட்டினில் பொழுது விடிந்ததும் தம் வீட்டு உழவர்களை முகம் மலர வரவேற்கின்றனர். அவர்களைத் தழுவி இன்பம் எய்தி மக்கள் மகிழ்ச்சி பொங்கும் நாடு சோழ நாடு, அந்நாட்டைச் சேர்ந்த கம்பரே! தாலோ! தாலேலோ!'

'மழையின் ஒரு துளிதனைத் தன் உடலில் ஏற்று, முத்தாக மண்ணில் வெளியிடும் சிப்பி போல், அழகிய மகளிர் தம்மை ஏற்று இனிய சொல் தர மாட்டரோ எனத் தலைவர்கள் ஏங்கி நிற்கின்றனர். இத்தகைய அழகு பொருந்திய மகளிர் வாழும் சோழ நாட்டில் பிறந்த கம்பா! தாலோ! தாலேலோ!'

'தாமரைப் பூவினில் விளைந்த தேனும், ஏனைய மலர்களில் காணும் புதிய தேனும் புரண்டு பாய்ந்து ஓடும் கழனியுடை சோழநாட்டுக் கம்பனே! தாலோ! தாலேலோ!'

‘மேகம் சூலுடைந்து சடையப்பனின் கொடைபோல் மழைபொழிய அம் மழைநீர் சங்கக் கவிதைபோல் பெருகிச் சங்கையும், மீனையும், இன்னபிற மணிகளையும், சேர்த்துக் குறித்து ஓடி நெல்லாகிய பெண்ணின் பாதம் சேரும் நாட்டை உடைய கம்பனே தாலோ! தாலேலோ!’ **(கம்ப.பிள். 3:5-8)**

**பாம்பும் மதியும் பகை மாறப்**
**படரும் வேணி தணிற்சூடும்**
**பரமன் அருளுக்(கு) உரியமுனி**
**பரவை ஏழும் வயிற்(று) அடக்கித்**
**தேம்பும் தேவர் துயர்தீர்த்த**
**தெய்வப் புலமை அகத்தியனார்**
**திருக்கைக் கரகத்(து) உள் அடங்கித்**
**திகழும் வையம் வாழ்வுபெறக்**
**கூம்பா மலரும் கழனிகளும்**
**குளிர்ந்து திகழக் கால்வாங்கிக்**
**கோதை மகளிர் உடைநழுவக்**
**குதிக்கும் பொன்னித் திருநாடா**
**காம்பார் பூப்போல் கவிதைதரு**
**கம்பா தாலோ தாலேலோ**
**காகுத்தன் தன் சீர்பாடும்**
**கண்ணே தாலோ தாலோலோ (கம்ப.பிள்.3:9)**

‘வயல்களின் இடையே மலரும் ஆம்பலை ஒத்த விழிமாதர்களை நினைத்துக் கொண்டிருக்கும் மள்ளர்கள் வயல்களில் துள்ளித் திரியும் மீன்களைத் தம் தோகையரின் கண்கள் என மயங்குகின்றனர். இத்தகைய இன்பக் காட்சி உடைய

மருத நாட்டில் பிறந்தவனே! வள்ளல் சடையனால் வாழ்வு பெற்ற கம்பனே தாலோ! தாலேலோ!' **(கம்ப.பிள்.3:10)** என்று தாலாட்டுவர்.

**கம்பன் அடிப்பொடிக்கான தாலாட்டு:-**

குயிலோசையும், வண்டோசையும் சிறக்கக் காணப்படும் பொன்னிநதியின் நீர் வள சோழ நாட்டில் பிறந்த கம்பன், கார் வண்ணனின் பெருமையைப் பாடி மனமகிழ்ந்தவன், இத்தகைய கம்பனின் பெருமையைப் பாடி மன மகிழ்ந்த கணேசனே தாலோ! தாலேலோ!

மரக்கொம்பில் உள்ள கிளிகளெல்லாம் மழலையாய்ப் பேசக் கூடிய கோலநகர் மிதிலையில், அன்னை மைதிலியை இராமபிரான் கைக்கொள்ளும் காட்சியை உரைத்த கம்பனிடம் பற்றுக் கொண்டவர். கொப்புடைய அன்னை ஆளும் காரை நகரைச் சார்ந்த சாமிநாதருக்கு மகனாய்ப் பிறந்த கணேசனே! தாலோ! தாலேலோ! **(கம்.அடிப்.பிள்.3:1-2)**

இதில் தாலாட்டும் குழந்தையின் ஊரும், தந்தையின் பெயரும் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

**"அம்பார் கண்ணி கொப்புடைய**

**அன்னை ஆளும் காரைநகர்**

**அப்பா சாமி நாதர் மகன்**

**ஆகம் பிறந்தாய் அறிவுடையாய்" (கம்ப.அடிப்.பிள்.3:2)**

என்னும் அடிகள் புலப்படுத்தும்.

'முதலும், முடிவும் அறியாதவன், அரக்கர் குலத்துக்குப் பகைவன், பந்தமற்ற முனிவர்களைக் காண மென்மையான சீதையோடும் உண்மையான இளவலோடும் வனம் சேர்ந்தவனுமான இராமனது காதையைச் சீர்மிகு கவிதையால் செவிகளுக்கு

அளித்த கம்பனது அடியைத் தன் சிரம் மீது வைத்துப் போற்றும் கணேசனே! தாலோ! தாலேலோ!'

'தெய்வக் குறுமுனி வளர்த்த தேன் தமிழ் மொழியினில் தேறியவனும், ஒளிதரும் சோதியாம் உத்தமன் இராமனின் புகழைப் பரவியவனும், கவிக்கு அரசனானவனும் ஆன கம்பனைக் குறைவிலாது கற்ற கணேசனே! தாலோ! தாலேலோ!'

'பூமித் தாயினின்று பிறந்த புண்ணிய வடிவாம் சீதையின் அழகிய விழி என்னும் வலைகளில் சிக்கி அவளை மணந்து இன்பம் கண்ட இராமனது சரிதையை நவின்ற கம்பனின் நலமதை நாளும் போற்றி அவனை வணங்கித் தொழும் கணேசனே! தாலோ! தாலேலோ!' **(கம்ப.அடிப்.பிள்.3:3-5)**

'பண்டைய வரலாற்றையும், பத்திப் பனுவலையும் படித்துச் சிறந்த கணேசனார், கம்பனுக்குத் தொண்டனாகித் தமிழ் வளர்த்தார். குடியிற் சிறந்த காரைக்குடி மக்கள் எல்லாம் போற்றும் தன்மையான கணேசா! தாலோ! தாலேலோ!' **(கம்ப.அடிப்.பிள்.3:6)**

'வான், மண், காற்று, நீர், நெருப்பு ஆகிய ஐந்தாய், உலகின் வித்தாகி அடியார் இதயத்தில் நிலைத்திருப்பவன் நாராயணன். இந்த உலகைக் காக்க இராமன் என்ற வடிவாய்ப் பிறந்தவனின் வரலாற்றைக் கவியால் உரைத்த கம்பனின் அடிப்பொடியாம் கணேச! தாலோ! தாலேலோ!'

'பேரறிஞர் அண்ணா தமிழக முதல்வராயிருந்த போது நிகழ்ந்த உலகத்தமிழ் மாநாட்டின் காட்சிப் பொறுப்பை ஏற்றுச் செம்மையாய்ச் செய்து முடித்த கல்விக் கடலாம் கணேசா தாலோ! தாலேலோ!' **(கம்ப.அடிப்.பிள்.3:7-8)**

**“அண்ணா என்னும் அறிஞர்பிரான்**

**அழகுத் தமிழ் நாடாளுங்கால்**

**அகிலஞ் சார்ந்த மாநாடாய்**

**அமைந்த இரண்டாம் மாநாட்டில்**

**கண்கள் உவப்ப அமைத்திடுகண்**

**காட்சித் திறத்தின் பொறுப்பேற்றுக்**

**களிக்கச் செய்த கணேசன் (கம்ப.அடிப்.பிள்.3:8)**

போர் இல்லா வாழ்க்கை நலம், பெரியாரைத் துணைகொண்ட வேந்தரின் நல்லாட்சி, புரட்சி செய்யாக் குடிமக்கள் சேரும் நாடே சிறந்த நாடு என நவிலும் தேரழுந்தூர்ப் புலவன் கம்பனைத் தன் கவியால் புகழும் கணேசா தாலோ! தாலேலா!

கதராடை அணிந்து, காலம் அறிந்து பணி செய்பவன், கலங்கா நெஞ்சம் கொண்டவன், கம்பனின் உள்ளம் கண்டவன், தன்னைச் சுடவந்தவரின் முன் அஞ்சாத நெஞ்சைக் காட்டி நின்றவன், சோம்பல் இல்லாதவன், சட்டை அணியாமல் சட்டசபைக்குச் சென்றவன், மூதறிஞர் இராசாசி வழியில் சென்றவனுமான கணேசா தாலோ! தாலேலோ! **(கம்ப.அடி.பிள்.3:9-10)**

**“கட்டும் ஆடை கதராடை**

**காலம் அறிந்து பணிசெய்வாய்**

**கலங்கா நெஞ்சம் கொண்டவன் நீ**

**கம்பன் உள்ளம் கண்டவன் நீ**

**சுட்டுக் கொல்ல வந்தார் முன்**

**சோர்வில் நெஞ்சைத் தான் காட்டிச்**

**சோரா திருந்தாய் எந்நாளும்**

**சோம்பல் இல்லா துழைத்தவன் நீ**

**சட்டை அணியா மார்போடு**

**சட்டசபைக்கும் சென்றவன் நீ**

**சாலச் சிறந்த மூதறிஞர்**

**சக்கர வர்த்தி இராசாசி**

**சுட்டும் வழியில் சென்றவனே**

**சுடரும் அறிவா தாலேலோ**

**சொல்லார் கம்பன் அடிப்பொடியே**

**சொல்லுக் கரசே தாலேலோ" (கம்ப.அடிப்.பிள்.3:10)**

**சப்பாணிப் பருவம்:-**

சப்பாணிப் பருவம் குழந்தையின் ஒன்பதாம் திங்கள் நிகழ்வதாகும். ஒன்பதாவது மாதத்தில் குழந்தை உட்காரத் தொடங்கிய பிறகு மகிழ்ச்சியால் கை கொட்டுதல், கையாட்டுதல் போன்ற விளையாட்டுகள் அதனிடம் இயல்பாகத் தோன்றும். பெற்றோரும், மற்றோரும் கைதட்டிக் காட்டி குழந்தையை அழைப்பதோடு குழந்தையையும் கை தட்டும் படி வேண்டுவர். குழந்தை அதற்கேற்ப **"சப்"** என்ற ஒலி உண்டாகும் படி "**பாணி"** யைக் (கையை) கொட்டி முழக்கும். இதுவே சப்பாணிப் பருவம் ஆகும். குழந்தை நிமிர்ந்து அமர்ந்திருக்கும் அமைப்பைச் **'சப்பாணி'** என்றும் கூறும் வழக்கமும் உண்டு, அதனால் இப்பருவம் சப்பாணி என்றும் "சக+பாணி =சப்பாணி; சக = உடன், பாணி =கை இரண்டு கைகளையும் உடன் சேர்த்துக் கொட்டுதல் சப்பாணியாயிற்று"[11] என்றும் கூறுவர். பிள்ளைத்தமிழ் நூல்களில் உள்ள சப்பாணி பருவச் செய்திகள் வருமாறு.

**கம்பன் பிள்ளைத்தமிழில் சப்பாணிப் பருவம்:-**

**‘**கடல் சூழ்ந்த உலகில் இடையில் எழுந்த மனிதகுலம் துயரத்தில் ஆழ்ந்து சிதைந்த போது பாம்பணையைத் துறந்து, மனித குலத்தை மீட்டெடுக்கப் பாரில் பிறந்தவன் பரந்தாமன். அவனது திருவடி பற்றிப் புகழ்ந்து எழுதிய கம்பனின் கையே சப்பாணி கொட்டுக!’

‘உலகம் நீடுழி வாழ, கரிய நிறத்தான் திருமால் கோதண்டம் என்னும் வில் ஏந்திப் பிறந்த இராமனாம் மனித தெய்வத்தின் மாண்பினை மலர்க் கவிதையால் இயற்றிய கை சப்பாணி கொட்டுக!’

‘நான்முகன் முதல், தேவர், தும்புரு, நாரதர் என் அனைவரும் போற்ற அரவம் மீது ஆடிய குழவியாம் கண்ணன், இராமனாய் அவதரிக்க, அரவமும், சங்கு ஆழி இரண்டும் அவர்தம் சகோதரர்களாய்ப் பிறப்பெடுத்து இலங்கையில் வளரும் அரக்கர் இனத்தை அழிக்கும் காட்சிகளை அழகாகக் காட்சிப்படுத்திய கை சப்பாணி கொட்டுக!’ **(கம்ப.பிள்.4:1-3)**

‘சம்பரதனை அழித்த தயரதன் மகன் இராமனை விசுவாமித்திர முனி தனது வேள்வியைக் காக்க வேண்டிக் கேட்ட பொழுது யானையின் இடையில் வந்து அம்பு தைத்தாற் போன்ற வேதனையைத் தயரதன் அடைந்தான். அவனது வருத்தத்தை அழகு தமிழில் எழுதிய கை சப்பாணி கொட்டுக!’

‘விண்ணிருந்து நீங்கிய ஒரு மின்னலை மேகலையாய் இடையில் தாங்கி, குவளை மலர் போன்ற கண்களையும், தாமரை முகத்தையும் கொண்டு, பால் அமுதொத்த பசுமையான மயிலாம் எழில் வடிவு சீதையை விழிகளால் கண்டு இராமன் எய்திய காதலை அழகிய தமிழால் எழுதிய கை சப்பாணி கொட்டுக’.

‘உலகில் வாழ்வோர் எல்லாம் புகழும் வண்ணம் இராகவனின் திருச்சரிதத்தை விரும்பி, விருத்தத்தால் எழுதிய பொய் அறியாக் கவிமகன் கம்பனின் கை சப்பாணி கொட்டுக’. **(கம்ப.பிள்.4:4-6)**

**கங்கையின் இருகரை ஆண்டிடு காவலன்**

**கருமுகில் வென்றவன் ஓர்**

**களி(று) என வரும்உடல் கொண்டவன் வலிதரு**

**கார்சிலை தாங்கியவன்**

**பொங்கிடும் அன்பினில் அன்னையை நிகர்தரு**

**புண்ணிய வடி(வு) உடையான்**

**பூமகள் நாயகன் மேல்வளர் பத்தியில்**

**பொலிதரு மனம்உடையான்**

**பங்கம்இல் நட்பினுக்(கு) ஒரு குகன் என்(று) உல(கு)**

**ஓதிடு பரி(வு) உடையான்**

**படர்சிலை வேடுவ னின்புகழ் புவிமிசை**

**பலர் உளம் போற்றுவணம்**

**கொங்(கு) அலர் மலர்என வருகவி எழுதுகை**

**கொட்டுக சப்பாணி**

**குளிர்புனல் காவிரித் துறைவளர் கம்பநீ**

**கொட்டுக சப்பாணி (கம்ப.பிள்.4:7)**

‘கற்பினுக்கு அணியான சீதையை இலங்கையில் கண்டதாக உரைத்தவன், கடத்தற்குரிய மலையையும் கடலையும் கடக்கும் ஆற்றல் கொண்டவன், மலை நிகர்த்த தோளினை உடைய அனுமனின் தோள் வலிமையை அழகாய்த் தீட்டிய பெருமைக்குரிய கம்பனின் கை சப்பாணி கொட்டுக!’

‘சீதையை இராவணன் கவர்ந்து சென்ற போது அவளைக் காக்க முற்பட்டுத் தன் சிறகு இழந்து, இராவணனின் முடி சரித்து, இராமனின் அணைப்பினில் உயிர் விட்ட பறவை சடாயுவின் சரித்திரத்தைச் சுவையாய் எழுதிய கம்பனின் கை சப்பாணி கொட்டுக!’

‘கருமுகில் அனையவனான இராமன் நகர்வழி வரும்போது மைவிழியால் சீதையும். கௌசலை மகனும் ஒருமித்துப் பார்த்த சங்கமத்தின் விளைவாய்ப் பிறந்த அன்பை, தமிழகம் முழுவதும் பரவிய கை சப்பாணி கொட்டுக!’ **(கம்.பிள்.4:8-10)**

‘கம்பன் பிள்ளைத்தமிழில் காணப்படும் சப்பாணிப் பாடல்கள் இராமாயணத்தில் காணும் கதைப் பாத்திரங்களான இராமன், சீதை, அனுமன், சடாயு, குகன் போன்றோரின் சீரிய பண்பைக் கூறுமுகமாய் அமைந்துள்ளமை சுட்டத்தக்கது’.

**கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழுக்குரிய சப்பாணிப் புருவம்:-**

செல்வக்குடிகளில் சிறந்த குடியாய்ப் புகழ்பெற்ற காரைக்குடியில் செட்டி குலத்தைச் சார்ந்த சாமிநாதனின் குழந்தையாய் நிலத்தில் வந்தவன், புகழ் பெற்று வாழ்ந்தவன், கம்பனை ஏத்தி அவன் அடி தொழுதவனுமான கணேசா, சப்பாணி கொட்டுக!

குரங்கினப் படையோடு சென்று, ஈழத்தின் கோமகன் இராவணனை வதம் செய்து; குலம் செய்த தவத்தவள் ஆன சீதை தீக்குளிக்க, தன் தம்பியிடம் தீ மூட்டக் கூறினான். அவனது சொல்லை ஏற்றுத் தீக்குளித்த சீதையின் மனத்திறத்தை அழகான கவிகளில் விதைத்தவன் கம்பன். அவனது காற்பொடியாய் வாழ்ந்த கணேசனே சப்பாணி கொட்டுக.

வேதத்தின் முதல்வனை, வில் கொண்ட பெருமகனை, அயோத்தியில் பிறந்த முத்தை, அரவத்தைப் பஞ்சணையாய்க் கொண்டு துயில் கொள்பவனை, புண்ணியனான புனிதனாம் இராமனைப் பாடிய கம்பனின் பாதம் வணங்கும் பெருந்தகை கணேசனே! போற்றி! போற்றி! **(கம்.அடிப்.பிள்.4:1-3)**

இறைவனை மறவாத நெஞ்சினர், அன்றாடம் இறைவனைப் போற்றி அன்பு செய்பவர், வைசியர் குலத்து வந்து தமிழுக்கு அடிமையானவர், இத்தகைய வரமுடைய செல்வனாம் தேரழுந்தூர் மன்னன் கம்பன் முன் அடிப்பொடியாய் வந்தவனே! தமிழ்க்கடல் இராயசொ வாக்கினில் இனிமை கண்ட கணேசனே சப்பாணி கொட்டுக! **(கம்ப.அடிப்.பிள்.4:4)**

**“செட்டியார் குலங்கண்ட சீதனம் எனவந்த**

**செய்யவா சாமிநாதன்**

**செல்வனே கற்பகம் சேர்கோயில் வழியிலே**

**சிறப்புடைய புள்ளி யானாய்**

**எட்டாத கலைகளை ஏடாண்ட தமிழினை**

**இறைவியாய் மதித்து வாழ்ந்ததாய்**

**எச்சபைகள் ஆயினும் அச்சபையில் உன்மதி**

**ஏற்றமாய் இருக்க வைத்தாய்**

**கிட்டாத திருவினை விடுதலைப் போரினில்**

**கேடுற்றார் கொண்ட போதும்**

**கிளர்ச்சியில் மாறாத மனத்தோடு சிறைசென்ற**

**கேண்மையால் உயர்ந்து நின்றாய்**

**சட்டையே போடாத சாவன்னா கணேசனே**

**சப்பாணி கொட்டி அருளே**

**சரித்திரம் வென்றகவிக் கம்பன்வழி வாழ்பவா**

**சப்பாணி கொட்டி அருளே'' (கம்ப.அடிப்.பிள்.4:5)**

'சேவையைக் கண்ணாகக் கருதும் ஜீவா செந்தமிழில் உரையாற்ற வல்லவர். திருச்சி நகரைச் சார்ந்த சரசுவதி இராமநாதன் பேச்சுக்குப் பெயர் பெற்றவர். இவர்கள் இருவரையும் கொண்டு வந்து காரை நகரில் கம்பனுக்கு விழா எடுத்து, இங்கு தமிழ் வளர்த்த செம்மல் கணேசனார் சப்பாணி கொட்டுக!'

'குற்றாலத்து அன்பரான புகழ் பெற்ற டிகேசி, கம்புடன் மேடையில் ஏறி கம்பரசத்தைக் காட்டுபவர். அவரின் அன்பினுக்கு உகந்த கணேசா சப்பாணி கொட்டுக!'

'காதில் ஒரு கொப்பை உடைய கோமகளாம் கொப்புடைய அம்மனைத் தொழுது ஏற்றம் பெரும் காரைக்குடியில் அவதரித்தவனே! இராமனின் காவியத்தைக் கவிநயத்துடன் உரைத்த கம்பனின் அடிப்பொடியே! கணேசா! சப்பாணி கொட்டுக!'

'கற்பரசியாம் சீதையின் வாழ்வில் இருளாய் வந்த வல்லமை படைத்த அரக்கர்களின் தோளைக் கிழித்த இராமனின் மேன்மையைக் கூறிய கம்பனின் அடிப்பொடியாய்த் திகழும் வணிகர் பலர் தழைக்கும் காரைக்குடி நகர் வாழ் கணேசா! சப்பாணி கொட்டுக!'**(கம்ப.அடிப்.பிள்.4:6-9)**

**கல்விக் கென்று பெருங்கோடி**
**காரைக் குடியில் செலவிட்டோன்**
**காலம் மறவாக் கொடையழகன்**
**கண்டே மகிழும் நட்புடையாய்**
**செல்வம் பொலியும் தமிழ்க்காரை**
**செய்த தவத்தின் பயனாகச்**
**சிறந்த குடியில் பிறந்தவனே**

**செந்தேன் பிலிற்றும் செந்தமிழில்**

**சொல்வான் கம்பன் சொல்கவியைச்**

**சொல்லிச் சொல்லி மகிழ்ந்தவனே**

**சுடர்வில் ஏந்தும் இராமபிரான்**

**சொரிந்த பகழித் திறம்பாடும்**

**கல்விக் கம்பன் அடிப்பொடியே**

**கையால் கொட்டுக சப்பாணி**

**கவிதைக் கம்பன் உயிரானாய்**

**கையால் கொட்டுக சப்பாணி (கம்.அடிப்.பிள்.4:10)**

சப்பாணிப்பருவப் பாடல்கள் கணேசனாரின் தமிழ்த் தொண்டினை விளக்குவனவாய் அமைந்துள.

**முத்தப் பருவம்:-**

பிள்ளைத் தமிழின் ஐந்தாவது பருவம் முத்தப் பருவம் ஆகும். குழந்தையின் பதினோராம் திங்களில் நிகழும். முத்தப்பருவம் சிறந்த பருவமாகக் கருதப்படுகிறது. குழந்தையைப் பாராட்டி மடியில் தூக்கி வைத்துக் கொண்டு, அதன் மலரினும் மெல்லிய இதழ்களால் முத்தம் பெற்று மகிழ்தலே முத்தப் பருவம் ஆகும். பாட்டுடைத் தலைவனைக் குழந்தையாக்கி அதன் முத்தத்திற்கு ஏங்கும் கவிஞர்களின் நிலையை எல்லாப் பிள்ளைத் தமிழ் நூல்களிலும் காணலாம். அப்போது பாட்டுடைத் தலைவனின் சிறப்புகள் பலவாறு புகழப்படும். மீனவனது பிள்ளைத்தமிழ் நூல்களும் இதற்கு விதிவிலக்கல்ல.

**கம்பன் பிள்ளைத்தமிழ் காட்டும் முத்தப் பருவச் செய்திகள்:-**

வாளை மீன்கள் தாவும் வயலிடையே உள்ள நீர்நிலைகள் எல்லாம் மேகமாய் நின்று பொழிகின்ற மழைநீர் ஆறாய்ப் பெருகி தென்னம் பாளையை உடைத்துக் கொண்டு வந்து வயல்களில் சேர்கிறது. நீரில் கலந்த தேறலின்

மயக்கத்தில் பயரினங்கள் பரதம் ஆடுகின்றன. பறவையினங்கள் காளை மாடுகளின் முதுகின் மீது நிற்கக் கூடிய மருதநிலம் வளம் நிறைந்த பெண்ணான பொன்னியாம் காவிரியால் விளைந்தது இத்தகைய அழகிய நாட்டை உடைய கம்பா முத்தம் தருவாயாக!

உலகில் வாழும் மக்கள் அனைவரின் மனதிலும் கருணை வடிவாய் இருப்பவனும், பிறைபோன்ற நெற்றி கொண்ட பேதையாம் சீதைக்காக வில் முறித்தவனும், திண்ணிய தோள்களைப் படைத்தவனுமான பரம்பொருள் இராமனைத் துதிபாடிய கம்பா! முத்தம் தருவாயாக!

தாமரை மேல் படுத்திருந்த அன்னமும், அதன் பெடையும் அசைய, அப்பூவிலிருந்து வரும் தேன் வழிந்து ஓடி ஆற்றிலும், அதன் மணற்பாங்கான நிலத்திலும் சேர அந்நிலத்திலிருந்து செழித்து வளரும் செல்வம் கொழிக்கும் கதிர்களால் இன்பம் சேரும் மருதநாட்டில் பிறந்து உயர் அறங்கள் செய்து, என்றென்றும் திருமாலைப் போற்றி நிற்கும் கம்பனே! முத்தம் தருகவே!

**(கம்ப.பிள்.5:1-3)**

நிலவில் கூட கருமை நிறம் காணப்படும் ஆனால் தூய்மையான பல வெண்மைநிறக் கோபுரங்களில் சிறு கறை கூடக் காணப்படுவதில்லை, தேவனது வாயில் வைத்து ஊதும் சங்கையே வெல்லும் அழகிய நிறத்தினாலான மனைகள் பலவற்றைக் கொண்ட நகர்வளத்தைத் தன் கவிதையால் காட்சிப்படுத்திய கம்பனே முத்தம் தருவாயாக!

கோசலத்தில், வறுமை என்னும் சூழல் இல்லாத காரணத்தால் கொடைத் தன்மை இல்லை; எதிர்த்து வரும் பகைமை இல்லாக் காரணத்தால் வலிமை இல்லை; தீய பொய்கள் இல்லாத காரணத்தால், உண்மையைத் தேடிச் செல்லத் தேவையில்லை. இவ்வாறாகக் கோசல நாட்டின் வளமாய், தன் மனதில் உள்ள உயர்ந்த நாட்டின் இலக்கணம் படைத்தவனே முத்தம் தருவாயாக!

கடல்வாழ் முத்தினையும், சோலையின் இடையில் வளர்ந்து சிரிக்கும் முல்லையினையும் ஒன்றாகச் சேர்த்தும் செய்த ஒலிமுகமாய் விளங்கி, தன் மழலைக் கவி மொழியால் பெற்றோரின் மனம் குளிரச் செய்யும் கம்பா, முத்தம் தருவாயாக! படமெடுக்கும் அரவத்தின் மேல் நடனமாடியவன், பார்த்தன் மகிழத்தேர் ஓட்டியவன், பாவம் தொலைக்க வந்த மாயன், பன்னிரு ஆழ்வாரின் சிந்தனைத் தடத்தில் பூத்தவன். இத்தகைய புகழ் கொண்ட திருமகனை, இராமகாதையால் பேசிப் பேசிப் மகிழ்ந்த கம்பா, உன் திருஇதழால் முத்தம் தருகவே! **(கம்ப.பிள்.5:4-6)**

**ஞாலம் அளந்த திருவடிகள்**

**நயந்தோர் ஐவர்க்(கு) ஆகவென**

**நடந்த தூதின் திறங்கண்டு**

**நற்றேன் ஒழுகும் தமிழ்மாலை**

**காலம் முழுதும் நிலைக்கவெனக்**

**கருதிச் செய்த ஆழ்வார்தம்**

**கருத்துள் பொருந்தித் தமிழ்மாயன்**

**கடல் சூழ் இலங்கை நகர் அரக்கர்**

**சீலம் தவறி மறம் இழைக்கச்**

**சீறி அழித்த ரகுராமன்**

**சிறப்பைக் கவிதைச் சிமிழ் அடக்கிச்**

**செகத்திற்(கு) அளித்த சிறப்(பு) உடையாய்**

**கோலக் கவிதை நலம்பாடும்**

**குளிர்வாய் முத்தம் தந்(து) அருளே**

**குறையாப் புலமைத் தமிழ்க்கம்ப**

**குளிர்வாய் முத்தம் தந்(து) அருளே (கம்ப.பிள்.5:7)**

கோதையாம், ஆண்டாளின் தமிழ் கேட்டுக் குளிர்ந்து அரங்கத்து அரவத்தின் மேல் கோலம் கொண்டு உலகத்தைக் காத்து அருளும் கோமானும், ஆதி கடவுளாம் மாயனுமான திருமாலின் திருவுருவைப் பாடிய வாயால் கம்பா! முத்தம் தருகவே!

கைகேயியின் வரத்திற்கு இசைந்து, சீதையுடன், இளவல் இலக்குமணனோடும் காடு ஏகும் இராமனின் நிலை கண்டு செல்வம் யாவும், மக்களோடு மக்களாய் நகர் விட்டு நீங்கிய காட்சியை, அருமைத் தமிழால் உணர்த்திய வாயால் கம்பா! முத்தம் தருகவே! **(கம்ப.பிள்.5:8-10)**

இப்பருவத்தில் சோழநாட்டு இயற்கைவளம், கம்பனின் கருத்தில் மிளிர்ந்த இராமகாதைக் காட்சிகள் போன்றவை அதிக அளவு இடம் பெற்றுள்ளன.

**கம்பன் - அடிப்பொடிப் பிள்ளைத்தமிழ் முத்தப் பருவச் செய்திகள்:-**

வையம் காக்கும் அரசனுக்கு பின் செல்வச்செழிப்பில் மிளிரும் வணிகர் குலத்தின் திலகமாய் வந்தவனே! அன்னையாம் தமிழ்த்தாய்க்குக் கோயில் கொண்டவனே! தமிழைக் கற்று, சிறந்த கலைஞர்களின் துணையோடு நீ செய்த கோவிலின் அழகைச் சொல்ல மொழியில்லை. சிறந்த படைப்பாற்றல் பெற்று, கம்பனின் அடிப்பொடியாய் வாழ்ந்தவனே! கணேசா! முத்தம் தருவாயாக!

காராம் பசுவின் பாலில் முழுக்காடி, செந்தேன் பூக்கள் பலசூடி, சிறந்து விளங்கும் திருவுடையாளாம், கொப்புடையாளுக்கு என்றும் விழாக்காணும் காரைக்குடி நகரில், மங்காத கவியால், மதிக்கின்ற பெரியோனாய் நின்று கம்பனின் அடிதொழுத கணேசா! முத்தம் தருவாயாக. **(கம்ப.அடிப்.பிள்.5:1-2)**

**செங்கண் காராப் பசுவினங்கள்**
**சிந்தும் பாலில் முழுக்காடிச்**
**செந்தேன் பூக்கள் பலசூடிச்**
**சிறந்து பொலியும் திருவுடையான்**

**எங்கும் அடியர் இசைபாடி**

**ஏத்தும் அன்னை கொப்புடையாள்**

**என்னும் சக்தி விழாக்காணும்**

**இனிய காரைக் குடிநகரமாய்**

**மங்காக் கவிசொல் மாக்கம்பன்**

**மதிக்கும் கவியை மதிக்கின்ற**

**மதியாய் கம்பன் அடிப்பொடியே**

**மாண்பார் கம்பன் பாக்களிலே**

**முங்கித் திளைக்கும் வீடு தமிழ்**

**முத்தே முத்தம் தருகவே**

**மூவாக் கம்பன் அடிப்பொடியாம்**

**முதல்வா முத்தம் தருகவே (கம்ப.அடிப்.பிள்.5:3)**

அன்னையாம் திருமகளை, தாமரை வாழ் தேவதையை, இராமனின் மனம் கவர்ந்த சேயிழைாம் சீதையைத் தயரதனின் புதல்வன் இராமன் பொன்னார் மிதிலையில் கரம் பற்றிய காட்சியைச் சிறப்பாய் விரித்துரைத்த கம்பனுக்கு அடியவனாய் வாழும் கணேசா! முத்தம் தருவாயாக!

தங்கத்தாமரை போன்றவளாம், சீதை மயில் போல் நடந்து மான் போல் மருண்டு, நயனத்தால் நாணங் கொண்டு மண் பார்க்க நடக்கும் அப்பெண்ணாளின் நலங்கண்டு நாணைத் தொடுத்து வென்று மங்கைக்கு மாலையிட்ட செய்தியை, அழகாய்க் காட்டும் கம்பனின் அடிப்பொடியாம் கணேசா! முத்தம் தருகவே!

சீதையவள் கண்ணால் மயங்கிக் காதலால் வில் வளைத்தவன் இராமன், அவனது ஆருயிராம் அவளை அறியாது எடுத்த இராவணனின் மார்பை அம்பால் துளைத்தான் அவனது சிறப்பைப் பாவால் உரைத்த பாவலன் கம்பனின் அடிப்பொடியே முத்தம் தருவாயாக! **(கம்ப.அடிப்.பிள்.5:4-6)**

அழகிய வயல்வெளிகளைக் கொண்டு எழிலுறத் திகழும் சோழநாட்டை ஆண்ட சோழனின் அவையில் அகிலம் போற்ற அமைந்த கவியானவன் கம்பன் துள்ளும் சந்த விருத்தத்தினால் தூய ராமனின் வரலாற்றை வடித்த அவனது அடிப்பொடியால் என்றும் திகழும் கணேசா முத்தம் தருகவே!

கரன் என்னும் அரக்கனைப் பொடியாக்கிப் புகழினைச் சுமந்த வலிமையான இராமன், தன் இல்லாள் சீதையொடும், இளையவன் இலக்குமணனோடும், கானகம் சென்று அங்குவாழ் முனிவர்களின் துன்பத்தைக் களைத்தவன். அவனுடைய பெருமையை ஆற்றல் மிகு கவிதையாய்த் தந்த கம்பனின் அடிப்பொடியாம் கணேசனே! முத்தம் தருகவே!

திருமகளை குலமயிலாய்ப் பெற்ற சனகனின் தவச்சாலையின் அழகு காண வரும் இராமன் சீதையின் கண்ணம்பால், அமுதச் சொல்லால், அடிபட்டு உள்ளம் தடுமாறி வில் வளைத்தான். அவனது ஆற்றல் மிகுந்த காவியத்தை அழகு தமிழில் வடித்த கம்பனின் அடிப்பொடியே! தமிழ்த்தாய்க்கு கோயில் கண்டவனே! கணேசா! முத்தம் தருகவே!

இம்மை, மறுமை இரண்டிற்கும் மூலம் இராமன் என நான்கு மறைகளும் உரைப்பதாக எழுதும் கம்பனின் கவிதை நலத்தைச் சீர்பாடும் கணேசா! முத்தம் தருகவே!

செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளைத் தழுவி வாழும் பொற்புடையான் இராமனின் புகழ்பாடும் கம்பனின் அடிப்பொடியே! முத்தம் தருகவே! **(கம்ப.அடிப்.பிள்5:7-10)**

இவற்றுள், இராமன்சீதையின் அன்பு, கணேசனாரின் பண்பு போன்றவை பலவாறாகப் பேசப்பட்டுள.

**வருகைப் பருவம்:-**

ஆறாவது பருவமாகிய வருகைப் பருவம் குழந்தையின் பதின்மூன்றாம் திங்கள் நிகழ்வதாகும், இதனை வாரானைப் பருவம் என்றும் போற்றுவர். வரவேற்றல் என்பது தமிழர் பண்பாட்டில் தலை சிறந்த ஒன்றாகும்.

இப்பான்மையில் தோன்றியதே வருகைப் பருவமாகும். தத்தித் தத்தித் தளிர்நடை இட்டும் வரும் குழந்தையை அருகில் வருக! வருக! என் வாய் குளிர மெய்மகிழ அழைக்கும் பருவம் வாரானைப் பருவம். குழந்தையை அவ்வாறு வரவேற்கும் பொழுது அதன் சிறப்புகளையெல்லாம் எடுத்துச் சொல்வர்.

**கம்பரை வரவேற்கும் செய்திகள்:-**

குன்றை ஒத்த சம்பரனைக் கொன்று அன்று தன் உயிர் காத்த கைகேயிக்கு தயரதன் இரண்டு வரத்தை வழங்கினான். அதை நினைவில் கொண்டு இராமனைக் காடேகச் சொன்ன கைகேயியின் வார்த்தையைக் கேட்ட தயரதனின் நிலையைக் கவியால் உரைத்த கம்பா வருக! வருக!

தயரதனின் மாண்பினை, தகைசால் முனிவர்களிடம் அவன் பணிந்து போன திறத்தினை முத்தமிழால் முழங்கும் கம்பா! வருக! வருக!

அடர்ந்த வனத்தில் தான் செய்யும் தவத்திற்கு இடையூறு அளிக்கும் அரக்கர்களை அழித்துப் பெருவேள்வியைத் தடங்கல் இன்றிக் காக்க, இராமன் என்னோடு காடேக வேண்டும் என விசுவமுனி கூறியதைக் கேட்ட தயரதனின் நிலையைத் தூய தமிழில் வடித்த கம்பனே வருக! வருக!

மிதிலைக் கோமகனாம் சனகன் கண்ட மகளாம் சீதை, மேகத்தை ஒத்த கூந்தலை உடையவள், பூவின் இதழ் கொண்ட பாதம் உடையவள், அவளின் புதுமை அழகைத் தமிழில் தேனூற்றி வடித்த கம்பனே வருக! வருக! **(கம்ப.பிள்.6:1-4)**

தென் திசைத் தலைவன் அந்தகனும் அச்சம் எய்தும் அரசனாம் இலங்கை அதிபதியே! நெடிய மரம் சூழ்ந்திருக்கும் கானகத்திற்கு வர வேண்டிய காரணம் என்ன என்று இயம்ப வேண்டும் என வினவி, இராவணனிடம் இருந்து பல உறுதிகள் பெற்றுக்கொண்ட பின் தன் இறுதியைக் கண்ட மாரீசனின் தன்மை பாடிய கம்பனே! வருக! வருக!

தென்றல் தவழும் சோலை, தேன் சிந்தும் பூச்செடிகள், அதனை உண்டு மயங்கும் வண்டுகள், மணம் கமழும் தாமரைகள், மயிலாடும் வயல்கள் எனும் வளமிக்க மருத நாடாம் சோழநாட்டில் பிறந்த கம்பனே! வருக! வருக!

இராமனை எதிர்க்கப் படை வருவதாக நினைத்து, செங்கனல் வீசும் விழி கொண்டு தன் வேடர் குலத்தை ஒன்று திரட்டி, கொடு கொட்டி, கொம்பு முழக்கி, தன்சேனை கொண்டு பரதாழ்வானை எதிர்த்து நின்ற குகனின் கொள்கையை வடித்த கம்பனே! வருக! வருக!

தாய் போன்ற சீதையைச் சிறைவைத்த இராவணனின் இலங்கைக்கு கடல் தாவிச் சென்று, பாயும் சிங்கம் எனப் பகைவரிடம் தன் திறம் காட்டி, தீயிட்டுக் கொளுத்தி, பண்பின் உருவாம் சீதையினைப் பார்த்துச் செய்தி பல பகர்ந்த இராமனது நேசனான அனுமனின் திறம் பாடிய கம்பனே! வருக! வருக!

கன்றின் ஓசை கேட்ட பசுக்கூட்டங்கள் மனம் மகிழ்ந்து விரைவாய் இல்லம் சேர, அவைகளின் மடிமுட்டிப்பால் குடிக்கும் கன்றுகள் சிதறும் பால் ஓடி நிறைந்து சேறாக மாறும் முற்றத்தை உடைய மருதநிலத்தில் பிறந்த கம்பனே! வருக! வருக! **(கம்ப.பிள்.6:5-9)**

**ஓதப் புணரி இடைஎழுங்கார்**

**உருவம் ஒத்த மேதிஇனம்**

**ஓங்கு செந்தேன் உடன் மல்கி**

**ஓடும் கழனி இடைமுளைத்த**

**சீதக் கமலச் செவ்விதழைச்**

**சேர்த்துக் குதப்ப வாழ் அன்னம்**

**சிந்தை குலைந்து பறந்(து) ஓடச்**

**சேற்று நண்டு வளைபுக்குப்**

**பாதிக் கண்ணால் பார்த்(து) இருக்கப்**

**பாடும் கிள்ளை இனம்கூடிப்**

**பச்சை இலைமேல் காட்சிதரப்**

**பார்த்த வளம்சால் நா(டு) உடையாய்**

**வேதப் பொருளை விளக்கியஓர்**

**வித்தே கம்பா வருகவே**

**வெற்றிக் கவிதைத் தமிழ்வேந்தாய்**

**விளக்கும் பெம்மான் வருகவே (கம்ப.பிள்.6:10)**

**கம்பன் அடிப்பொடி கணேசனாரின் வருகைப்பருவச் செய்திகள்:-**

பூமித்தாயின் காவலனாம், கோசலையின் தவப் புதல்வன் இராமனின் அருளைப் பாடிப் பரவியவனாம் கம்பனின் தாளைப் பரவிப் போற்றிய கணேசா வருக! வருக! **(கம்ப.அடிப்.பிள்.6:1-3)**

வெற்றித் திருவாம் சீதையை விரும்பி வில் வளைத்து மணந்த இராமனின் வீரத்தையும், புகழையும், பரவசமான காவியமாய்த் தந்த கம்பனின் அடியைச் சோதியென வணங்கி, அவனது சொல் வழி நின்ற கணேசா! வருக! வருக!

தயரதனின் பாலகனாய், சனகனின் மருமகனாய், முத்துப் பல்லாள் சீதையின் கொழுநனாய். முதலும் முடிவும் இல்லாதவனாய்க் காணப்படும் இராமமூர்த்தியின் புகழைச் சிந்தை மகிழப் பாடும் கம்பனின் அடிப்பொடியாம் சாமிநாதன் பெற்ற கணேசா! வருக! வருக!

**படையார் அரக்கன் வலிசாயப்**

**பகழி தொடுத்த ரகுராமன்**
**பண்டை மறைகள் பரவுபுகழ்**
**பலவும் கொண்ட பரந்தாமன்**
**அடையார் புரங்கள் அன்றழித்தான்**
**அன்புக் குகந்த மைத்துனனாய்**
**அமைந்தான் நாமம் எட்டெழுத்தின்**
**ஆற்றல் மறவாத் தமிழ்க்கம்பன்**
**தொடையார் கவிதைத் தேன் மாந்தித்**
**தொடர்ந்து பிறர்க்கும் அளித்துவந்த**
**தூயாய் கம்பன் அடிப்பொடியே**
**துலங்கும் தியாகப் பேரொளிமேல்**
**ஆடை அணியாப் பீடுடையன்**
**ஆனாய் வருக வருகவே**
**அல்லும் பகலும் தமிழ்வளர்த்த**
**அரசே வருக வருகவே (கம்ப.அடிப்.பிள்.6:4)**

வணிகர் மரபின் குலத் தோன்றலாய், வளமார்ந்த செட்டித் திருநாடாம் காரை நகரில் குழவியாய் அவதரித்து கம்பன் பால் தணியாத காதல் கொண்ட கணேசா வருக! வருக!

வள்ளல் தயரதனின் புதல்வனாய் மண்ணில் பிறந்து மக்களுக்கெல்லாம் உவகை அளித்த பரந்தாமனைப் பாடிய கம்பனின் அடிப்பொடியே வருக! வருக!

மன்னர்கள் எல்லாம் வாழ்த்தும் மாண்புடைய மரபில் வந்த தயரதனின் இனிய தேவி கோசலையின் மகனாய்ப் பிறந்த கருணைக் கடலாம் இராமன், தன்னைத் தொடரும் இலக்குமணனோடும், தளிர் நங்கை சீதையோடும் கானகம்

சென்ற காட்சியைக் கவிபாடிய கம்பனின் அடிப்பொடியே வருக! வருக!

**(கம்ப.அடிப்.பிள்.6:5-7)**

கானகம் போவென்று சொன்ன கைகேயியின் கால்களைப் பணிந்து விடைபெற்ற தெய்வ மகன் இராமனை, நலம் தரும் நாயகனைப் போற்றிய திருமகன் கம்பனின் புகழை உணர்ந்தும் போற்றிய கணேசா! வருக! வருக!

ஓர் வில் சுமந்த உத்தமனும், உலகு காக்க கடல் விட்டு வந்த நாயகனுமான இராமனின் நயமுரைத்த கம்பனின் நலம் பாடிய கணேசா! வருக! வருக!

கண்ணால் கண்டு காதல் கொண்டு வில் ஒடித்து, வளை அணிந்த சீதையைத் தன் மனையில் சேர்ந்த கதையைப் பாடிய கம்ப நாட்டாழ் வானை, நாளும் வணங்கி விழா எடுத்த கணேசா! வருக! வருக **(கம்ப.அடிப்.பிள் 6:8-10)**

**அம்புலிப் பருவம்:-**

அம்புலி என்பது சந்திரனைக் குறிக்கும். விண்ணில் விளங்கும் சந்திரனை விளையாட வருமாறு அழைக்கும் பருவமே அம்புலிப் பருவம் ஆகும். பிள்ளையின் பதினைந்தாம் திங்களில் இது நிகழும் நடக்கக் கற்றுக் கொண்ட குழந்தை அங்குமிங்கும் சென்று காட்சிகளைக் காண மிகுதியாக விரும்பும் பிள்ளைக்கவிக்கு அம்புலி புலியாம் என்பதன் மூலம் இப்பருவத்தின் சிறப்பை உணரலாம். வெண்ணிலவை குழந்தையுடன் விளையாட வருமாறு அழைக்கும் பொழுது, குழந்தையுடன் சரி நிகராக அம்புலியை எண்ணுதல், அம்புலியும் குழந்தையும் வேறுபடுதல், விளையாட வருவதனால் ஏற்படும் நலன்களைக் கூறுதல், வருந்தி அழைத்தும் வரவில்லையாயின் இன்ன தண்டனை பெறுவாய் என்று கூறுதல் எனச் சாம, பேத, தான, தண்ட முறையில் அமைவது இப்பருவமாகும். அவ்வாறு அழைக்கும் பொழுது சிலேடை முதலிய அணி இலக்கணங்கள் அழகுற அமையும்.

இவ்வகையான இலக்கண முறைமையை அப்படியே மனதில் ஏற்று செம்மையுறத் தன் பிள்ளைத் தமிழில் மீனவன் கையாண்டுள்ளார்.

**கம்பர் பிள்ளைத்தமிழில் காணப்படும் அம்புலிப் பருவச் செய்திகள்:-**

கடல் இடையில் எழுந்து உலகை வலம் வந்து இதயத்தில் மகிழ்ச்சி செய்யும் நிலவே, உன்னைப் போலவே தமிழ்க் கடலின் இடை எழுந்து கவியரயசராய் வலம் வருகிறான். மதியாகிய உனை விரும்பிப் புலவர் பாடுகின்றனர். தமிழ் உலகில் மதி எனும் அறிவைப் புகழ்கின்றனர் நீல வானில் நீ உலகோர் வாழ்த்த வாழ்கிறாய். கவிவானில் கம்பன் கவிதை பலபாடி வாழ்கிறான், இத்தகைய கம்பன் அழைக்கிறான், அம்புலி ஆட வா!"

மண்ணுலகில் நிலவே நீ பொன் முகத்திற்கு உவமையாவாய், பொன் வடிவுடைய சீதையின் மதிமுகத்தைக் கம்பன் பாடினான். உன் ஒளியை உலகோர்க்குத் தருவது போல, தன் கவி ஒளியைக் கம்பன் பாய்ச்சுகிறான், விண்மீன்கள் படைதொடர நீ உலகைப் பார்க்கிறாய்! கம்பனோ, புலவர் பலர் பின் தொடர வருங்காலம் பார்க்கிறான் இத்தகைய கம்பன் அழைக்கிறான். அம்புலி ஆட வா? இப்பாடலில் அம்புலியோடு குழந்தையை வேறுபடுத்திக் கூறும் பேத இலக்கணம் அமையப்பெற்றுள்ளது.

உணவுக்கு இரண்டு கலைகள் மட்டுமே உண்டு, காகுத்தன் காதை சொல்லும் கம்பனுக்கோ எண்ணற்ற கலைகள் தெரியும். நிலவே! நிலையில்லாமல் தேய்ந்து வளர்ந்து புகழ் பெறுகிறாய். கம்பனோ நிலையான புகழ் கொண்டு விளங்குகின்றான். இத்தகைய கம்பன் அழைக்கிறான் அம்புலி ஆட வா! **(கம்ப.பிள்.7:1-3)**

நிலவே! உலகாளும் மாயவனின் இதயம் பொருந்தும் ஒரு தன்மை தான் நீ பெற்றாய், கம்பனோ, பூவுலகில் அவனைத் தன் மார்பில் ஏற்று புகழ்பெற்று வாழ்கிறான், இத்தகைய கம்பன் அழைக்கிறான் அம்புலி ஆட வா!

நிலவே! விடம் உண்ட சிவன் முடியில் இருப்பதால் மட்டும் இறுமாப்புக் கொள்ளாதே. கம்பன் கடலிடைத் துயில் கொள் மாயவனின் புகழை அனைவரும் அதிசயிக்கும் வகையில் தந்த அவனது புகழ் உன்னைக் காட்டிலும் பெரிது அவன் அழைக்கிறான். அம்புலி ஆட வா!

பன்னெடுங்காலம் முதல் இன்று வரை தக்கன் இட்ட சாபத்தால் நிலவே நீ தேய்ந்து கொண்டே போகிறாய். ஆனால் கம்பனோ தன் சங்கீத வார்த்தைகளால், என்றென்றும் வாழ்கிறான், இத்தகைய சிறப்பு வாய்ந்த கம்பனொடு அம்புலி ஆட வா! **(கம்ப.பிள்.7:4-6)**

தமிழில் உள்ள கவிகள் அனைத்தும் கம்பன் பாடும் வண்ணம் கேட்டு நல் இன்பம் பெற்று மகிழ்ந்திடும். கொஞ்சி வரும் நிலவான நீ, இவன் பாடல் கேட்டு மகிழ்வாயாக!

வளர்கின்ற தமிழால் நிலவே உன்னையும் கம்பன் ஆதரிப்பான். எனவே அவன் அழைத்ததை எண்ணி வந்து அம்புலி ஆட வா! **(கம்ப.பிள்.7:7-8)**

**நெறி கொண்ட உலகத்தில் மேல்உற்ற நெடுவானில்**
**நீ உற்று வாழ வேண்டில்**
**நெஞ்சுற்ற கவிமாரி பொழிகின்ற கவிவாணர்**
**நினை(வு) உற்று வாழ வேண்டில்**
**குறிகொண்ட எல்லைக்குள் அடங்காத கடவுள்எனக்**
**குவலயத்தில் வாழ வேண்டில்**
**குறையாத நில(வு) என்னும் கதிர்கொண்டு இல்வுலகத்தைக்**
**குளிர்விக்கும் தன்மை வேண்டில்**

**செறிகின்ற புலமைக்குள் உறைகின்ற இவனோடு**

**விளையாட ஓடி வாநீ**

**செகம் அளந்த மாயவனைத் தன்கவியுள் அடக்கியவன்**

**சினம்மீறிச் சீறி நின்றே**

**அறைகின்ற சொற்சாபம் தனை அடைதல் மெய் ஆகும்**

**அம்புலீ ஆட வாவே**

**ஆற்றல் உள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்**

**அம்புலீ ஆட வாவே (கம்ப.பிள்.7:9)**

இப்பாடலில் குழந்தைக் கம்பனுடன் விளையாடுவதினால் எய்தும் பயனும், வரவில்லையாயின் எய்தும் சாபமும் பேசப்பட்டுள்ளது இது தான, தண்டம் இரண்டையும் எடுத்துரைக்கிறது.

நிலவே எண்ணற்ற கேள்வி ஞானம் கொண்ட கம்பனொடு நீ ஆட வரவில்லை என்றால், உனக்கு இழிவும் சாபமும் வந்து சேரும். அதனால், இரக்கத்தோடு நான் சொல்வதைக் கேட்டு அம்புலியே ஆட வா!**(கம்ப.பிள்.7:10)** அம்பலிப் பருவத்தில், சாம, பேத, தான, தண்டம் என நான்கு நிலைகளிலும் குழந்தையோடு விளையாட வருமாறு அழைக்கும் முறை காணப்பெறுகிறது.

**கம்பர் அடிப்பொடியொடு விளையாட அம்புலியை அழைத்தல்:-**

தென்னிலங்கை முழுவதும் ஆளும் பேறு பெற்றோனை அனந்தன் இராமனைப் புகழ்ந்துரைத்த கம்பனைப் புகழ்பவன் கணேசன், முழுநிலவாம் உன்னையும் அவன் புகழ்வான். அவனொடு அம்புலீ ஆட வா!

நிலவே நீ! வாடையில்லாத வசந்த நாளொன்றில் முழுமதியாய் வானில் தோன்றினாய், விண்மீன்களின் இடையில் அழகாய்க் காணும் உன்னை, கண்டு மக்கள் களிப்புறுவர். இராகவனைத் தமிழாலே பாடிய கம்பனைப் புகழும் கணேசனோடு அம்புலீ ஆட வா! **(கம்ப.அடிப்.பிள்.7:1-2)**

இவ்விரு பாடல்களும், முழுமதியினின்று வேறுபடும் குழந்தையைக் காட்டிப் பேத இலக்கணத்தைப் பேசுகின்றன.

தேவரெல்லாம் தொழ, பூமி உயர்வு பெற மாயவனாம் திருமால் உலகு காத்த செய்தியை விருத்தமெனும் நளின நடையில் கவிதையாக்கிய கம்பனின் அடியைப் போற்றி அவனை நாடே தொழ வைத்த கணேசன், நிலவே உன்னை அழைக்கின்றான். தினம் மெலியும் உன்னைத் தன் கவி மருந்தால் திண்மையாக்குவான் கணேசன் அவனொடு ஆட வா! **(கம்ப.அடிப்.பிள்.7:3)**

மேற்சுட்டப்பட்டுள்ள பாடல், குழந்தை கணேசனோடு விளையாடுதலால் ஏற்படும் பயனை எடுத்துச் சொல்லித் தான இலக்கணத்தோடு பொருந்தி நிற்கிறது.

தாமரையில் வாழும் திருமகளின் முகம் போன்று ஒளி வீசும் முழுநிலவே கேள்! கடலைக் கடையுங்கால் உள்ளிருந்து திரண்டோடி வந்தவன் நீ! நீ உன் பொன் உடலில் கறை பெற்றுள்ளாய். அதனைத் தன் பூந்தமிழ்ப் பாடலால் போக்குவான், அவன் அழைப்பிற்கு இணங்கி அம்புலியே ஆட வா!

நிலவே! உன்னையும் மதி என்று அழைப்பர்! உயர்ந்த அறிவையும் மதி என்றும் அழைப்பர். மதி என்னும் பெயரால் நீயும், கணேசனும் ஒன்றானீர்! காரை மக்கள் புகழும் அவனுடன் ஆட நீ வர வேண்டும்!

இப்பாடல், கணேசனும், அம்புலியும் ஒன்றென எடுத்துக் கூறும் சாம இலக்கணத்தைப் பேசுகிறது.

அரவம் உன்னை விழுங்கும் போது பூமியில் நஞ்சென்று உணவுண்ண மறுப்பர். விண்ணின் ஆலவாயிலிருந்து நீ வெளி வந்த பின்னே உண்பர். உன்னையும் ஏற்றுக் கணேசன் அழைக்கிறான், அம்புலி ஆட வா! இல்லையெனில் அவனது சினத்திற்கு ஆளாவாய்! **(கம்ப.அடிப்.பிள்.7:4-6)**

**கண்ணிலிரு சுடருடையன் கவின்சடையன் மிசையமர்ந்த**

**காரணத்தால் கர்வம் உற்றாய்**

**கற்றவர்கள் போற்று புகழ்க் கம்பனடிப் பொடியழைத்தும்**

**காதிரண்டும்கேளா தான்போல்**

**விண்ணிடையில் வலம் வந்தாய் விளையாட மறுக்கின்றாய்**

**வெற்றிவில் உடைய வேந்தன்**

**வில்லிதாள் பணிகம்பன் அருள்பெற்றான் ஆற்றலினால்**

**வேகமுடன் சபித்தல் செய்வான்**

**மண்ணிடையில் நீ வந்தாய் வேதநெறித் திறமுரைத்தே**

**மதித்துன்னை ஏற்றுக் கொள்வான்**

**மதியறிந்தான் சினமறியாய் மற்றவனும் முறையறிவான்**

**மதியாமல் இருப்பாய் என்னில்**

**அண்ணலிவன் வசைபெறுவாய் அழைக்கின்றான் கணேசன்**

**அம்புலீ ஆட வாவே**

**ஆர்த்ததமிழ் நாவுடைய மூத்தபெரும் அறிஞனுடன்**

**அம்புலீ ஆட வாவே (கம்ப.அடிப்.பிள்.7:7)**

இப்பாடலில் குழந்தை கணேசனுடன் விளையாட மறுத்தால் கிடைக்கும் தண்டனையைக் கூறும் தண்ட இலக்கணம் பேசப்பட்டுள்ளது.

இராம காவியத்தைச் சீராகப் பாடி வைத்த கம்பனது அடி மறவாதவன், கலைகள் அனைத்தும் கற்று உலகு போற்றப் பரப்புதல் போல் உன் ஒளியை நீ பரப்புகிறாய், இருவரும் இதனால் சமமானீர், அம்புலி ஆட வா, இல்லையேல் வசை வாங்க நேரிடும்.**(கம்ப.அடிப்.பிள்.7:8)**

இப்பாடலில், பேதமும், தண்டமும், ஒருங்கே பயன்படுத்தப் பட்டுள்ளமையை அறியலாம்.

நாடு தரும் தந்தையுடைய நாணயத்தைக் காக்கத் தன் நாயகியோடு கானகம் சென்ற நாயகனின் கதையினை நாவினால் அளந்த கம்பனின் நடை

நயத்தை உலகெல்லாம் பரவிய அடிப்பொடி கணேசன் உன்னை அழைக்கின்றான். வந்தாயெனில் உன்னை நாளும் வாழ்த்துவான் ஆதலால் அம்புலி ஆடி வா!

சூரியனின் குழந்தை என்று முனிவர்கள் உன்னைக் கூறுவர். குளிர்ந்த சடையில் அமரும் பேற்றால் நீ வளர்மதி ஆனாய்! கம்பனின் சேவடியை நாளும் தொழும் கணேசன் உன்னை அழைக்கின்றான். இன்னும் ஏன் வரவில்லை! அம்புலி உடனே ஆட வா! **(கம்ப.அடிப்.பிள்.7:9-10)**

இதனுள்ளும் சாம, பேத, தான, தண்டம் சரியான முறையில் பொருந்தி வந்துள்ளது. இதன் முலம் மீனவன், அம்புலி பாடுவதில் தான் புலி என்பதை நிறுவியள்ளார்.

**சிற்றில் பருவம்:-**

சிற்றில் இழைத்தல் / சிற்றில் சிதைத்தல் பதினேழாம் திங்களில் இப்பருவம் பாடப்படும். இதன் முந்தைய பருவத்தில் அம்புலியை விளையாட அழைத்து அது வாராத போது கோபம் கொண்ட குழந்தை பெண் குழந்தைகள் கட்டிய சிற்றிலைச் சிதைக்கிறது. அப்போது அதனைக் கட்டிய பெண்மக்கள் எல்லாம் எம் சிற்றிலைச் சிதைக்க வேண்டா! என வேண்டுமுகமாய்ப் பாடப்படுவதே இப்பருவமாகும், ஏனைய பருவங்கள் எல்லாம் பெற்றோரும், மற்றோரும் பாடுவதாக அமைய இப்பருவம் மட்டும் சிறுமிகள் பாடுவதாக அமையும்.

**கம்பர் பிள்ளைத்தமிழின் சிற்றில் பருவம்:-**

மிகுந்த தோள் வலிமையுடைய குகன், அன்பன் பரதனது கானக வரவைத் தவறாய்ப் புரிந்து இராமனுக்காக அவனை வெல்வேன் என எதிர்த்து நின்றான் பரதனின் அன்பு மொழி கேட்டுப் பின் மாறினான் அவனது கொள்கையை அழகாய்ப் பாடிய கம்பனே! எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம்.

பொய்யே அறியாது இருக்கும் உன் புகழுக்கு நாங்கள் அடிமையானோம். கானகத்தில் இருக்கும் உமக்கு தேன், கனி தரும் உவகையை அடைந்தோம், எம்மோடு ஒரு நாள் இருக்க வேண்டும் என்று வேண்டிய குகனின் கொள்கை உரைத்த கம்பனே எங்கள் சிற்றில் சிதைக்க வேண்டாம்.

உள்ளம் மகிழப் பணி செய்யும் குகனைத் தழுவி **“கள்ளம் அறியாத நீ என் தம்பி, கன்னியாம் சீதை நின் கொழுந்தி”** என உரை செய்த இராமனின் மனதைப் பாடிய கம்பனே! எங்கள் சிற்றில் சிதைக்க வேண்டாம்.

கானகத்தில் இராமன் செல்லப் பாதை அமைப்பேன் கனி, காய் கொண்டு தருவேன். உயிர் கொடுத்து உயிர் காப்பேன் என்னும் குகனது உண்மை உள்ளத்தைப் பாடிய கம்பனே! எங்கள் சிற்றில் சிதைக்க வேண்டாம்.

**(கம்ப.பிள்.8:1-4)**

**அன்னான் குகன்தன் உரைகேளா(து)**

**அண்ணல் அவனைத் தனிநோக்கி**

**அன்போ(டு) எந்தைக்(கு) இன்றுமுதல்**

**ஐவர் மக்கள் உன்னுடனே**

**மன்னும் பரதன் அவன் ஆள**

**மற்(று)இக் கானம் நீ ஆள்க**

**மாறா எந்தை ஆணைவழி**

**மான்கண் சீதை உடன் ஆள்க**

**இன்னே கானம் செல்கின்றேன்**

**என்றன் ஆணை இவண்இருந்தே**

**இனிதே ஆள்க என்(று) உரைத்த**

**எந்தாய் கவிதைக்(கு) ஓர் அரசே**

**செந்நெற் கழனி நா(டு) உடையாய்**

**சிறியேம் சிற்றில் சிதையேவே**

**செழிக்கும் கவிதைச் செழுமுகிலே**

**சிறியேம் சிற்றில் சிதையேலே"** **(கம்ப.பிள்.8:5)**

மக்கள் சுற்றம் ஆள்வதற்கு உன் தம்பி உள்ளான் வனம் காக்க நீ இல்லாமல் என்னோடு ஏகினால், மக்கள் துயரில் தவிப்பர், எனவே என் ஆணை ஏற்று, இங்கே இருப்பாய் எனக் குகனிடம் உரைத்த இராமனது மொழி எழுதிய கம்பனே சிற்றில் சிதைக்க வேண்டாம்.

அரிய வனத்தில் சனகனின் மகள் சானகி தன் பூப்போன்ற திருவடி துயரடைய, இராமனின், வலிமை பொருந்திய தம்பியான இலக்குமணன் அமைத்த சாலை எழிலைக் கண்ட இராமனின் சொல் நலத்தைத் திறம்படப் பாடிய கம்பனே எங்கள் சிற்றில் சிதைக்க வேண்டாம்.

சீதையைக் கவர்ந்து சென்ற இராவணனுடன் கழுகின் குலத் தலைவன் சடாயு சண்டையிட்டு வீழ்ந்ததைக் கண்டு இராமன் துடித்த செய்தியை எழுதிய கம்பா! எங்கள் சிற்றில் சிதைக்க வேண்டா.

இதயத் தூய்மை உள்ளவர்கள், உயிராய்க் காக்கும் புகழுடைய இராமனின் புகழ்பாடும் கம்பனே! எங்கள் சிற்றில் சிதைக்க வேண்டாம்.

அமராவதி நாயகன், இராவணனின் பத்துத் தலைகளை அறுத்த வள்ளல் இராமனின் கொள்கைச் சிறப்பைத் தமிழில் அடக்கிய கம்பனே சிற்றிலைச் சிதைக்க வேண்டாம். **(கம்ப.பிள்.8:6-10)**

**கம்பனடிப்பொடி பிள்ளைத் தமிழ் காட்டும் சிற்றில் பருவம்:-**

வையம் ஆளும் மன்னவன் தன் வில்லாற்றலை மகிழ்ந்து பாடிய கம்பனின் அடிப்பொடியே எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம்.

இராம காதையை அழகிய தமிழில் சொன்ன கம்பனைக் கும்பிட்டு அவன் புகழைப் பார் புகழச் செய்த அடிப்பொடியாம் கணேசனே எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம்.

புவனத்தை அளந்த புகழுடைய திருமாலின், இராமாவதாரத்தைக் கவிதை மழையாய்ப் பொழிந்த கம்பனின் அடிப்பொடி கணேசா! சிங்கம் போன்ற நடையுடையவனே! எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம். **(கம்ப.அடிப்.பிள்.8:1-3)**

**வண்ணக் குழலாள் வாணிதர**
**வளரும் கலைகள் பலகற்றாய்**
**வாழ்வில் நீயே காந்தவழி**
**வாழக் கற்றாய் கதர்ப்பெருமை**
**மண்ணில் உரைத்த மாண்புடையாய்**
**மாண்பார் கோவைச் சுந்தரனார்**
**மற்றும் நெல்லைச் சுந்தரனார்**
**மதுரை இராம கிருட்டிணனார்**
**எண்ணும் நடுவர் மகாராசன்**
**என்னும் அறிஞர் இவருடனே**
**ஏற்ற பெரியோர் கீவாஜ**
**என்பார் நண்பர் என வாய்த்த**
**தண்ணார் கம்பன் அடிப்பொடியே**
**தலைவா சிற்றில் சிதையேலே**
**தக்கான் கம்பன் தாள்பரவும்**
**தலைவா சிற்றில் சிதையேலே (கம்ப.அடிப்.பிள்.8:4)**

விண்ணோர் வாழ வில்லேந்தி இலங்கை அதிபதியை அழைத்த வீரமகன் நலம்பாடும் தமிழ்க்கம்பனின் அடியைத் தொழுவதே தம் பணி என வாழ்ந்த கம்பன்

அடிப்பொடி கணேசா! எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம். கடமை மறவா இராமனின் காதையை அழகாய்ப் பாடியவன் கம்பன் அழகிய தமிழால் அவனது அடியைப் பரவிய கணேசா! எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம். அன்னை சீதையின் பெருமையை அணி சேர்த்த அழகிய காவியமாய் ஆக்கிய கவிதைப் பேரரசன் கம்பனின் தாளை நாளும் தொழுதவனும் தாய்த் திருநாட்டைக் காத்த தியாகிகளின் மன்னனும் ஆன கணேசா! எங்கள் சிற்றில் சிதைக்க வேண்டாம். **(கம்ப.அடிப்.பிள்.8:5-7)**

எண்ணற்ற யானைப் படைகள், காலாட் படை கொண்டிருந்தும் செய்யக் கூடாத தவறு செய்த காரணத்தால், இராவணனை அம்பால் துளைத்த இராமபிரானின் ஆற்றலை அரிய தமிழில் புகழ்ந்த கம்பனின் காலடியில் சிரம் வைத்துத் தொழுத கணேசா! எங்கள் சிற்றில் சிதையலே!

உறங்காத வீரம் கொண்ட இந்திரசித்தன் உடல் பிளந்தவனின் திறம் பாடிய கம்பனின் அடி வணங்கிப் போற்றும் கணேசா! எங்கள் சிற்றில் சிதைக்க வேண்டாம்.

சிறைப்பட்ட சீதையைக் காற்றின் மகனாம் அனுமன் கடல் தாண்டிச் தேடிச் சென்று, தெய்வக் கற்பின் தேவியைக் கண்டு அவள் வாட்டம் போக்கக் கணையாழி கொடுத்த அஞ்சனை மைந்தன் அனுமனை அமுதத் தமிழில் பாடிய கம்பனின் அடிப்பொடியே எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம். **(கம்ப.அடிப்.பிள்.8:8-10)**

பரதன், குகன், தன் குடி மக்கள், அனுமன் என அத்துணை பேரிடமும் கருணை காட்டிய இராமனது வரலாற்றை உலகறியச் செய்த இரக்கமுள்ள கம்பரும், அவர் தம் அடிப்பொடியான கணேசனாரும் தங்களது சிற்றிலைச் சிதைக்க வேண்டா எனச் சிறுமிகள் வேண்டுவது போல் இப்பருவம் பாடப்பெற்றுள்ளது.

கம்பர் பிள்ளைத்தமிழின் சிற்றில் பருவம் குகனது வரலாறு முழுவதையும் உரைக்கிறது. கம்பன் அடிப்பொடிப் பிள்ளைத்தமிழில் சீதைக்கு அபயம் அளித்த

வரலாறு காணப்பெறுகிறது. எளியளான சீதைக்கு அருள் செய்த இராமன் திருவடிகளைப் போற்றிய கம்பனது அடிப்பொடி தங்கள் சிற்றிலைச் சிதைக்கச் வேண்டா என வேண்டிப் பாடியுள்ள சிறுமிகளின் திறத்தில் கவிஞரின் கவித்திறம் மேலிடுகிறது. எளியவர்களுக்கு அருள் செய்த இராமனைப் பாடிய கம்பனும் அவனைப் பாடிய கம்பனடிப்பொடியும், எளிய சிறுமிகளின் சிற்றிலுக்குக் கருணை காட்ட வேண்டும் எனப் பாடிய மாண்பு போற்றத்தக்கது

**சிறுபறை முழக்கல்:-**

ஆண்பாற் பிள்ளைத் தமிழின் ஒன்பதாவது பருவம் சிறுபறை முழக்கல் ஆகும். இது குழந்தையின் பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வதாகும், இப்பருவத்தில் ஒலி இன்பங்கள் குழந்தையை மிகவும் ஈர்க்கும். ஆதலால் குழந்தை சிறுபறை முதலியவற்றைக் கொட்டிக் கொண்டு விளையாடும் அவ்வாறான கருவிகளைக் கொடுத்து ஒலி எழுப்பி முழக்குமாறு செய்து மகிழ்வதே இப்பருவமாகும்.

**கம்பர் பிள்ளைத்தமிழின் சிறுபறைப் பருவம்:-**

வாய்மையொடு தன் மரபு நிலை காக்கும் தயரதனின் மகனாய், பிறந்து தருமம் நிலைக்கத் தீமை புரியும் அரக்கா் இனத்தை வோ் அறுக்க வில்லைக் கையில் ஏந்திய இராமனைப் பரவிப் பாடும் கம்பனே! சிறுபறை முழக்குக!

தம்பியின் உயிா் கொளத் துணிந்து, இவனது தாரத்தை வவ்விய செயல்கள் செய்த வாலியை எதிா்க்கத் தன்னை நாடி வந்த சுக்ரீவனை நண்பனாய் ஏற்று அருள் புரிந்த கதையைக் காட்சிப்படுத்திய கம்பனே! சிறுபறை முழக்கி அருளே!

நாடு ஆளும் ஆசையினால் எனைக் கொல்ல நின் துணையை நாடிய என் தம்பி குரங்கு இனத்தின் செய்கையைத் தன் செயலால் காட்டிவிட்டான். அவனது நட்பினுக்கு இணங்கிப் புகழ் பெற்ற உன் வில்லினால் என் மாா்பு கிழித்தாய், இனி ஒரு தவறு அவன் செய்தால் அவனையும் இது போல் செய்க எனக் குமுறிய வாலியின் சொல்லைக் கவியாக்கிய கம்பனே சிறுபறை முழக்கி அருளே!

உன் கணையால் வீழ்ந்ததால், எட்டாத புண்ணியத்தை அடைந்தேன் உன் அருள் தருக! என செப்பிய வாலியின் சொல்லைச் செப்பிய கம்பனே சிறுபறை முழக்குக! **(கம்ப.பிள்.9:1-4)**

வாலியைக் கொன்ற இராமனுக்கு உதவி தேவையில்லை எனினும் சீதையை நாடி வரும் தமக்கு உதவுதல் கடமை எனத் தாரை கூறிய மொழியை இயம்பிய கம்பா சிறுபறை முழக்கி அருளே!

தன் படைகள் யாவற்றையும் இழந்து நிற்கும் இராவணனை உற்ற படையுடன் போருக்கு நாளை வருக என்று மொழிந்த சொல்லைச் செப்பிய கம்பனே சிறுபறை முழக்கி அருளே!

இராமனின் ஆணைகள் பெற்று, கடல் கடந்து சீதையைக் கண்டு அவள் தருமணி பெற்று வந்து புண்ணிய மூர்த்தியுடன் விரைவாகச் சேர்த்து அவர் விளம்பிய சொற்களை எல்லாம் தன் கவியில் காட்டிய கம்பனே! சிறுபறை முழக்கி அருளே! **(கம்ப.பிள்.9:5-7)**

கண்டேன் கற்பினுக்கு அணியை இலங்கையில் என உரைத்தவனின் மாண்பினைக் கவிதையில் உரைத்த கம்பனே! சிறுபறை முழக்குக!

தேடுதற்கு இடமின்றி அத்தனை இடங்களில் தேடியும் சீதை கிடைக்காததால், தோன்றிய அனுமன் என்னும் வீரனின் அவலநிலையை முத்தமிழ்க் கவிகளில் செப்பிய கம்பனே சிறுபறை முழக்குக! **(கம்ப.பிள்.9:8-9)**

**மேருவை விண்ணினை விரிந்(து) உள உலகினை**
**வென்றுபி ளந்(து) ஓட**
**வே(று) இனி இலைஎனச் சொலும் வணம் நூறிடு**
**விறலுடைச் சிலைசுமந்த**
**ஆரியன் பகழிகள் வலியன எனும் உரை**
**அறிந்(து) இவண் உரைத்தனையே**
**அஞ்சினை ஆதலின் மறைத்தலை உருவினை**

**ஆதலின் நீ பிழைத்தாய்**
**வீரமும் பெருமையும் பெற்றவன் என்(று) உரை**
**விளிம்பிடும் நீ அந்த**
**வெல்வலிப் பறவைமுன் நின்றிட வழிஇலை**
**என்(று) உரை விளம்பிடுநல்**
**காரிகை மொழியினைக் காவியம் ஆக்கினை**
**முழக்குக சிறுபறையே**
**கல்வியில் பெரியவன் எனவரு கம்பநீ**
**முழக்குக சிறுபறையே (கம்ப.பிள்.9:10)**

எனச் சிறுபறை முழக்குகிறார்.

**கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ் காட்டும் சிறுபறை முழக்கம்:-**

தாடகையை அழித்த கோமகன், மாரீசனைத் தெரித்தோடச் செய்தவன். காவியத்தைப் பாடிய கம்பனின் அடிப்பொடியாய் நிற்கும் காரை நகர் புகழும் கணேசா சிறுபறை முழக்குக!

அலை வளைத்த கடல்சூழ் இலங்கையின் திறமழியச் செய்தவன், வீரனான வாலியின் செருக்கறுத்தவன், காவியத்தை நெடுந்தமிழால் பாடிய கம்பனின் அடிப்பொடியாம் கணேச சிறுபறை கொட்டுக!

மன்னர்கள், முனிவர்கள், மானிடர்கள் அனைவரும் புகழும் பரந்தாமன், தசரதன் மகனாய் மண்மேல் பிறந்து ஆற்றிய அரும்பெருஞ் செயலைக் கவியாக்கிய கம்பனின் அடிப்பொடியே கணேச சிறுபறை கொட்டுக!

சத்தியத்தின் நெறிநின்ற முத்தர்களின் முழுமுதலின் சரித்திரத்தைப் பாடுகின்ற கம்பனின் சேவடியை வணங்கி மகிழும் செட்டி குல கணேச சிறுபறை கொட்டுக! **(கம்ப.அடிப்.பிள்.9:1-4)**

கம்பனின் காலடி பணிந்து, கலைக்கோயில் கண்ட கருணை மனம் கொண்ட செட்டி குலத்தில் செல்லமாய்த் தோன்றிய கணேச சிறுபறை முழக்கியருளே! **(கம்ப.அடிப்.பிள்.9:5)**

**தீயமனம் தானுடைய இராவணன் என்னுமோர்**

**தென்னிலங்கை ஆளும் வேந்தன்**

**தேவியைச் சிறைவைத்த பாவியாய் ஆனமை**

**தெரிந்துமே கருணை கூர்ந்தே**

**ஆயபுகழ் வாலிசேய் அங்கதனைத் தூதனுப்பி**

**அருளினால் எச்சரித்தும்**

**அரக்கனது கேளாமல் அமரிட்டே அழிந்தபின்**

**அவன்தம்பிக் கரசுதந்த**

**தூயவன் சரிதமது துலக்குமொரு கம்பனவன்**

**கொண்டனாய் ஆன சேயே**

**துப்புடைய நெஞ்சினால் தொண்டுபல செய்தவா**

**தோலாத வலிமை கொண்டோய்**

**சீயமென முழங்கிடும் மணிக்குரல் உடையவா**

**சிறுபறை முழக்கி யருளே**

**செங்கமல வாவிபுடை சூழ் காரைக் குடியனே**

**சிறுபடை முழக்கி யருளே (கம்ப.அடிப்.பிள்.9:6)**

உத்தமன் இராமனை உயிராய் எண்ணிய கம்பனைத் தன் உயிரனையாய் நினைத்து அவன் காவியம் கற்றுச் சிறந்த கணேசா! சிறுபறை முழக்குக!

சீதையின் நாயகன் இராமனின் ஆற்றலை அழகு தமிழில் தந்த கம்பனின் பரவும் கணேசா சிறுபறை முழக்குக!

தாயவளின் சொல்லை மீறி தமையனைத் தொழுது ஏற்றிய சுந்தரமான நற் பரதனின் பண்பினைச் சொல்லி மகிழும் கம்பனது அடிப்பொடியே சிறுபறை முழக்குக!

இராமனைத் தன் நெஞ்சத்தில் நிறுத்தியிருக்கும் அனுமனின் உயர்பணியைப் போற்றிய கம்பனை நாள் தவறாது போற்றிய கணேசா சிறுபறை முழக்குக! **(கம்ப.அடிப்.பிள்.9:7-10)**

பறை அறைதல் வெற்றிக்கும், போருக்கும் பெறப்படும் முழக்கம் ஆகும். கம்பர் பிள்ளைத்தமிழின் சிறுபறைப் பருவம், இராமன் வாலியை வதை செய்த கதை, அனுமன் கடல் கடந்து இலங்கை சென்ற தீரம், சீதை இராவணனைச் சாடிய கதை போன்றவற்றை அழகாய் இயம்பியுள்ளது.

கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ், இராமன் தாடகையை அழித்து மாரீசனை விரட்டிய கதை, பரதனின் பண்பு போன்றவற்றை மிகத்தெளிவாய் பேசியுள்ளது.

**சிறுதேர்ப் பருவம்:-**

ஆண்பால் பிள்ளைத்தமிழின் பத்தாவது பருவம் சிறுதேர்ப் பருவமாகும். இது இருபத்தோராம் திங்களில் நிகழ்வதாகும் மரத்தாலான சிறிய தேரினை உருட்டி மகிழும்படி குழந்தையை வேண்டிப் பாடுவது இப்பருவமாகும். மடநடைபயிலும் பருவத்தில் உள்ள குழந்தைகளின் நடைப் பயிற்சிக்கு உதவும் பொருட்டு சிறு தேரினை ஓட்டி மகிழச் செய்வர். குழந்தை வளர வளர நடந்து செல்லுதல் மட்டுமின்றி குழந்தை விரும்பும் இவ்விருப்பத்தை, நிறைவேற்றும் பொருட்டு தேர் முதலியவற்றினை உருட்டி குழந்தையை அமரச் செய்து மகிழ்வூட்டுவர்”[12].

கம்பர் பிள்ளைத்தமிழில் சிறுதேர்ப்பருவப் பாடல்களில் அனுமனது புகழ் பாடப்பட்டுள்ளது இறுதிப்பாடலில் இராமன் அரியணை ஏறும் காட்சி சுட்டப்படுள்ளது.

இராமனது நினைவொன்றையே தன் நினைவில் வைத்துப் பணியாற்றிய அனுமனின் புகழ் பரவிய கம்பனே சிறுதேர் உருட்டுக!

கரிய கடலை எளிமையாய்க் கடந்து சீதையைக் கண்ட அனுமனின் அருட்திறத்தை எழுதிய கம்பனே சிறுதேர் உருட்டுக!

இலங்கையில், தவம் போன்று வாழ்கின்ற கற்பினைக் கண்டேன் என இராமனிடம் செப்பிய அனுமனின் சொற்களைத் தாங்கிய கம்பனே சிறுதேர் உருட்டுக!

இராவணனால் சிறைவைத்த சீதையின் மனத் தீ அனுமனால் இலங்கை முழுவதும் பரவியதாய்ப் பாடிய கம்பனே! சிறுதேர் உருட்டுக! **(கம்ப.பிள்.10:1-4)**

பாதகம் செய்யும் அரக்கர் குலத்தில் இருந்து வந்த வீடணனை அடைக்கலமாக ஏற்கலாம் என்ற அனுமனின் சொற்திறத்தைச் செந்தமிழில் பாடிய கம்பா சிறுதேர் உருட்டுக!

எண்ணற்ற படைக்களத்தின் முன் நின்று வென்ற இராமன், இந்திர சித்தனை வீழ்த்திய போது, இராவணன் கண்ட உளச்சினத்தை உரைத்த கம்பனே சிறுதேர் உருட்டுக!

ஆற்றல் உள்ள மன்னவனாக இராவணன் தீவினையை நயந்ததால், வீழ்ந்து அழிவாய் என் கும்பகர்ணனின் நாவில் நின்று பேசிய கம்பனே சிறுதேர் உருட்டுக!

**(கம்ப.பிள்.10:5-7)**

கும்பனை எழுப்பிப் போருக்கு அனுப்பிய இராவணனின் நிலையை வடித்த கம்பா! சிறுதேர் உருட்டுக!

அண்ணனின் சொல் ஏற்று போரில் வீரமரணம் அடைந்த கும்பனின் புகழைச் சந்தத்துடன் பாடிய கம்பனே! சிறு தேர் உருட்டுக!**(கம்ப.பிள்.10:8-9)**

**அஞ்சனை பெற்றவன் அரியணை தாங்கிட**
**அம்புவி எல்லாமும்**
**அரிதினில் வலம்வரு வாலியின் சேய்எனும்**
**அங்கதன் வாள்எந்த**
**மிஞ்சிய புகழ்க்(கு)உறு நாயகன் பரதனும்**
**வெண்கவி கையேந்த**

**மென் மனத்(து) இளையவர் இருவரும் நலமுடன்**

**கவரிகள் மேல்வீச**

**எஞ்சல்இல் புகழ்கொடைச் சடையனின் மரபினர்**

**ஏந்தியே தருமுடியை**

**எழில்பெரு தவப்புகழ் கொள்குல முனிவரும்**

**எடுத்துடன் சூட்டியதைச்**

**செஞ்சொலில் கவிதைஎ னத்தரு கம்பநீ**

**உருட்டுக சிறுதேரே**

**செந்தமிழ் உலகினை வெல்கவி மன்னவ**

**உருட்டுக சிறுதேரே (கம்ப.பிள்.10:10)**

அனுமன் அரியணை தாங்கிட, வாலியின் சேய் அங்கதன் வாள் ஏந்த, பரதன் வெண்கொற்றக் கொடை கையேந்த இலக்குவனும், சத்ருக்கனும் கவரி வீச, குலமுனிவர்கள் முடி எடுத்துத் தர ஏற்று முடி சூடும் இராமனின் அரியணைக் காட்சியைக் கவிஞர் அழகாய்க் கூறி நிறைவு செய்வது பொருத்தப்பாடுடையதாய் அமைந்துள்ளது.

**கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ் காட்டும் சிறுதேர்ப் பருவம்:-**

**“பொருவரிய விடுதலைப் போரொரு வேள்வியாய்ப்**

**புரிந்திடப் போந்த நாளில்**

**பொல்லாத வெள்ளையர் செய்யாத செய்கையில்**

**சிலிர்த்தெதிர் நின்ற காலை**

**மருவரிய நின்னுடைய மார்புக்கு நேரெதிர்**

**சுடுகருவி மறித்து நீட்ட**

**மயங்காமல் எதிர்நின்று மார்பினைக் காட்டிய**

**மன்னவ அந்நாள் தொட்டுத்**

**திருமேனி வெறுமேனி ஆகவே விளங்கிய**

**சிறப்பினை என்ன சொல்ல**

**திகழ்கின்ற விடுதலைப் போரிலோர் புள்ளியாய்த்**

**திருநாட்டுக் குழைத்த மேலோய்**

**திருமகளின் பெருமையை உரைத்தவா அடிப்பொடி**

**சிறுதேர் உருட்டி அருளே" (கம்ப.அடிப்.பிள்.10:1)**

வள்ளல் அழகப்பரின் கொடை சிறக்க வாழ்வெலாம் உழைத்த செல்வனே! கள்ளமில்லா அன்போடு காசினி போற்ற வாழ்ந்தவனே! கம்பனின் புகழைப் பரவிய கணேசா சிறுதேர் உருட்டுக!

நற்றமிழ்ப் புலவர்களின் நடுவில் சிங்கமாய், நாயகன் பேர் சொல்லி நாளெல்லாம் போற்றும் கவிஞனின் நயம் கண்ட காரை மாநகரில் தோன்றிய கணேசா! சிறுதேர் உருட்டுக!

கடல் தாண்டி இலங்கை மதில் கடந்து காகுத்தன் மனத்தமுதாம் சீதையைக் கண்ட அனுமனின் புகழ் பாடிய கம்பனின் அடிப்பொடியே சிறுதேர் உருட்டுக!

தாயைப் பழித்து தமையனைக் காணக் கானகம் வந்த தம்பியைக் கண்டு மனம் வருந்திய இராமனது மனதை எழுதிய கம்பனின் அடிப்பொடியே சிறுதேர் உருட்டுக! **(கம்ப.அடி.பிள்.10:2-5)**

தேவியாம் சீதையின் கற்பின் திறத்தைத் தெய்வத் தமிழில் பாடிய கம்பனை மறவாத நெஞ்சினனான கணேசா, சிறு தேர் உருட்டுக!

வையம் ஆண்ட தயரதன் தன் வாழ்வுக்கு உயிரான இராமனின் வடிவம் கண்டு ஊர் மக்கள் தொழுததை, அழகான காவியமாய்ச் செய்த கம்பனின் அடிப்பொடி சிறுதேர் உருட்டுக!

வல்லவன் கும்பகன்னனையே வதைத்த தோள் வலிமை கொண்ட இராமனின் வீரத்தைக் கவிதையில் உரைத்த கம்ப நாட்டரசனின் நலங்கள் பேணி விழாக்கண்ட கம்பன் அடிப்பொடியே சீராய் உருட்டுக சிறுதேரை!

தாயின் உரைகேட்டுத் தந்தை வாய்மை காத்து இளவலோடும் தன் இளமயிலாம் சீதையொடு கானகம் சென்று அங்குள்ள முனிவர்களுக்கு அருள் செய்த இராமனின் சீரைப் பாடும் கம்பனின் அடிப்பொடியே சிறுதேர் உருட்டுக!

ஈரேழு ஆண்டுகள் வனமிருந்து, இலங்கைக் கோட்டைகளை வென்று, எழிலான அயோத்தி வந்து, எழில் சீதையோடு அரியணை ஏறிய இராமனின் காவியத்தைக் காட்சிப்படுத்திய கம்பனின் அடிப்பொடியாம் கணேசனே சிறுதேர் உருட்டுக! **(கம்ப.அடிப்.பிள்.10:6-10)**

எனச் சிறுதேர் உருட்டச் செய்கிறார்.

கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழின் சிறுதேர்ப்பருவம் விடுதலைப் போராட்டத்தில் ஈடுப்பட்ட போது வெள்ளையரின் துப்பாக்கிக்கு அஞ்சாது எதிர்நின்ற கணேசனாரின் வீரத்தையும், வள்ளல் அழகப்பரோடு சேர்ந்து கல்வி வளர்ச்சிக்கு உதவியதையும் அழகாய் இயம்பியுள்ளது.

கவிஞர் மீனவன் தன் இரு பிள்ளைத்தமிழ் நூல்களின் பருவ வரையறைகளை இலக்கண மரபுப்படியும், காலத்திற்கு இயைந்தவாறும் திறம்படப் படைத்துள்ளார்.

**பருவ முறை வைப்பில் கால வரையறை:-**

சிற்றிலக்கிய வகைகளில் சிறந்ததெனப் போற்றப்படும் பிள்ளைத்தமிழ், தொடக்க காலத்தில் பாட்டியல் நூல்கள் கூறிய இலக்கணப்படி அமைந்திருந்தன. அதன் பின் தோன்றிய பிள்ளைத்தமிழ் நூல்கள் சில பருவ அமைப்பில் மாற்றமடைந்தன. ஆசிரியர்களின் மனப்பாங்கிற்கு ஏற்பப் புதிய பருவங்கள் தோன்றல், சில பிள்ளைத்தமிழ் நூல்கள் பத்துப் பருவங்கள் என்ற

எண்ணிக்கையிலிருந்து மாறுபட்டு 11,12,13,14 என்ற பருவ எண்ணிக்கையைப் பெறல், ஒவ்வொரு பருவத்தையும் வெவ்வேறு ஆசிரியர்கள் பாடியிருத்தல் போன்றவற்றைப் பிள்ளைத்தமிழில் பருவ வரையறையில் ஏற்பட்ட மாற்றங்கள் எனக் கருத இயலும். இவ்வாறான எந்த நிலைமையும் இன்றி மீனவன் மரபு சார்ந்து தனது படைப்பைத் திறம்படப் படைத்துள்ளார். காலத்திற்கு ஏற்ற வகையில் கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழில் சில மாற்றங்களைக் காப்புப் பருவத்தில் காணமுடிகிறது. திருமால், சிவன் என்னும் கடவுளரைக் காட்டாது, தமிழறிந்த சான்றோர்களைக் கடவுளாகக் காட்டியுள்ளார். இவை தவிர ஏனைய அனைத்தும் மரபு மாறா இலக்கண முறைமையோடு அவர் கையாண்டுள்ள விதம் அவர்தம் இலக்கணப் புலமைக்குச் சான்றாம்.

**யாப்பமைதி:-**

பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் பெரும்பாலும் ஆசிரிய விருத்தத்திலேயே அமைந்துள்ளன. ஆசிரியவிருத்தம் என்பது ஆசிரியப்பாவிற்கு உரிய ஓசை தொடை முதலியன ஒருங்கே பெற்று நான்கு அடிகளுக்கு மிகாமலும் ஓர் அடியில் எத்தனை சீர்கள் வேண்டுமானாலும் கொண்டிருப்பதாகும். பிற அடிகளும் முதலடியில் வந்த சீர்களின் எண்ணிக்கையினையே பெற வேண்டும் பிள்ளைத்தமிழுக்குரிய யாப்பு ஆசிரிய விருத்தம் என்பதை

**“மொழி பொருளிற் காப்புமுதற் சிறுதேர்மட் டாண்பின்**

**மூன்றில்கழங்கு அம்மானைஊஞ் சல்பேணுங்கிளைச்**

**சீர்வகுப்போடு**

**அழிவின் அக வலின் விருத்தத்து அறைதல் பிள்ளைக்கவியாம்”**[13]

என்று சுவாமிநாதமும்,

**“துறுகொலை நீக் கித்தெய்வக் காப்பாய்க் கற்றத்**

**தொகைஅளவு வகுப்பு அகவல் விருத்தம் தன்னால்**

**முறைகாப்புச் செங்கீரை தால்சப் பாணி**

**முத்தம்வா ரானைஅம் புலியி னோடு**

**சிறுபறைசிற் றில்சிறுதேர் இவை பின் மூன்றும்**

**தெரிவையர்க்குப் பெறாகழங்கு அம் மானை ஊசல்**

**பெறமூன்று முதல்இருபத் தொன்றுள் ஒற்றை**

**பெறுதிங்கள் தனில்பிள்ளைக் கவியைக் கொள்ளே"[14]**

என்று சிதம்பரப் பாட்டியலும் கூறுகின்றன. மேலும், ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலிப்பா, கலி விருத்தம் ஆகியவற்றாலும் பிள்ளைத்தமிழைப் பாடலாம் எனப் பன்னிருபாட்டியல் உரைக்கும்.

கவிஞர் மீனவன் அவர்கள், தன் இரு பிள்ளைத்தமிழ் நூல்களையும், பெரும்பான்மையான பிள்ளைத்தமிழ் நூல்கள் இயம்பும் ஆசிரிய விருத்தத்தைக் கையாண்டே பாடியுள்ளார். கம்பன் பிள்ளைத்தமிழின் எண்ணற்ற பாக்களுக்கு அவர் பன்னிரு சீர் ஆசிரிய விருத்தத்தைக் கையாண்டுள்ளார், மேலும் இருபத்தென் சீர், பதினான்கு சீர், ஆறுசீர், எழுசீர், யாப்புகள் கொண்டும் பாடியுள்ளார்.

**"மண்ஆதி பூதங்கள் இயல்கின்ற உலகத்தில்**

**மறை நான்கும் வாழ வைத்து**

**மகம் ஆதி புரிகின்ற முனிவோர்தம் துயர்நீங்க**

**மாண்போரும் வில்லை ஏந்திக்**

**கண்ஆன விசுவமுனி ஆற்றிவரு மாவேள்வி**

**கானகத்தே நின்று காத்துக்**

**கனி எழில்வாய் முத்து நகை கயல்விழி கொள் சீதை எனும்**

**கவின் நிலவின் கரங்கள் பற்றி" (கம்ப.பிள்.2:1)**

என்னும் பாடல் பதினான்கு சீர் கொண்ட ஆசிரிய விருத்தத்திற்குரியது பற்பல சீர்கள் கொண்ட ஆசிரிய விருத்தத்தால் கம்பர் பிள்ளைத்தமிழைப் பாடிய கவிஞர், கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழில், அறுசீர், எழுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்களைக் கையாண்டுள்ளார்.

**“படையார் அரக்கன் வலிசாயப்**
**பகழி தொடுத்து ரகுராமன்**
**பண்டை மறைகள் பரவு புகழ்**
**பலவும் கொண்ட பரந்தாமன்**
**அடையார் புரங்கள் அன்றழித்தான்**
**அன்புக் குகந்த மைத்துனனாய்**
**அமைந்தான் நாமம் எட்டெழுத்தின்**
**ஆற்றல் மறவாத் தமிழ்க்கம்பன்..”(கம்ப.அடிப்.பிள்.6:4)**

என்னும் பாடல் அறுசீர் ஆசிரிய விருத்தத்திற்குச் சான்று பகர்கிறது

**முகில்தடவ எழுந்தமதில் முச்சியணி முத்துமணி**
**முகிழ்மின்னல் ஒளியை வெல்ல**
**முத்துலவு கடல்வளைந்து முத்தமிடும் தென்னிலங்கை**
**முழுதாளும் பேறு பெற்றோன்**
**அகில்தடவ மணந்தகுழல் அரவிந்த வதனமதி**
**அணங்கெடுக்க அவனை வென்ற**
**ஆதித்தன் குலமரபேன் ஆற்றலுள்ள வில்லிபுகழ்**
**அன்றுரைத்த தமிழுக் கிங்கே**
**முகவரியாய்ப் பொலிகம்பன் அடிப்பொடியான் தன்னுடனே**
**முழுமதி நீ ஆட வந்தால்**

**முழுநிலவாம் உனைக்கவியில் முன்வைத்துப் புகழ்ந்திடுவன்**

**முன்னேறி வாழலாம் நீ…" (கம்ப.அடிப்.பிள்.7:1)**

என்னும் பாடல் எழுசீர் ஆசிரிய விருத்தத்திற்கான சான்று ஆகும்.

**"நீர்பொலி வாவி நின்றழு வேளை**

**நினைவிற் கொட்டா விழுப்பொரு ளான**

**நீறணி மேனி அஞ்செழுத் தண்ணல்**

**நிரந்தரி உடனாய் மழவிடை ஏறி**

**வார்பொலி கொங்கை ஊறிய ஞானம்**

**வழங்குபால் ஊட்டச் செந்தமிழ் நாணம்**

**வானவர் போற்றத் திருமுறை யாக**

**வழங்கிய ஞான சம்பந்த வள்ளல்**

**பார்பொலி பொன்னி படர்சோ ணாட்டுப்**

**பைந்தமிழ்ச் சோழன் அவைக்களப் புலவன்" (கம்ப.அடிப்.பிள்.1:6)**

என்னும் பாடல் எண்சீர் ஆசிரிய விருத்தத்திற்கான சான்று ஆகும்.

**கம்பர் பிள்ளைத்தமிழ் தனித்த சிறப்புகள்:-**

கம்பன் பிள்ளைத்தமிழ் என்ற பெயரில் புதுவை அ.அருணகிரி அவர்கள் ஒரு நூலைத் தொகுத்துள்ளார். ஆனால் அந்நூலில் உள்ள ஒவ்வொரு பருவமும் வெவ்வேறு கவிஞர்களால் பாடப்பட்டுள்ளது. புதுக்கோட்டைத் தமிழறிஞர் நா. கனகராஜய்யர் கம்பன் பிள்ளைத்தமிழ் என்ற பெயரில் நூல் எழுதியுள்ளதாக அறியப்பட்டுள்ளது. கம்பனின் கவிச்சிறப்பிற்கு மரியாதை செலுத்தும் பொருட்டு மீனவன் அவர்கள் தம் பிள்ளைத்தமிழுக்கு "கம்பர் பிள்ளளைத்தமிழ்" எனப் பெயரிட்டுள்ளார். இப்பிள்ளைத்தமிழ், பிணாங்கு தமிழ்ச் சங்கத்தில் பரிசு பெற்ற நூலாகும். இலக்கணம் மறந்து இயன்றதை எல்லாம் பாடத் துணிந்த கவிஞர்களை

விடுத்து மரபு கொண்டு மாசற்ற பிள்ளைத்தமிழ் கிடைக்க வேண்டுமென அறிவிக்கப் பெற்ற போட்டியில் பரிசு பெற்ற நூல் கம்பர் பிள்ளைத்தமிழ் இதனின்று இந்நூலின் மரபு சார்ந்த அமைப்பு முறை புலனாகும்.

**மாலை நூல்கள்:-**

தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களில் எண்ணற்ற மாலைகள் இடம்பெற்றுள்ளன. கவிஞர் மீனவன் அரசர் முத்தையவேள் புகழ் மாலை, நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை என்னும் இரு மாலை நூல்களைப் படைத்துள்ளார். அவற்றின் தனித்த சிறப்புகள் பின்வருமாறு.

**அரசர் முத்தையவேள் புகழ் மாலை:-**

தலைவர், கடவுள் முதலியோர் புகழைப் பாடும் சொல்மாலையைப் புகழ்மாலை என்பர், சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றாகப் புகழ்ச்சி மாலை விளங்குகிறது. இதற்கு பன்னிரு பாட்டியல்,

**“ஆடவர் திறந்து வஞ்சி யின்னெறி**
**நாடிய பாத மயங்கி வைப்பி**
**னாம மாலை மற்றது மடந்தையர்க்**
**காமெனிற் புகழ்ச்சி மாலை யாகும்”**[15]

என்று இலக்கணம் உரைக்கிறது. அஃதாவது, ஆண்மகனை வஞ்சிப்பாவில் பாடுவது நாமமாலை, பெண்மகளைப் புகழ்ந்து பாடின் புகழ்ச்சிமாலை என்கிறது இவ்வகைத்தான சிற்றிலக்கியம் நாளடைவில் புகழ்மாலை எனப் பொதுவாய்ப் பெயர் பெற்றது.

கானாடுகாத்தான் கொடுத்த அற்புத அரசர் அண்ணாமலையாரின் மூத்த மகனார் அரசர் முத்தையவேள் அவர்களின் வாழ்க்கை வரலாற்றினை எடுத்தியம்பும் அற்புத நூல் அரசர் முத்தையவேள் புகழ்மாலை. கவிஞர் மீனவன் அவர்கள்

இந்நூலைக் காப்பியம் போல் காதை அமைப்பில் யாத்துள்ளார். புகழ்மாலை எனப் பெயர் பெற்ற போதும் அரசரின் வரலாறு முழுதும் எடுத்துரைக்கும் குறுங்காவியம் போல் இந்நூல் திகழ்கிறது.

**நூல் அமைப்பு:-**

வாழ்த்துரை, அணிந்துரை, பதிப்புரை, அரசர் முத்தையவேள் பற்றிய குறிப்புகள், இவற்றைத் தொடர்ந்து செட்டிநாட்டுச் சீருரை காதை முதலாக வீடு பேறு காதை ஈறாகப் பன்னிரு காதைகளில் அரசர் முத்தையவேள் அவர்களின் வரலாறு முழுவதும் எடுத்துரைக்கப்பெற்றுளது.

செட்டிநாட்டின் சிறப்பு, அண்ணாமலை அரசரின் அருந்தொண்டுகள், முத்தையவேள் அவர்களின் பிறப்பு, கல்விப் பணிகள், பண்பு நலன்கள், மனைமறம், மணிவிழாச்சிறப்பு, புகழ், பெருமை என்னும் கருத்து மலர்களைக் கொண்டு கோர்க்கப்பட்ட மாலை அரசர் முத்தைவேள் புகழ் மாலை.

**1. செட்டிநாட்டுச் சீருரை காதை:-**

செட்டிநாடு என்பது தமிழ்நாட்டின் தென்கிழக்குப் பகுதியில் சிவகங்கை மாவட்டத்தில் உள்ள 56 ஊர்களையும், புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள 20 ஊர்களையும், கொண்ட நிலப்பரப்பு ஆகும். இக்காதையில் செட்டிநாட்டின் சிறப்புகளைப் பட்டியலிட்டு அடுக்குகிறார் கவிஞர். ஆன்மீகப் பூமியாய், புலவர்களின் புகலிடமாய், வணிகர்களின் தாய்வீடாய், கலையுணர்த்தும் கட்டடக்கலையிலும், உபசரிக்கும் விருந்தோம்பலிலும் உயர்ந்து நிற்கும் ஒப்பற்ற நகரம் செட்டிநாடு, இத்தகைய செட்டிநாட்டுப் பகுதி நகரத்தார்களின் நகரமாக விளங்கியது என்பதை,

**“ நதியணிந்த சிவனவன் தாள் மறவா நெஞ்சர்**

**நலம்காணும் பெருநாடு ‘செட்டிநாடு’”(அர.முத்.புக.மாலை 1.12)**

**“பாநாடும் புலவர்புகழ் நகர மாகப்**

**பரிமளிக்கும் பேரூரே ‘செட்டிநாடு’” (அர.முத்.புக.மாலை 1.13)**

**“வாணிகத்தில் தலையாகி வாழக் கண்ட**

**வரலாற்றை உடையது தான் ‘செட்டிநாடு” (அர.முத்.புக.மாலை 1.27)**

**“…. அளப்பரிய பொருளாலே கோட்டை போல**

**நிலையுயர்ந்த வளமனைகள் நெருங்கித் தோன்றும்.**

**(அர.முத்.புக.மாலை 1.28)**

**“விருந்தோடு மணஞ்செய்யும் ‘செட்டிநாடு’”(அர.முத்.புக.மாலை 1.31)**

என்பன போன்ற அடிகளின் வாயிலாக எடுத்துரைத்துரைக்கிறார்.

**2.பிறப்புரை காதை:-**

இக்காதையில், அரசர் முத்தையவேள் அவர்களின் பிறப்புச்செய்தி கூறப்பட்டுள்ளது. முத்தையவேள் அவர்களின் பெற்றோரான அரசர் அண்ணாமலை, சீதை ஆச்சி அவர்களின் சிறப்பினை எடுத்துக்காட்டி, அரசர் முத்தையவேள் அவர்களின் தோற்றத்தைக் சிறப்புறக் கூறியுள்ளார்.

**“விண்ணிலுறை இந்திரன்போல் விளங்கு செல்வர்**

**வியன்அண்ணா மலைக்குநிகர் அவரே அன்றோ”**

**(அர.முத்.புக.மாலை 2:16-4)**

**“பலர் போற்றும் பண்புகளின் தலைவன் ஆகிப்**

**பாராண்ட மன்னருக்கு பாரி ஆன**

**தலைமகள்தான் இராணியார் சீதை ஆச்சியே**

**தாயனைய குணம்படைத்தோர்……” (அர.முத்.புக.மாலை18:1-2)**

என்று அரசர் முத்தையவேள் பெற்றோரின் புகழ் பகர்ந்த மீனவன், கோசலை சுமந்த இராமனொடு, சீதை ஆச்சியை ஒப்புமைப்படுத்தியுள்ளார்.

**"மானிடருள் சிறந்தவனாம் இராமன் என்னும்**

**மன்னவனைத் தன்னுடைய கருவில் தாங்கி**

**நானிலமே வணங்கிடத்தந் திட்ட தாயாம்**

**நலமிக்க கோசலைபோல் தன் வயிற்றில்**

**கவின் மிக்க தலைமகவை ஈன்றதாய".. (அர.முத்.புக.மாலை 1.12)**

எனுமிடத்து அவர்தம் சிறப்பு புலனாகிறது. அரசர் முத்தைய வேள் அவர்கள், ஆடி மாதம் இருபத்தி ஓராம் நாள், ஆகட்டு ஐந்து, 1905 ஆம் ஆண்டு பிறந்ததை,

**"எழில் விசுவா வசுவாண்டு ஆடித்திங்கள்**

**இருபத்தி ஓராமநாள் ஆகஸ்ட் ஐந்தில்**

**அழகான ஆங்கிலவாண்(டு) ஆயிரத்தில் தொள்ளா**

**யிரத்தைந்தாய் வருகின்ற ஆண்டு தன்னில்**

**பழகு வெள்ளிக்(கு) அடுத்தநாள் காரியன்று**

**பல்கதிரை விரித்தெழுந்த பகலவன் போல்**

**மழைபோலக் கொடையளிக்கும் மன்னன் ஆக**

**மாநிலத்தில் இளையவேள் தோற்ற மானார்"**

**(அர.முத்.புக.மாலை.2:20)**

என்ற பாடலில் அழகுறக் குறித்துள்ளார்.

3. **கல்வி பயில் காதை:-**

கோடானு கோடியைக் கல்விக்கு ஈந்த கொடையரசர் அண்ணாமலையரசர் சீதை ஆச்சியின் திருமகனாரான முத்தையவேள். சென்னை வேப்பேரியில் உள்ள ஆங்கிலப் பள்ளியில் கல்வி கற்றார். அதன்பின் திருச்சி புனித சூசையப்பர்

பள்ளியில் மேல்நிலைப் பள்ளிக் கல்வியை முடித்தார். தனது இளங்கலைப் படிப்பை சென்னை மாநிலக் கல்லூரியில் நிறைவு செய்தார். இதனை

**மாற்றமிலார் சென்னை நகர்தனிலே உள்ள**

**மாநிலத்துக் கல்லூரி சென்று கற்றார்**

**ஏற்றமிடும் இளங்கலையாம் பட்டம் பெற்றார்**

**இதன்பின்னர்த் தனை ஈன்ற தந்தைக் காக**

**ஆற்றலுள்ள மைந்தனாய் வளாவான் வேண்டி**

**அருங்கலைகள் வாணிகங்கள் அடுத்த தாகச்**

**சாற்றுமுயர் தொழில்முறைகள் கற்றுத் தேர்ந்தார்**

**சான்றோர்கள் பலரிடத்தும் தனியே கற்றார்''**

**(அர.முத்.புக.மாலை 3.4)**

என்னும் பாடல் புலப்படுத்தும்.

**4. தந்தை தாய் தன் பெருங்காதை:-**

இக்காதை அரசர் முத்தையவேள் அவர்களின் இல்லற மாண்பைப் பறைசாற்றுகிறது. இராமசாமி – சிவப்பி ஆச்சி ஆகியோரின் மகளான மெய்ம்மை ஆச்சியை அரசர் முத்தையவேள் மணந்து கொண்டார். இதனை,

**''பள்ளியிலே முத்தையவேள் பயிலும் காலை**

**பார்புகழும் அரசர் அண்ணா மலையார் தம்மின்**

**உள்ளத்தில் இடம்பிடித்த உயர்ந்த மங்கை**

**உயர்சிவப்பி ஆச்சியுடன் இராமசாமி**

**தள்ளரிய அன்பாலே பெற்ற செல்வி**

**தகைசான்ற மெய்யம்மை என்னும் பெண்ணைக்**

**கொள்ளென்று கொடுத்தமையால் துணைவி ஆனார்**

**குணத்தாலே கோகினூர் வைரம் ஆனார்"**

**(அர.முத்.புக.மாலை 4:4-1)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

வணிகர் குலம் மதிக்க மாண்புடைய வாழ்வினை இருவரும் வாழ்ந்தனர், மெய்யம்மை ஆச்சி அரசர் முத்தையவேள் அவர்களின் துணையாகி அவரை ஏற்றமுறச் செய்தார். இல்லற வாழ்வில் இன்பமாய் வாழ்ந்த இவர்கள் இரண்டு ஆண்மக்களைப் பெற்றெடுத்தனர். குமாரராஜ முத்தையா செட்டியார், எம்.ஏ.எம்.இராமசாமி செட்டியார் என்னும் இருமக்களும் தந்தையைப் போலவே குறைவற வாழ்ந்தனர். இதனை,

**"அன்புருவாய் அடக்கமுடன் வாழும் பாங்கை**
**ஆச்சியிடம் காணலாம் அன்பு வாழ்வில்**
**இன்பமுடன் வாழ்ந்தமையின் பயனாய் இங்கே**
**ஈன்ற மகன் முத்தையா இராம சாமி**
**என்பார்தம் முகங்கண்டே என்றும் அன்பால்**
**இருப்போரை ஈர்த்தணைத்தார் பொய்யே சொல்லார்**
**தன்பெயருக் கேற்றபடி வாழ்ந்து வையம்**
**தனைவாழ்த்தும் புகழ்பெற்றுத் தலைமை கொண்டார்"**

**(அர.முத்.புக.மாலை 4.4-7)**

என்னும் பாடல் உணர்த்தும்.

**5.பணி பல செய்த காதை:-**

அரசர் முத்தையவேள் அவர்கள் தன் தந்தையார் அண்ணாமலை செட்டியார் போன்று எண்ணற்ற பணிகள் செய்து புகழ் பெற்றதை இக்காதை இயம்புகிறது. இளம் வயதிலேயே சென்னை நகர மேயராய் இரு முறை பதவி வகித்து,

மக்களுக்கு எண்ணற்ற பணி பல செய்தார். சென்னையில் வானொலி நிலையம் நிறுவிப் பெருமை பெற்றார். இதனை,

**“வரலாற்றில் இருமுறைகள் மேயர் ஆனார்**

**வருபணிகள் அத்தனையும் வளமாய்ச் செய்தார்….”**

**(அர.முத்.புக.மாலை 5:1-2)**

**“வானொலிக்கே ஒரு நிலையம் சென்னை காண**

**வைத்திட்ட முதன்மையினார்….” (அர.முத்.புக.மாலை 6:1-2)**

என்னும் அடிகள் உணர்த்தும். மேலும், அரசியலிலும் இணைந்து வெற்றிகள் பல பெற்றார். நீதிக்கட்சியில் இணைந்து, கல்வி, சுகாதாரம், உள்ளாட்சித்துறை, அறநிலையத்துறை ஆகியவற்றின் பொறுப்பேற்று செம்மையாய்ப் பணி செய்தார். பல்கலைக்கழகத்தின் ஆட்சிக்குழுவில் பங்கேற்று பல அரிய செயல்களைச் செய்தார். பல்கலைக்கழகத்தின் வளர்ச்சிக்கு வித்திட்டார். வெற்றி என்ற ஒற்றைத் தாரக மந்திரத்தை மட்டுமே கொண்டு செயல்பட்ட அரசர் முத்தையவேள் பணிகள் அனைத்திலும் சிறந்து மாண்புற்றார்.

**“கற்றார்க்கும் கல்விக்கும் தூணே ஆன**

**கலைவேந்தர் முத்தையவேள் அரசாங்கத்தில்**

**மற்றவரும் புகழ்ந்துரைக்கும் மாண்பு பெற்றார்**

**மதிப்புடைய அவர் பெருமை உரைக்கற் பாற்றோ**

**கொற்றவராய்ப் பிறர் மதிக்கும் கொள்கை யாலே**

**கோலோச்சி வாழ்ந்தஇவர் குறள்நூல் ஈண்டு**

**சொற்றவழி நடந்தமையால் சால்பு பெற்றார்”**

**(அர.முத்.புக.மாலை 5:39)**

என்னும் பாடல் இவர்தம் புகழைப் புலப்படுத்தும்.

**6. பல்கலைப் பெருமை பாடிய காதை:-**

அரசர் அண்ணாமலையார் கல்விக்காக அமைத்த பல்கலைக் கழகத்தைக் கண் போல் காத்தவர் அரசர் முத்தையவேள். பல்கலைக் கழகத்தை அவர் பெருமை மிக்கதாய் உயர்த்தினார். பல்கலைக்கழகத்திற்கான துணை வேந்தர்களைச் சிறப்பாய்த் தெரிவு செய்து, பல்கலையைக் கல்விக் கோயில் போலாக்கி வையமறியச் செய்தார். இதனை,

**"என்றும் காக்கும் இணைவேந்தர்**

**இவரே என்று பிறர்போற்றக்**

**குன்றாய் உயர்த்திப் பல்கலையைக்**

**கோவில் போல ஆக்கியவர்**

**நன்றாம் தகைசால் துணைவேந்தர்**

**நலமாய்த் தேர்வு செய்வதிலும்**

**குன்றா வண்ணம் செயலாற்றிக்**

**கோலத் தமிழாய் இலங்கியவர்"(அர.முத்.புக.மாலை 6.3)**

என்னும் பாடல் நன்கு விளக்கும்.

**7. தமிழிசை வளர்த்த காதை:-**

தமிழ்நாட்டுக்குள் தமிழிசையைப் பின்னே தள்ளிக் கால்பதித்த தெலுங்கு மொழியை எதிர்த்து தமிழிசைக்கென இயக்கம் கண்டவர் அரசர் முத்தையவேள். தமிழிசை, பரதம், கூத்து, நாடகம் என்னும் பண்பாட்டுக் கலைகளைக் குறைவற வளர்த்த செய்திகள் இக்காதையுள் இடம் பெற்றுள்ளன.

**"ஏற்றமும் தமிழிசைக்கே வாழ்வு சேர்க்கும்**

**இயல்போடு பரதஞ்சேர் கூத்தும் வாழத்**

**தோற்றினார் தன்பெயரால் உயர்ந்த மன்றம்**

**துலங்கினவே நாடகங்கள் பண் ஆராய்ச்சி**

**ஆற்றலுடன் தேவாரம் அரங்கி லேறி**

**ஆர்ப்பரிக்க வகை செய்தார் பரிசில் பட்டம்**

**போற்றவே கொடுத்தவரைப் பொலிய வைத்தார்**

**புத்துயிரைத் தமிழிசைதான் பெற்ற தம்மா"**

**(அர.முத்.புக.மாலை7:30)**

என்ற பாடல் அரசர் முத்தையவேள் அவர்கள் வளர்த்த பண்பாட்டுக் கலைகளைப் பறைசாற்றும்.

**8. பண்புரை காதை**

இது அரசர் முத்தையவேள் அவர்களின் எண்ணற்ற பண்புகளை உணர்த்தும் காதையாகும். செட்டிநாட்டில் மட்டுமின்றி உலகோர் அனைவரும் புகழ்பெறும் வண்ணம் வாழ்ந்தவர் என்பதை,

**"கல்வியில் சிறந்தார் என்றும்**

**கலைகளை வளர்த்தார் சீர்சால்**

**பல்கலைக் கிணையாம் வேந்தர்**

**பதவியும் பெற்றார் சாலச்**

**சொல்வதில் கீர்த்தி பெற்றார்**

**சோர்விலாச் சொல்லர் ஆனார்**

**பல்விதத் திறமை யாலே**

**பகலவன் ஆகி நின்றார்" (அர.முத்.புக.மாலை 8:2)**

என்னும் பாட்டு நன்கு விளக்கும்.

**9. மனையறம் கண்ட காதை:**

சமுதாயத்தில் சிறந்த குடிமகனாய்த்திகழ்ந்த அரசர் முத்தையவேள், சிறந்த மகனாய், அறம் போற்றும் கணவனாய் வாழ்ந்தார். இல்லறத்தின் மாண்புரைக்கும்

வகையில் முத்தையவேள், மெய்யம்மை ஆச்சி தம்பதியருக்கு இரு ஆண் மகவுகள் பிறந்தன. குமாரராஜமுத்தையா செட்டியார், எம்.ஏ.எம்.இராமசாமிச் செட்டியார் ஆகியோரது பாசமிகு தந்தையாய்த் திகழ்ந்தார்.

**10.மாண்புரை காதை:-**

அரசர் முத்தையவேள் அவர்கள், கல்விப் பணியோடு மிகச் சிறந்த வணிகராகவும் செயல்பட்டுள்ளார். உ.வே.சா.நாவலர் சோமசுந்தரம், யாழ்நூல் விபுலானந்தர் போன்ற சான்றோர்களைத் தம் நண்பர்களாய்ப் பெற்றிருந்தார். கல்வித்தாயின் தலைமகனாய், ஈதல் பண்பினை முதன்மையாய்க் கொண்டு வாழ்ந்தார். இதனை,

**"செந்தமிழ் அறிஞர் சேதுப் பிள்ளை**
**செவ்விய யாழ்நூல் விபுலா னந்தர்**
**நந்தமிழ் நாவலர் சோம சுந்தரர்**
**நடுக்கா வேரி நாட்டார் பெருமான்**
**எந்ததமிழ் நாட்டில் ஏடுகள் தேடி**
**இன்தமிழ் வளர்த்த இனிய உ.வே.சா**
**சிந்தைக் கினிய கவிபல தந்த**
**செந்தமிழ் நாட்டுக் கவிமணி யுடனே**
**பன்மொழி அறிஞர் பண்டா ரத்தார்**
**பண்டிதர் லெ.ப.கரு. பண்டித மணியார்**
**நன்மொழி இசைக்கே நாயகம் ஆனோர்**
**நாடறி தலைவர் சிலம்புச் செல்வர்**
**என்பவர்க் கெல்லாம் இயல்தமிழ் முனைவர்**
**எனும்விரு தளித்த இணையிலா வேந்தர்**
**மன்பதை போற்றும் மதிநிறை அறிஞர்**
**மாண்பமை வணிகர் மணிமுடி ஆனோர்..."**

**(அர.முத்.புக.மாலை10:28-29)**

என்பதன் வழி அறிய இயலும்

**11. மணிவிழாக் காதை:-**

அரசர் முத்தையவேள் தம் அறுபதாம் வயதில் தன் இணையாள் மெய்யம்மை ஆச்சியுடன் மணிவிழாக் கண்டார். 1965-ஆம் ஆண்டு ஆகட்டு மாதம் இரண்டாம் நாளில் இவரது மணிவிழா நடைபெற்றது. எண்ணற்ற சான்றோர் சூழ நிகழ்ந்த அவ்விழா அரசரின் முடியில் வைரமென நிலைபெற்றது.

**12.வீடு பெறு காதை:-**

அரசர் முத்தையவேள் அவர்களின் இறப்பும் அதனால் உண்டான வேதனையும் வெளிப்படும் காதை. அரசர் 1984-இல் மேத்திங்கள் பன்னிரண்டில் இறைவனடி சேர்ந்தார். இதை இக்காதைச் செய்திகள் வெளிப்படுத்துகின்றன.

**"பாலுக்குச் சுவையிருக்கும் நாள் வரைக்கும்**
**பழத்திற்குள் இனிப்பிருக்கும் நாள் வரைக்கும்**
**நூலுக்குள் பொருளிருக்கும் நாள் வரைக்கும்**
**நுண்பொருள் சேர் திருக்குறள்போல் கருவறை சேர்**
**ஆலயத்துத் தெய்வமென ஆன எங்கள்**
**அன்பான முத்தையவேள் அமைந்தார்"(அர.முத்.புக.மாலை12:7)**

என்று புகழ் மாலையை நிறைவு செய்கிறார் மீனவன்.

செட்டிநாட்டின் சிறப்பு, அண்ணாமலை அரசர் முத்தையவேள் அவர்களின் பிறப்பு, கல்வி, அவர் அலங்கரித்த பணிகள், அவருடைய பண்பு நலன்கள், மங்கலமனையறம், மணிவிழாச்சிறப்பு மற்றும் அவர் உடலால் பிரிந்திருப்பினும் புகழால் என்றும் நிலைபெற்றிருக்கும் பெருமை என்னும் கருத்து மலர்களைக் கொண்டு மீனவன் இப்புகழ்மாலையைத் தொடுத்துள்ளார். மாலையிலுள்ள மலர் வகைகள், ஒன்றை விஞ்சி ஒன்று மணம் வீசுவதால் இம்மாலை மணக்குவியலாய் மனதில் மணக்கிறது.

**நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை:-**

கவிஞர் மீனவன், கோவிலூர் திருமடத்தில் 17 ஆண்டுகள் அருட்பணி புரிந்த நாச்சியப்ப சுவாமிகள் குறித்து 100 பாக்களால் எழுதிய அருள் மாலை **“நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை”** 100 பாக்கள் என்பதால் சதமணி மாலை எனப் பெயர் பெற்றது. கோவிலூரில் எழுந்தருளியுள்ள நெல்லை அம்மனைக் காக்க வேண்டி, காப்புச் செய்யுளில் பாடிய மீனவன் நாச்சியப்ப சுவாமிகளின் தொண்டுகளைத் தன் பாத்திறத்தால் கோர்வை ஆக்கியுள்ளார்.

**“மாதவர் பலரும் கூடி**
**மாண்புசால் வேதாந் தத்தை**
**ஓதலே செய்து வைத்த**
**உயர் முத்தி ராம லிங்க**
**பாதமே மறவார் ஆகிப்**
**பற்பல கல்விச் சாலை**
**ஆதியாய் அமைந்த ஞானி**
**அவரடி போற்றி போற்றி ” (நாச்.சுவா.சத.மா.9)**

என்னும் பாடல் சுவாமிகள் மாணவர்களை வேதாந்தத்தைப் பயிலச் செய்த செய்தியையும், பல கல்விக் கூடங்களைத் திறந்த செய்தியையும் கூறுகிறது.

**“வங்கியம் தாளம் மேளம் வசையிலாச் சிற்பத் தோடு**
**மங்கிடாத் தேவா ரங்கள் மண்மிசை ஓங்க வைத்தார்”**
**(நாச்.சுவா.சத.மா.39:1-2)**

என்ற அடிகள் தமிழர் தம் பெருமைக்குரிய தேவாரம், சிற்பம், நாதசுவரம், தவில் போன்ற இசைக்கருவிகளைக் கற்றுக் கொடுப்பதற்கு நாச்சியப்ப சுவாமிகள் செய்த தொண்டினைச் சிறப்பாகக் குறிப்பிடுகிறது.

**“காரெனப் பொழிந்த கைகள் கருணையே இலங்கு கண்கள்**
**ஊரெல்லாம் திரண்டு வந்தே உவந்திடப் பணிந்த கால்கள்**
**சீரெல்லாம் பொலிந்த நூல்கள் சிறப்புறச் செய்த மேதை**
**பாருலாம் நாச்சி யப்பர் பதமலர் போற்றி! போற்றி” (நாச்.சுவா.சத.மா.28)**

என்னும் பாடல், சுவாமிகள் கொடைத்திறத்தையும் பதிப்புத்துறையில் அவர் சிறந்து விளங்கியதையும் சுட்டிக்காட்டுகின்றது.

**“சங்கநூற் பதிப்பி னோடு சமயநூற் பதிப்பும் கண்டார்”(நாச்.சுவா.சத.மா.97)**

என்ற அடிகள் சுவாமிகள் திருத்தமாகச் சங்க இலக்கியம், திருமந்திரம் மற்றும் ஆகம நூல்கள் போன்றவற்றை வெளியிட்டுள்ளதைச் சுட்டுகின்றன.

தாம் ஈட்டிய பொருள் அனைத்தையும் அறத்திற்காகவே ஈந்தவர் நாச்சியப்ப சுவாமிகள் ஆவர்கள். இதனை,

**“கற்றவர் வணங்குமாறு கல்வியை வளர்த்த மேதை**
**நற்றவம் முன்பு செய்தோர் நலமுடன் ஈன்ற தாலே**
**உற்றவர் நாச்சியப்பர் உலகிலே உழைத்த தாலே**
**பெற்றிட்ட பொருளைக் கொண்டு பேரறம் செய்தார் போற்றி”**

**(நாச்.சுவா.சத.மா.43)**

என்ற பாடல் நன்கு விளக்கும்.

சுவாமிகள் காலத்தின் அருமையைக் கருத்தில் கொண்டு எண்ணற்ற பணிகள் பல புரிந்ததை நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை நன்கு புலப்படுத்துகின்றது.

**அலர்மேல் மங்கை அந்தாதி:-**

அந்தாதி என்பது அந்தம், ஆதி ஆகிய இரு சொற்களால் ஆன வடமொழித் தொடர் ஆகும். இத்தொடரில் உள்ள அந்தம் என்பது **'முதல்'** என்றும் ஆதி என்பது **'முடிவு'** என்றும் பொருள்படும். முடிவை முதலாகப் பெற்று அமைவது அந்தாதி ஆகும். ஒரு செய்யுளின் இறுதியில் உள்ள எழுத்து, அசை, சீர், அடி, போன்றவை அடுத்து வரும் செய்யுளின் முதலாக அமையும் படிப் பாடுவது அந்தாதி ஆகும். அந்தாதி குறைந்தது இரண்டு அடிகளுக்குள்ளும் அல்லது இரண்டு செய்யுட்களுக்கும் இடையே காணப்படுவது. இரண்டடிகளுக்கு இடையே அமைவது அந்தாதித் தொடை, இரண்டு செய்யுட்களுக்கு இடையே அமைவது அந்தாதிச் செய்யுள் ஆகும். அந்தாதிப் பாடல் மனப்பாடம் செய்வதற்கும், எளிதாக நினைவு கொள்வதற்கும் ஏற்றதாக அமையும் செய்யுள் அமைப்பாகும். அந்தாதியைத் "தொடை வகைகளுள் ஒன்றெென யாப்பு நூலார் விளங்குவர். தமிழில் அந்தாதி இலக்கிய வகையே மிகுதி. இன்ன பொருள்தான் பாடவேண்டும் என்ற வரையரை இல்லை, பெரும்பாலும் விருத்தமே இதன் யாப்பு வடிவமாகும் என்பர்"[16]

கவிஞர் மீனவன் அவர்களின் சிற்றிலக்கியப் படைப்பிற்கு மற்றொரு சீரிய சான்று அலர்மேல் மங்கை அந்தாதி. காப்புச் செய்யுள் நீங்கலாக 100 விருத்தங்களால் எழுதப்பட்ட நூல் அலர்மேல் மங்கை அந்தாதி.

இவ்வந்தாதி இரு செய்யட்களுக்கு இடையே தொடுப்பதாய்க் காணப்படுகிறது. கலைமகளின் அருளாசி பெற்ற கவிஞர்மீனவன், அலைமகளாம் அலர்மேல் மங்கையின் மீது பாடிய நூல் அவர்மேல் மங்கை அந்தாதி. அலைமகளையும், அவள் மணங்கொண்ட திருமாலையும் ஒருங்கே புகழ்கிறது இந்நூல். திருப்பதி வாழும் வேங்கடத்தானைக் காக்கும் கடவுளாய்க் கொண்டு பாடப்பெற்றுள்ளது.

**"சந்தனை செய்வர் நெஞ்சில் சித்திரம் ஆன செல்வி**

**வந்தனை செய்வோர்க்(கு) எல்லாம் வரம் அருள் அலர்மேல் மங்கை**

**மந்திகள் தாவு கின்ற திருமலைத் திருமால் தன்னைச்**

**சொந்தமாய்க் கொண்ட தாயின் சுடரடி தொழுது பாரும்" (அ.மங்.அந்.1)**

**"பாருடன் அனல்கால் வீண்நீர் பகரைந்து பூத மாகிப்**

**பாருடன் விண்ண ளந்து மாவலி படிக்குள் செல்ல**

**ஏரடி தலைமேல் வைத்தான் இறைவியாம் அலர்மேல் மங்கை**

**சீரடி சரணே என்று சேருவீர் கமல பாதம்" (அ.மங்.அந்.2)**

என்னும் பாடல்கள் அனைத்தும் அவர்தம் அந்தாதி படைப்புத்திறனைப் பறைசாற்றும்.

அந்தாதி இலக்கியங்கள் தலங்கள், தல இறைவன், சான்றோர்கள், தொண்டர்கள், புலவர்கள், வள்ளல்கள், முதன்மைபெற்ற நிகழ்ச்சிகள் முதலியன குறித்து அமைந்தவனவாக உள்ளன. பக்திப் பெருக்கினை உணர்த்துவதே பெரும்பான்மை அந்தாதிகளின் குறிக்கோள் எனலாம். அந்தக் குறிக்கோளினை அலர்மேல் மங்கை அந்தாதி செவ்வனே நிறைவேற்றியுள்ளது.

## தொகுப்புரை

 தமிழ் மொழியிலுள்ள இலக்கியங்களைப் பேரிலக்கியம், சிற்றிலக்கியம் என்று வகைப்படுத்தும் மரபு உள்ளது.

 பாடல் எண்ணிக்கை அல்லது அடிகளின் எண்ணிக்கை சுருக்கமாக அமைவது சிற்றிலக்கியம்.

 பிரபந்ததீபிகை, பிரபந்தத்திரட்டு, பிரபந்த மரபியல் போன்ற பாட்டியல் நூல்களின் வாயிலாக 96 வகை எனச் சிற்றிலக்கியம் கண்டறியப்பட்டாலும், இன்று சிற்றிலக்கியங்கள் பெருகி வளர்ந்துள்ளன.

 கம்பன் பிள்ளைத்தமிழ், கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ், அரசர் முத்தையவேள் புகழ்மாலை, நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை, அலர்மேல் மங்கை அந்தாதி, ஆகியவை மீனவன் அவர்கள் பாடிய சிற்றிலக்கியங்கள் ஆகும்.

 பருவங்களின் வரையறை, பருவ முறை வைப்பில் காலவரையறை, யாப்பமைதி என்னும் கூறுகளால் பிள்ளைத் தமிழ் ஆராயப்பட்டுள்ளது.

 கவிஞர் மீனவன் தன் இரு பிள்ளைத்தமிழ் பருவ வரையரைகளை இலக்கண மரபுப்படியும், காலத்திற்கு இயைந்தவாறும் திறம்படப் படைத்துள்ளார்.

 கம்பன் பிள்ளைத்தமிழை முழுமையான இலக்கண முறைமையோடு பாடிய மீனவன், கம்பனடிப்பொடி பிள்ளைத்தமிழில் காலப் புதுமையைப் புகுத்தியுள்ளார். காக்கும் கடவுளராகத் தமிழறிந்த சான்றோரைப் புகழ்ந்துள்ளார்.

 கம்பன் பிள்ளைத்தமிழ், கம்பனடிப்பொடி பிள்ளைத்தமிழ் ஆகிய இரண்டும் ஆசிரிய விருத்தங்களால் பாடப்பட்டுள்ளன.

 வாழ்த்துரை, அணிந்துரை, பதிப்புரை, அரசா் முத்தையவேள் பற்றிய குறிப்புகள் என அரசா் முத்தையவேள் அவா்களின் வரலாறு முழுவதும் இயம்பும் நூலாக அரசா் முத்தையவேள் புகழ்மாலை திகழ்கின்றது.

 அரசா் முத்தையவேள் புகழ்மாலை செட்டிநாட்டின் சிறப்பு, அண்ணாமலை அரசரின் தொண்டுகள், அரசா் முத்தையவேள் பிறப்பு, கல்வி, பணிகள், பண்பு நலன்கள், மனையறம், மணிவிழாச்சிறப்பு, புகழ், பெருமை என்னும் கருத்து மலா்களைக் கொண்டு கோக்கப்பட்டுள்ளது.

 கோவிலூா் திருமடத்தில் 17 ஆண்டுகள் அருட்பணி புரிந்த நாச்சியப்ப சுவாமிகள் குறித்து நூறு பாக்களால் எழுதிய அருள்மாலை நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை என்னும் நூலாகும்.

 கலைமகளின் அருளாசி பெற்ற கவிஞா் மீனவன், அலைமகளாம் அலா் மேல் மங்கையின் மீது நூறு பாக்களால் அந்தம் ஆதியாய்த் தொடுத்த நூல் அலா்மேல் மங்கை அந்தாதி.

 சிற்றிலக்கிய வகைகள் பலவற்றைச் சிறப்பாகப் பாடும் திறன் பெற்றவா் மீனவன் என்பதை இவ்வியல் புலப்படுத்துகின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. முனைவர்.ச.வே.சுப்பிரமணியன், தமிழ் இலக்கண நூல்கள், ப.538
2. மேலது ப.77
3. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு ப.331
4. டாக்டர்.ந.வீ.செயராமன், சிற்றிலக்கியச் செல்வம், ப.27
5. முனைவர்.ச.வே.சுப்பிரமணியன், தமிழ் இலக்கண நூல்கள் ப.57
6. மேலது ப.197
7. மேலது ப.275
8. மேலது ப.275
9. மேலது ப.263
10. கலைக்களஞ்சியம், தொகுதி:7, ப.370
11. மேலது ப.370
12. மேலது ப.370
13. டாக்டர்.ச.வே.சுப்பிரமணியம், தமிழ் இலக்கண நூல்கள் ப.682
14. மேலது ப.288
15. மேலது ப.267
16. தமிழண்ணல் புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு ப.339

உலக வரலாற்றில் நீண்டதொரு இலக்கிய இலக்கணத் தொடர்ச்சி தமிழ்மொழிக்குண்டு. இத்தொடர்ச்சிக்குப் பண்டை நூல்களுக்கு உரை எழுதிய உரையாசிரியர்களின் பங்களிப்பு காரணமாகும். இவ்வுரையாசிரியர்கள் நூல்களுக்கு எழுதிய விளக்கம் உரை எனப்படுகிறது. உரையாசிரியர்களை இலக்கண உரையாசிரியர், இலக்கிய உரையாசிரியர் எனப் பாகுபடுத்துவர்.

“உரையாசிரியர்கள் அனைவரும் பொலியக் கோத்த புலமையாளர்கள். அவர்கள் தம் வாழ்நாளின் முற்பகுதியை நல்ல நூல்கள் பலவற்றைத் தேடிக்கற்பதிலும் அவற்றின் பொருளைத் தெளிவாக உணர்வதிலும் செலவிட்டுப் பெரும் புலமை பெற்ற பின் தம் வாழ்நாளின் பிற்பகுதியில் சிறந்த நூல் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அதற்கு ஒப்பற்ற உரை காண்பதில் ஈடுபட்டுத் தொண்டு புரிந்து தம் வாழ்நாளைப் பயனுள்ள முறையில் கழித்தனர்”[1] என்பர்.

இத்தகு சிறப்புடைய பண்டை உரையாசிரியர்களைப் போன்று இருபதாம் நூற்றாண்டில் எட்டுத்தொகை நூலான அகநானூற்றிற்கும், கோவிலூர் மடம் வெளியிட்ட வேதாந்த நூல்களுக்கும் உரை கண்டவர் காப்பியக் கவிஞர் மீனவன். அவர் தம் உரைத்திறனை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

**உரை:-**

தமிழ் இலக்கிய வரலாற்றை உற்று நோக்கும் போது உரையாசிரியர்களின் பணி, தமிழ் நூல்களின் வளர்ச்சிக்கும் வாழ்விற்கும் எத்துணை இன்றியமையாததாய் அமைந்தது என்பதை அறிய முடியும். “உலக மொழிகளில் வேறு எந்த மொழியிலும் இல்லாத அளவுக்குப் பல வகையான சிறந்த உரைகள் காலந்தோறும் தொடர்ச்சியாக, படிப்படியாக மெதுவாகப் பரிணாம வளர்ச்சியின் அடிப்படையில் தமிழில் தோன்றிக் கொண்டே உள்ளன. அவையாவும் கவர்ச்சி

மிகுந்த தொடர்கதைகளின் சிறப்பியல்புகளைப் பெற்றுள்ளன”[2] என்பர் மு.வை.அரவிந்தன்

முந்தைய காலத்தில் நூல்களுக்கு உரைகள் இல்லை. மூல நூல்கள் எல்லாரும் கற்று மகிழும் வண்ணம் எளியனவாய் இருந்தன.

**“உரையின்றிச் சூத்திரத்தானே பொருள் நிகழ்ந்த காலமும் உண்டென்பதாம்”**[3] என்றும் “உதாரணங் காட்டல் வேண்டாமையை உணர்ந்து உரை நடந்த காலம் உடையவாழும் முற்காலத்து நூல்களென்பது கருத்து”[4] என்றும் தொல்காப்பிய பொருளதிகார உரையுள் பேராசிரியர் கூறியுள்ளமை இங்கு குறிக்கத்தக்கது. இதற்கு அடுத்த நிலையில் உரைகள் வெளிவரலாயின. “ஒரு நூலுக்கு முதன் முதலில் உரை எழுத முயன்றவர்கள் எடுத்த எடுப்பில் பெரிய அளவில் விரிவுரையோ, விளக்கவுரையோ எழுதவில்லை அவர்கள் முதலில் செய்யுளில் உள்ள அருஞ்சொற்களுக்குப் பொருள் எழுதினர். சொற்களைக் கொண்டு கூட்டி முடிக்கும் வகையினைச் சுட்டி, இன்றியமையாத சில வரலாற்றுக் குறிப்புகளை வரைந்து, சில பகுதிகளுக்கு மிகச் சுருக்கமாக உரை நயம் எழுதினர்”[5] இதற்கு அரும்புதவுரை என்று பெயர். மேலும் சிலர் நூல்களுக்குக் குறிப்புரைகள் எழுதினர். இது நாளடைவில் விரிவடைந்து விளக்கவுரை ஆயிற்று. ஒரு செய்யுள் நூலுக்கு வசனத்தில் உரை இயற்றுவதோடு செய்யுள் உருவத்திலேயே உரை இயற்றுவதும் உண்டு. இது வடமொழியில் பெருவழக்கு. தமிழ் நூல்களிலும் சிவஞான போதத்துக்குரிய உதாரண வெண்பாக்களும், சித்தியார் முதலியனவும் உரைநிலையிலேயே உள்ளன. தேவாரப் பதிகங்களில் பாசுரம் முதலிய சிலவற்றிற்குப் பெரிய புராணத்தில் சேக்கிழார் உரை விரித்துச் சொல்கின்றார். இவற்றைப் போலவே திருக்குறளுக்கும் செய்யுள் உருவத்தில் உரையுண்டு. தனியே குறளுரை என்னும் பெயர் பெறாவிட்டாலும் அவை

உரைகளின் தன்மையை உடையவே"[6] என்பர். இவ்வாறு பல்வேறு வகையான உரைகள் தமிழில் உள்ளன. இக்காலத்தில் பழம்பெரும் நூல்களுக்கு மிக எளிய உரைகள் எழுதி அவற்றை மக்களிடம் பரப்பும் முயற்சி நடைபெறுகிறது. இம்முயற்சிக்கு நல்லதொரு வெற்றியும் கிட்டியுள்ளது. இவ்வகையானதொரு சீரிய முயற்சியின் விளைவு தான் மீனவன் அவர்கள் அகநானூற்றிற்குக் கண்டுள்ள உரை எனக் கொள்ள முடியும்.

**உரையாசிரியரின் மாண்பு:-**

பல்துறை அறிவுக் கூறு கொண்ட உன்னத மனிதராய் உரையாசிரியர்கள் விளங்குகின்றனர்.

"தமிழகம், வேற்று இனத்தவர் படையெடுப்பால் தாக்குண்டு அதிர்ந்து நிலைகுலைந்து, தமிழ்மக்கள் தம் பண்பாட்டை மறந்த போதெல்லாம் பழம்பெரும் இலக்கியச் செல்வங்களை எடுத்துக்காட்டி தமிழ்மரபை வாழச் செய்த பெருமை உரையாசிரியர்களுக்கு உண்டு"[7] உரையாசிரியர்களின் உதவியின்றி பழம்பெரும் அரிய நூல்களை அறிந்து கொள்ளும் நல்லதொரு வாய்ப்பு நமக்குக் கிட்டியிராது. நூலாசிரியரின் உள்ளக் கருத்தினை நுணுகி ஆராய்ந்து, தெளிவு பெற எடுத்து எழுதும் வன்மையாளராய் உரையாசிரியர்கள் திகழ்ந்தனர். நூலாசிரியரின் திறமையைத் திறம்பட உணர்ந்தவர்கள் உரையாசிரியர்கள், "மிக விரைவாக ஓடிச் செல்லும் ஒரு பேரியாற்றை எதிர்த்து நீந்தி, அந் நீரோட்டத்தின் வன்மையை இற்றென உணர முற்படுவோர் போல, தாம் உரை எழுத மேற்கொண்ட சான்றோர் செய்யுட்களில் உள்ள சொற்களின் செலவை எதிர்த்து ஆராய்ந்து உண்மைப் பொருள் கண்டு உலகிற்கு உதவியவர் உரையாசிரியர்களே ஆவர்"[8] என்பர்.

இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியர்கள் எளிமையாய் உரை படைத்து மக்கள் மனதில் இலக்கிய புலமையைப் புகுத்த விழைந்தனர். இத்தகைய பண்பாளராகவே மீனவனும் திகழ்ந்தார்.

**உரை தோன்றுவதற்குரிய சூழல்கள்:-**

**தமிழில் உரைகள் தோன்றியதற்குரிய அடிப்படைச் சூழல்கள்:-**

1. சங்க கால வீழ்ச்சிக்குப் பிறகு வந்த வேற்றரசர்களின் ஆட்சிக் காலங்களில், மீண்டும் சங்க இலக்கியங்களையும், தொல்காப்பியத்தையும் படிக்கவும், அவை பற்றிச் சிந்திக்கவும் கூடிய ஆர்வநிலை ஏற்பட்டது; அதேபோது, மொழிநடை, பண்பாட்டு மாற்றங்கள், செய்திகளின் அருமைகள் முதலியவை தலைமுறைகளின் இடைவெளி காரணமாகச் சிறியசிறிய தடைகளை ஏற்படுத்தின; எனவே உரை கூறுவது அவசியமாயிற்று.
2. சங்க இலக்கியப் பாடல்கள் தனித்தனியாக எழுதப்பட்டன. இவை கி.பி.6ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு தொகுக்கப்பட்டன. தொகைகளாக வரும்போது மொத்தமாகப் படிப்பதற்கும் உரை கூறுவதற்கும் வாய்ப்புகள் ஏற்பட்டன.
3. சமணத் துறவிகளின் செயல்பாடுகளினால் பல சமணப் பள்ளிகள், சங்கங்கள் ஏற்பட்டன; அப்போது இலக்கண இலக்கிய நூல்களும் தத்துவங்களும் பகிர்ந்து கொள்ளப்பட்டன; விவாதிக்கப்பட்டன. இந்தச் சூழ்நிலைகள் தமிழில் உரைகள் தோன்ற நல்லதளம் அமைத்தன.

**உரைகள் வரலாறு:-**

தமிழில் இன்று கிடைப்பனவற்றுள், முதல் உரையாகக் கருதப்படுவது இறையனார் களவியலுரை ஆகும். இந்த உரை, நக்கீரர் பெயரால் வழங்குகிறது. கி.பி.8 அல்லது 9ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்றது. இதன் நடை, உரைநடை

வளர்ச்சிக்கு மிக முக்கியமான அடித்தளமாகும். இதனைத் தொடர்ந்து தொல்காப்பியம் பலருடைய கவனத்தைக் கவர்ந்தது. இளம்பூரணர் முதன் முதலாகத் தொல்காப்பியம் முழுமைக்கும் உரை எழுதினார். அதன் பின்னர், சேனாவரையர், பேராசிரியர், முதலிய பலர் உரை எழுதினார்கள். தொல்காப்பிய உரைகளுள், பொருளதிகாரத்துக்குப் பேராசிரியர் எழுதிய உரை தமிழில் இலக்கியக் கொள்கை பற்றி எழுத மிகவும் துணை நின்றது. கி.பி.11-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு தான் உரைகள் அதிகம் தோன்றின. தொடர்ந்து உரைகள் காலந்தோறும் எழுதப்பட்டு வந்தன; வருகின்றன.

20-ஆம் நூற்றாண்டிலும் உரைகள் பல தோன்றியுள்ளன. இவற்றுள் குறிப்பிடத்தக்கது பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியார் எழுதிய திருவாசக உரையாகும் கதிர்மணி விளக்கம் என்பது இதன் பெயராகும். மறைமலையடிகள் எழுதிய முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை மற்றும் பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை என்ற இரண்டும் உரைகளாக மட்டுமல்லாமல், இக்காலத்துத் தமிழ்த் திறனாய்வின் தொடக்க கால முயற்சிகளாகவும் கருதப்படுகின்றன. உரை என்பதற்கும் திறனாய்வு என்பதற்கும் இடையேயுள்ள வேறுபாடுகள் குறைவே என்பதனை மறைமலையடிகளின் இரு உரைகளும் காட்டுகின்றன. இவ்வாறாக எண்ணற்ற சீரிய உரைகள் தோன்றிய வண்ணம் உள்ளன. மாணவ சமுதாயமும், மக்கட் சமுதாயமும் பயனுற வேண்டி இன்றைய காலத்தில் எளிய உரைகள் தோன்றுகின்றன. அவற்றுள் ஒன்றாக மீனவன் அவர்களின் அகநானூற்று உரையும் வேதாந்த நூல்களுக்கான உரைகளும் காணப்படுகின்றன.

**உரைகளின் வகைகள்:-**

எவ்வகையான நூல்கள் மீது உரைகள் அமைகின்றன என்பதன் அடிப்படையில் உரைகளை முக்கியமாக இரண்டாகக் கொள்ளலாம். ஒன்று இலக்கண உரைகள். எழுத்து, சொல், பொருள் ஆகியவற்றுக்கு உரை எழுதுவது

பழைமையானது; அதே சமயத்தில் தொடர்ந்து வழங்கி வருவதும் ஆகும். இரண்டு இலக்கிய உரைகள் முக்கியமாகப் பழைய இலக்கியங்களுக்கான உரைகள் பலரால் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இலக்கணம், இலக்கியம் ஆகிய இரண்டிற்கும் உரையெழுதியவர்கள் மிகவும் குறைவு. நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்துக்கும் உரையெழுதியுள்ளார்; அதே சமயத்தில் பத்துப்பாட்டு எனும் சங்க இலக்கியத் தொகை நூலுக்கும், சீவக சிந்தாமணி என்னும் காப்பிய நூலுக்கும் உரை கண்டுள்ளார். தமிழில் இலக்கியத்திற்கு அமைந்த உரைகளே அதிகம் ஆகும்.

**உரைகளின் முக்கியத்துவம்:-**

மூலப் பனுவல்களே முதன்மையும் முக்கியத்துவமும் உடையன என்றாலும், பெரும்பாலான உரைகள் மூலப் பனுவல்களின் அளவுக்கு, **'உரைகள்'** என்ற எல்லைக்குள் முக்கியத்துவம் உடையனவாக உள்ளன அடியார்க்கு நல்லார் உரை, தமிழின் நாடகம் பற்றியும் இசை பற்றியும் அறிவதற்கு இன்றியமையாத மூலமாக உள்ளது. சைவ சித்தாந்த வரலாற்றில் மெய்கண்ட தேவர் எழுதிய சிவஞான போதம் எவ்வளவு முக்கியமானதோ, அந்த அளவிற்குச் சிவஞான முனிவரால் எழுதப்பட்ட சிவஞான மாபாடியம் எனும் உரையும் முக்கியமானதாக விளங்குகிறது. சில உரைகள் மூல நூல்களைவிட முக்கியத்துவமும் பெருமையும் பெற்று விடுகின்றன. சான்றாக, இறையனார் களவியல் உரை மற்றும் யாப்பருங்கல விருத்தியுரை ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

தமிழின் மொழி வரலாறு, பண்பாடு மற்றும் சமூக வரலாறு முதலியவற்றை எழுத இலக்கண இலக்கிய நூல்கள் உதவுகின்றன. அதுபோலவே உரைகளும் உதவுகின்றன. சான்றாகத் தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்குச் சேனாவரையர் எழுதிய உரை, தமிழ் மொழியில் சொற்பாகுபாடுகள், சொல்லமைப்புகள்

முதலியவற்றை அறியப் பெரிதும் உதவுகின்றது. தமிழின் கவிதையியலை அறிவதற்கு யாப்பருங்கல விருத்தியுரை துணை நிற்கின்றது.

தமிழின் உரைநடை வளர்ச்சியில் இவ்உரைகள் முக்கியத்துவம் வாய்ந்தவையாக உள்ளன. தொடரமைப்பு, சொல்தேர்வு, விளக்க முறைக்கான பிரத்தியோகமான நடை, வினா-விடை பாணியிலான நடைத் தெளிவு, ஆற்றொழுக்கான போக்கு முதலியவற்றைக் கொண்டுள்ள இந்த உரைகள், தமிழ் உரைநடையின் சிறந்த பண்புகளாக உள்ளன. இவை உரைநடையின் முக்கியத்துவத்தைப் பறைசாற்றுகின்றன. இவ்வகையில் மீனவன் அவர்களின் உரைகள் முக்கியத்துவம் பெறுகின்றன.

**எளிய உரையின் தேவை:-**

சங்க நூல்களுக்கு, முந்தைய காலத்தில் எழுப்பப்பட்ட உரை அனைத்தும், மொழியின் மாறுபாட்டால் அதன் காலச்சூழலின் கடினத்தன்மையால் எளிதில் புரியா வண்ணம் இருந்தன. உரைகளுக்கே உரைகாணும் மரபும் இருந்தபடியால், சங்க நூல்களின் மதிப்பான கருத்துகளை அனைவரும் அறியும் வகையினதாக எளிய உரைகள் தேவைப்பட்டன. “இக்காலத்தில் பழம்பெரும் நூல்களுக்கு மிக எளிய உரைகள் எழுதி அவற்றை மக்களிடம் பரப்பும் முயற்சி நடைபெறுகிறது. இம் முயற்சி செயலாக மலர்ந்து வெற்றி பெற்று விட்டது”[9] என்னும் மு.வை அரவிந்தனின் கூற்று இங்கு குறிக்கத்தக்கது. “பழைய உரைகளைத் திருத்தமாக வெளியிடுதல் உரையில் வழுவுள்ள இடங்களை ஆராய்ந்து உண்மை உரை காணுதல், சிறந்த பாடம் கண்டு போற்றுதல், உரைக்கு விளக்கம் தரல், கடினமான உரைப் பகுதிக்கு எளிய நடையில் விளக்கம் தரல், போன்ற நல்ல முயற்சிகள் நடைபெறுகின்றன. மாணவர்க்கு ஏற்ற வகையில் அடிக்குறிப்பும், வினா-விடைகளும் அமைத்துத் தரல், உரையில் வந்துள்ள நயமான பகுதி, உவமைகள், மேற்கோள்,

பழமொழி ஆகியவற்றைத் திரட்டித் தருதல் போன்ற பயனுள்ள பணிகளும் நடைபெற்று வருகின்றன. எதையும் எளிதாக விரைவில் பெற நினைக்கும் மக்களின் மனநிலை, பரபரப்பான வாழ்க்கை முறை, ஆழ்ந்து சிந்தித்துத் தெளிய வாய்ப்பில்லாத சுற்றுச்சூழல், பல்வேறு செய்திகளையும் அறிந்திருக்க வேண்டிய நெருக்கடி ஆகியவற்றை நோக்கும் போது, இக்காலத்துப் புதிய முயற்சிகள் பெரிதும் பயனுள்ளவை என்பது விளங்கும்”[10] என்பர் மு.வை.அரவிந்தன் அவ்வகையில் மீனவனின் உரைகளும் குறிப்பிடத்தகுந்த இடம் வகிக்கின்றன.

**அகநானூறு:-**

எட்டுத்தொகை நூல்களுள் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு. ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய ஐந்தும் அகம் பற்றியன ஆயினும், அகம் என்ற சொல்லால் குறிக்கப்படுவது அகநானூறு ஆகும். அகத்தொகையுள் நீண்ட பாடல்களைக் கொண்டமையால் இதனை ‘நெடுந்தொகை’ என்றும் அழைத்தனர். மேலும் களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவை என்ற மூன்று பிரிவுகளை உடைய தனிச்சிறப்பும் அகநானூற்றுக்கு உண்டு. அகநானூற்றில் 400 பாடல்களும், சிவபெருமானைப் பற்றிப் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்றும் ஆக 401 பாடல்கள் காணப்படுகின்றன. இன்ன திணை என எளிதில் உணரத்தக்க வகையில் எண்ணால் சிறப்பு பெற்றது அகநானூறு. ஒற்றைப்பட எண்ணாலான பாடல்கள் இருநூறும் பாலை, இரட்டைப் பட எண்களில் 2, 8 எனப்படுபவை எண்பதும் குறிஞ்சி, 4 எனப்பட்டவை நாற்பதும் முல்லை, 6 என்பவை நாற்பதும் மருதம், 10-எனப்படும் நாற்பதும் நெய்தல் ஆகும். 1 முதல் 120 பாடல்கள் களிற்றுயானை நிரை 121 முதல் 300 வரையான 180 பாடல்கள் மணிமிடை பவளம்; 301 முதல் 400 வரையான 100 பாடல்கள் நித்திலக்கோவை என மூன்று பகுப்புப் பெயர்கள் காரணம் பற்றி வந்ததாக நூலின்

பாயிரப் பகுதி உணர்த்துகிறது. அகநானூற்றுப் புலவர்கள் 145 பேர் அவர்களுள் 65 பேர், அகநானூற்றில் மட்டும் பாடல் பாடியுள்ளார்கள். நாடாள்வோர், அந்தணர், இடையர். எயினர், பொற்கொல்லர், வணிகர், வேளாளர் எனப் பல தரப்பினர் புலவர்களாக இருந்த செய்தி அவர்தம் பெயர்களின் முன்னால் அமையும் அடைமொழிகளால் தெரிகிறது. இத்தகு புலவர்களால் தமிழ் மக்களின் வாழ்வும், வரலாறும் அகநானூற்றில் பதிவாகி உள்ளன.

**அகநானூறு – பதிப்பு வரலாறும், உரையாசிரியர்களும்:-**

சங்க இலக்கியப் பதிப்புரைகள் என்னும் நூலில் அகநானூற்றிற்கு 1918 தொடங்கி 2003 வரை 11 பதிப்புகள் வெளிவந்துள்ளதை ஆவணப்படுத்தி உள்ளார். இரா.ஜானகி "அகநானூறு மூலமும், உரையும், முதற்பகுதி 1918 இல் முதன் முதலில் பதிப்பிக்கப் பட்டுள்ளது. ஆனால் இப்பதிப்பின் முகப்புப் பக்கத்தைத் தவிர வேறு எந்தப் பக்கமும் பார்க்கக் கிடைக்கவில்லை அகநானூற்றின் இரண்டாம் பகுதி 1920-இல் வந்ததாக ஆய்வாளர்கள் தெரிவித்த தகவலைத் தவிர, இப்பதிப்பும், பார்க்கக் கிடைக்காத காரணத்தால் எந்த உறுதியான தரவையும் கொடுக்க முடியவில்லை. இந்நூலின் முழுப்பதிப்பானது 1923 இல் **'அகநானூறு மூலமும் பழைய உரையும்'** என்னும் பெயரில் ரா. இராகவையங்கார் பதிப்பிக்க, கம்பர் விலாசம் இராஜகோபாலையங்கார் என்பவரால் வெளியிடப்பட்டுள்ளது."[11] இதன் பின்னர், 1926-ஆம் ஆண்டு அகம்-களிற்றியானை நிரை மட்டும் இதே பதிப்பகத்தில் வெளியாகி உள்ளது.

1943, 1944, 1946 என்னும் ஆண்டுகளில், அகநானூற்றின் முறையே களிற்றியானை நிரை, நித்திலக்கோவை, மணிமிடைப் பவளம், ஆகியவற்றைத் தனியே தமிழ் வெளியீட்டுக் கழகம், திரு. ந.மு. வேங்கடசாமி நாட்டார், இரா. வேங்கடாசலம் பிள்ளை ஆகியோர்தம் உரையுடன் வெளியிட்டது.

**மீனவனின் உரை நெறி:-**

சங்கப் பாடல்கள் காலப் பழைமையால், அக்கால நடையமைப்பு, சொல்லாட்சி, கருத்தமைதி உடையன. எனவே கடினம் போல் தோன்றும். எனினும், முயற்சியுடன் எடுத்துப் படிக்கும் எவர்க்கும் விளங்கும் வண்ணம் மீனவனின் உரை நெறிமுறை உள்ளது. கொண்டு கூட்டு, பாடலுக்கு முன்பகுதி, தெளிவுரை, அருஞ்சொற்பொருள், சிறப்புக் குறிப்பு, என்னும் வரிசையில், ஆசிரியர் உரை கண்டுள்ளார். கவிஞர் மீனவனின் உரைநூல் கோவிலூர் மடாலயப் பதிப்பகத்தாரால், 2004-ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றது.

**1. கொண்டு கூட்டுமுறை:-**

"வழிவழியாக நூல்களுக்கு உரைகோல் பழகியவர்கள் தொடக்கத்தில் விரிவான உரையோ, விளக்கமோ எழுதவில்லை. முதன் முதலில் அருஞ்சொற்களுக்குப் பொருளும், சொற்களைக் கொண்டு கூட்டி முடிக்கும் வகையும், சில வரலாற்றுக் குறிப்பும் மிகச் சுருக்கமாய் எழுதி வைத்தனர்"[12] உரை வளர்ச்சியின் தொடக்கத்தில் இருந்து கொண்டு கூட்டு முறை இருந்து வந்துள்ளமை இதனால் புலனாகிறது. எனினும், மீனவன் அவர்களின், உரையில் ஒரு புது வகையான கொண்டு கூட்டு முறை பின்பற்றப்படுகிறது. இது பாடலின் கட்டமைப்பைக் காட்டும். எழுவாய், பயனிலையாக, நின்று, சிறு, சிறு வாக்கியங்களாக அமைந்து தொடர்களாக மாறுவதை நன்கு விளக்குகிறது. களிற்றியானைநிரையில் பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகற்குக் கிழத்தி கூறும்.

**"அரிபெய் சிலம்பின் ஆம்பல்அம் தொடலை**
**அரம்போழ் அவ்வளைப் பொலிந்த முன்கை,**
**இழை அணி பணைத்தோள் ஐயை தந்தை,**
**மழைவளம் தரூஉம் மாவண் தித்தன்,**

**பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண்,**

**கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தம்,**

**குழைமாண் ஓள் இழை நீவெய் யோளொடு,**

**………………………………………..**

**நெருநல் ஆடினை புனலே, இன்று வந்து (அகநா.களிற்.6)**

என்னும் பாடலுக்கு, தலைவ!

**நேற்றுப் புனலாடினாய்:**

சிலம்பின் முன்கை பணைத்தோள் ஐயை தந்தைஉறந்தையாங்கண் காவிரி நீத்தம், நீ வெய்யோளொடு பூந்தார் குழைய நெருநல் ஆடினை. **எம் முதுமையை எள்ளி உரைக்க வேண்டா**: (இன்று வந்து) புதல்வன் தாய் எனப் பொய்ம்மொழி பயிற்றி எம் முதுமை எள்ளல் அ∴து அமையும். (16-21) **எம் இளமை பழையகதை**: பழனத்து நீர்நாய் செறியும் களாஅர் அன்ன எம் இளமை தொல்ல∴து (21-22) உன் பொய்யால் மகிழ மாட்டோம், நின் பொய்ம்மொழி எமக்கு இனிமை செய்வது எவன்?" இதனுள் பதினோராம் அடியைக் கொண்டு முதல் பத்து அடிகளைக் கூட்டி விளக்கி, பின் பதினைந்து இருபத்து ஒன்று, இருபத்தி இரண்டாம் அடிகளை முதன்மையாய்க் கொண்டு அதற்கு முந்தைய அடிகளை அழகாய் இணைத்து விளக்கியுள்ளார்.

இதே போல் தலைமகன் தேர்ப்பாகற்கு உரைத்ததாய் அமையும்

**"நன்கலம் களிற்றொடு நண்ணார் ஏந்தி,**

**வந்துதிறை கொடுத்து, வணங்கினர் வழிமொழிந்து**

**சென்றீக என்ப ஆயின் வேந்தனும்**

**நிலம் வருத் துறாஅ ஈண்டிய தானையொடு**

**இன்றே புகுதல் வாய்வது நன்றே;**

**மாட மாண்நகர்ப் பாடுஅமை சேக்கைத்**

**துனிதீர் கொள்கைநம் காதலி இனிதுற**

**பாசறை வருத்தம் வீட நீயும்.......''** **(அக.மணி.ப.124)**

என்னும் பாடலுக்கு

"(பாகனே!)

(1-5) வேந்தனும், நண்ணார் (பகைவர்) திறை கொடுத்து, **'சென்றீக'** என்பவாயின், (நம் ஊர்க்குத் திரும்பி) இன்றே புகுதல் வாய்வது (உண்மை)

(6-8) நம் காதலி இனிதுற (வும்), வருத்தம் வீட(வும்), நீங்கவும், (8-10) (நீயும்) புனைவதை, கொய்சுவல், வயங்குபரிப் புரவி(யை)

இதனுள் மூன்றாம் அடியில் காணப்படும் ''வேந்தன்'' என்பதை முதலில் வைத்து முதல் அடிகளை விளக்கியுள்ளார் அதன் பின் ஏழாம் அடியில் காணப்படும் ''நம் காதலி இனிதுற'' என்பதை முன்னிறுத்தி முறையே ஐந்து, ஆறு, மற்றும் எட்டாம் அடியில் கூட்டி விளக்கம் அளித்துள்ளார்.

(11-16) காலை, வண்டு இரி (ஓட) பணை (குழல்) அசை இயம்பும் ஊர்(க்கு), மாலை(யில்) எய்தக் கடவுமதி (செலுத்துக)" என்பதாகும்

தோழி தலைமகனை வாயில் மறுக்கும்

**''ஊரல் அவ்வாய் உருத்த தித்தி**

**பேர் அமர் மழைக்கண், பெருந்தோள், சிறுநுதல்**

**நல்லள் அம்ம குறுமகள் - செல்வர்**

**கடுந்தேர் குழித்த நெள்ளல் ஆங்கண்,**

**நெடுங்கொடி நுடங்கும் அட்ட வாயில்**

**இருங்கதிர்க் கழனிப் பெருங்கவின் அன்ன**

……………………………………………

……………………………………………

**பழையன் ஒக்கிய வேல்போல்,**

**பிழையல கண், அவள் நோக்கியார் திறத்தே"** **(அகநா.நித்.6)**

என்னும் பாடலுக்கு,

**"(1-3) பரத்தை இளையவன், அழகானவள்:** (எங்களுக்கு வயதாகிவிட்டது) ஊரல் அவ்வாய் உகுத்த தித்தி, மழைக்கண், பெருந்தோள், சிறுநுதல், குறுமகள் நல்லள் அம்ம,

(8-13) **அவள் கண்கள் பார்த்த பார்வை தப்பாது:** பழையன் வென்வேல், யானைச் சோழர் தம் மறவன், தழை அளந்து அறியாக் காவிரிப் படப்பை, புனல்மலி புதவின் போஒர் கிழவோன். அவன் ஒக்கிய வேல் போல், பிழையல கண் அவள் நோக்கியோர் திறத்தே, (3-18) **அவள் அழகைப் பாராட்டி விழாக் கொண்டாடுக**: (வெறுத்துப் பேசுவது) செல்வர் தேர் குழிந்த தெள்ளல், ஆங்கண், கொடி நுடக்கும் அட்ட வாயில், கதிர்க் கழனி கவின் அன்ன நலம் பாராட்டி எழில் பொலிந்து விழவில் செலீஇயர் வேண்டும்" என்பதாகும்.

இதனுள் ஆறாம் அடியில் காணப்படும் "பெருங்கலின் அன்ன" என்பதை முதலில் கொண்டு ஏனைய அடிகளுக்கு விளக்கம் தந்துள்ளார் மேற்சுட்டப்பட்ட சான்றுகளின் வழி அவர்தம் கொண்டு கூட்டு முறை புலனாகிறது. இம்முறையில் பாடலில் என்ன கூறப்பட்டுள்ளது; எவ்வாறு கூறப்பட்டுள்ளது என்பது விளக்கம் பெறுகிறது. பாடலைப் படித்துவிட்டு இக்கொண்டு கூட்டினைத் திரும்பப் படித்தால் பாட்டின் பொருள் எளிதில் விளங்கும். பாடல் முழுவதும் சுருங்கிய முறையில் உரைநடையாய் வருவது போல் தோன்றும்படி சில அருஞ்சொற்பொருளை

அடைப்பினுள்ளும் தந்து, வாக்கியமாக இணைக்க வேண்டிய இடத்து இணைத்து, பாடற் கட்டமைப்பும், கருத்தும் ஒருங்கே விளங்குமாறு இப்பகுதி அமைந்துள்ளது.

**பாடலுக்கு முன் பகுதி:-**

சங்கப் பாடல்களில் ஒவ்வொரு பாடலும் படித்தவுடன் யார் கூற்று என்பதை அறிய இயலாநிலையில் உரையாசிரியர்கள் தத்தம் அரும்பெரும் புலமையினால் அதை உணர்ந்து உரையில் விளக்கினர். பாடலுக்குப் பின் அமையும் இவ்வாறான குறிப்புகளைக் காட்டிலும் பாடலுக்கு முன் கூற்றும், விளக்கமும் அமைந்திருந்தால், கற்பவருக்கு எளிமையாய் இருக்கும் என்பதை மனதில் கொண்ட கவிஞர், அதைத் தன் உரையில் ஏற்றமுறச் செயல்படுத்தியுள்ளார். ஒவ்வொரு பாடலுக்கு முன்பும், அப்பாடல் யார் கூற்று என்பதையும், அக்கூற்றிற்கான விளக்கத்தையும் குறிப்பிட்டுள்ளார்.

களிற்றியானை நிரையில்

**“வாடல் உழுஞ்சில் விளைநெற்று அம்துணர்**
**ஆடுகளப் பறையின், அரிப்பன ஒலிப்பக்**
**கோடை நீடிய அகன் பெருங் குன்றத்து,**
**நீர் இல் ஆர் ஆற்று நிவப்பன களிறு அட்டு,**
**ஆள்இல் அத்தத்து உழுவை உகளும்**
**…………………………………………**
**…………………………………………..**
**…………………………………………..**
**கடல் கால் கிளர்ந்த வென்றி நல்லேல்**
**வான வரம்பன் அடல்மனைக் கலங்கிய**
**உடைமதில் ஓர் அரண் போல,**

**அஞ்சுவரு நோயொடு துஞ்சா தேனே"   (அகநா.களிற்.நி.45)**

என்னும் வெள்ளிவீதியாரின் பாடல் தொடங்குவதற்கு முன்பே **இதன் கூற்று: வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது; விளக்கம்: தலைவனைப் பிரிந்து ஆற்றாமை அடைந்த தலைவியைத் தோழி ஆற்றுவிக்கின்றாள். அப்போது ஆற்றாமை மிகுதியால் வருந்திய தலைவி, அவ்வாறு ஆற்றியிருக்க என்னால் ஆகாது என்ற பொருள்படக் கூறுகிறாள்."**

மணிமிடைப் பவளத்தில், பொதும்பில் கிழான் வெண்கண்ணனார் பாடிய **(அகநா.மணி.ப.92)** பாடலுக்கு கூற்று, தோழி தலைமகனைச் செறிப்பு அறிவுறீஇ இரவுக்குறி மறுத்தது; செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது என்பதும் பாடம்.

**விளக்கம்:** மணந்து கொள்ளும் எண்ணம் இன்றிக் களவொழுக்கம் ஒன்றையே விரும்பி வந்து செல்லும் தலைவனை நோக்கித் தோழி, தலைவியை மணந்து கொள்ள வேண்டும் என்ற கருத்தைக் கூற, தினை முதிர்ந்ததை உணர்த்தி, இனித் தலைவி வீட்டில் சிறை வைக்கப் படுவாள் எனச் சொல்லி, இனிமேல் பகற்குறியில் தலைவியைக் காண இயலாது. இரவுக் குறியிலும் அவளைக் காணாமைக்குக் காரணம் உள்ளது என்பதைச் சொல்லியது என விளக்கம் கூறி கூற்றினைத் தெளிவுபட உணர்த்தியுள்ளார்.

நித்திலக்கோவையின் பன்னிரெண்டாம் பாடல், மதுரை மருதன் இளநாகனார் பாடியது, இதன் கூற்று தலைமகன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது என்றும், தலைமகள் சொல்லியது என்றும் இரு வேறு கருத்துகள் உள்ளன. இதைச் சுட்டிக் காட்டி இதில் தலைமகள் சொல்லியது என்பது தான் பொருத்தமாக அமையும் என்பதை அதற்கான காரணங்களைச் சுட்டி விளக்கியுள்ளார்.

இதில் 46-ம் பாடல் ஒன்று தோழி தலைமகற்கு வாயில் மறுத்த கூற்றுப் பாடல். இதற்கு விளக்கம் தரும் உரையாசிரியர்,

“பரத்தையிடம் போய் மீண்டு வந்த தலைவன், தலைவி ஊடல் கொண்டிருப்பதைக் கண்டு தலைவியின் ஊடலைத் தீர்க்கும் படி தோழியிடம் தூது செல்ல வேண்டினான் அவன் வேண்டுகோளைத் தோழி மறுத்து உரைத்தது” (வாயில்-தூது) என்று உரைக்கிறார். பாடலுக்கு முன்பாகக் கூற்றும், கூற்று விளங்காதவிடத்து, விளக்கமும் கூறி உரைக்கு வலுச்சேர்க்கிறார்.

**தெளிவுரை:-**

உரைப்பகுதியின் முக்கியமான அங்கம் தெளிவுரை ஆகும். சங்கநூல்களின் பழைய உரைகள் அனைத்தும், குறிப்புரைகளாக உள்ளன “ஒரு நூலுக்குக் குறிப்புரை தோன்றிய பின், காலம் செல்லக் செல்ல அந்நூலைப் பற்றிய கருத்துக்கள் வளர்ந்தன. குறிப்புரை மெல்ல மெல்ல விரிவடைந்து விளக்கவுரை ஆயிற்று உரை வளர்ந்த போது பல மேற்கோள்கள் இடம்பெற்றன. இவ்வாறு ஒரு நூலுக்குச் சிறிய அளவில் தோன்றிய குறிப்புரை, காலப்போக்கில் விளக்கவுரை ஆயிற்று”[13] இந்த விளக்கவுரை பயன் தந்த போதிலும், படித்தவுடன் புரிந்து கொள்ளும் விதத்தில் தெளிவுரை தேவைப்பட்டது. அகநானூறுக்கு இத்தகையதொரு தெளிவுரை நல்கிய பெருமை மீனவன் அவர்களைச் சாரும். கல்லூரியில் தமிழைப் பாடமாகப் படிக்காதவர் கூட அகநானூற்றை எளிமையாக கற்கும் வகையாய் மிக அருமையானதொரு தெளிவுரையை வழங்கியுள்ளார்.

**“நீடுநிலை அரைய செங்குழை இருப்பை,**
**கோடு கடைந்தன்ன, கொள்ளை வான்பூ**
**ஆடு பரந்தன்ன, ஈனல் எண்கின்**
**தோடுசினை உரீஇ உண்ட மிச்சில்**
**பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்**
**கண்திரள் நீள் அமைக் கடிப்பின் தொகுத்து,**

**குன்றகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகும் அம்**

**சீறூர் நாடு பலபிறக்கு ஒழிய,**

**சென்றோர்அன்பு இலர்-தோழி என்றும்**

**அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்ப்**

**பாணர் ஆர்ப்ப, பலகலம் உதவி,**

**நாளவை இருந்த நனைமகிழ் திதியன்**

**வேளிரொடு பொரீஇய கழித்த**

**வாள்வாய் அன்ன வறுஞ்சுரம் இறந்தே"** **(அக.நித்-331)**

என்னும் பாடலுக்கு **"தோழியே,**

நீண்ட அடிமரத்தினொடு சிவந்த தளிர்களை உடைய இருப்பை மரங்களில் தந்தத்தைக் கடைந்தது போல விளங்கும் மிகுதியான வெண்பூக்கள் பூத்திருக்கும். ஆடுகள் பரவி இருப்பதைக் போலக் குட்டிகளை ஈன்றெடுத்த பெண் கரடிகளின் கூட்டம் அதன் கிளைகளில் ஏறிப் பறித்து உண்டவை போக, எஞ்சிக் கிடப்பவற்றை பசிய தழை உடையை அணிந்தவரான எயினர் மகளிர், கணுக்கள் திரண்டு நீண்டு விளங்கும் மூங்கிற் குழாய்களில் சேர்த்துக் குவிப்பர். அவ்வாறு அடைத்து வைத்துக் கொண்டு, குன்றுகளின் இடையில் அமைந்துள்ள சிறிய ஊர்களின் தெருக்கள் தோறும் சுற்றி வந்து விற்றுத் திரிவர். அத்தகைய அழகு மிக்க சிற்றூர்களை உடைய நாடுகள் பலவும் பிற்பட்டுச் செல்லத் தலைவன் பிரிந்து சென்றான்.

என்றும் அரியதான பண்ணும் திறமும் எனப்பட்ட இசைத் துறைகளை முழுதாக அறிந்தவரும், கரிய தண்டினைக் கொண்ட யாழினை உடையவருமான பாணர்கள், ஆரவாரிக்கும்படி, அவர்களுக்குத் திதியன் என்பான் அணிகள் பலவும் தந்து நாளோலக்கம் கொண்டிருப்பான். கள்ளினால் ஏற்பட்ட மகிழ்வை உடைய

அத்திதியன் என்பான் வேளிருடன் போரிட, உருவிய வாளின் வாயைப் போன்ற கொடிய வறண்ட பாலை நெறியினைக் கடந்து சென்றனன் நம் தலைவன்" என்பதாகும். மற்றுமோர் பாடல், களிற்றியானை நிரையின் 14-வது பாடல், பாணன் கூற்றுப்பாடல், தலைவன் பிரிந்து சென்ற காலத்தில் அவன் பிரிவை ஆற்றாது வருந்தும் தலைவி துயர் தீரும் பொருட்டுத் தலைவனின் வருகையைப் பாணன் தன் பாங்காயினார்க்குந் தெரிவிப்பது போல் தலைவிக்கும் கூறியது.

**"அரக்கத்து அன்ன செந்நிலப் பெருவழி**
**காயா செம்மல் தாஅய், பலஊடன்**
**ஈயல் மூதாய் வரிப்ப, பவளமொடு**
**மணிமிடைந்து அன்ன குன்றம் கவைஇய**
**அம்காட்டு ஆர்இடை, மடப்பிணை தழீஇ,**
**திரிமருப்பு இரலை புல் அருந்து உகள,**
**முல்லை வியன்புலம் பரப்பி, கோவலர்**
**குறும்போறை மருங்கின் நறும்பூ அயர,**
**பதவுமேயல் அருந்து மதவுநடை நல்ஆன்**
**வீங்குமாண் செருத்தல், தீம்பால் பிலிற்ற**
**கன்று பயிர் குரல, மன்றுநிறை புகுதரும்**
**மாலையும் உள்ளார் ஆயின், காலை**
**யாங்குஆ குவம்கொல்? பாண என்ற**
**மனையோள் சொல் எதிர் சொல்லச் செல்வேன்**
**செவ்வழி நல்யாழ் இசையினென் பையென**
**கடவுள் வாழ்த்தி பையுள் மெய்நிறுத்து**
**அவர்திறம் செல்வேன் கண்டனென் யானே**

**விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுக**

**கல்பொருது இரங்கும் பல்ஆர் நேமிக்**

**கார்மழை முழக்குஇசை கடுக்கும்**

**முனைநல் ஊரன் புனைநெடுந் தேரே” (அக.களி.நி.310)**

தலைவனின் பிரிவை ஆற்றாதிருந்த தலைவிக்கு ஆறுதலாகத் தலைவன் வரவு பற்றிப் பாணன் ஒருவன் தன் அயல்நின்ற பாணனுக்குக் கூறுவான் போலத் தலைவிக்கு உணர்த்தும் பாடல் இதுவாகும்.

**பாண! (மாலை வருணனை)**

குன்று சூழ்ந்த காட்டின் செவ்வரக்கு போன்ற சிவந்த நிலத்தில் காயாவின் பூக்கள் பரவியும் இந்திரகோபப் பூச்சிகள் ஊர்ந்து செல்லும் காட்சி பவளத்தோடு நீலமணியை வைத்தாற்போல இருக்கவும் பெண்மானைத் தழுவிய ஆண்மான் தாவவும், பசுக்கள் பால்சொரியத் தம் கன்றுகளை நினைந்தபடிக் குரல் எழுப்பிக் கொண்டு தொழுவத்திற்குப் புகவும் ஆன மாலைப் பொழுதில் தலைவன் வாராததால் ஏங்கினாள் தலைவி.

இம்மாலையில் அவர் வருவார் எனக் கூறிய பாணனே! அவர் வாராததால் நான் எங்ஙனம் உய்வேன் என என்னைப் பார்த்த தலைவி கேட்டதற்குப் பதில் கூறமாட்டாமல் யாழை வாசித்துக் கொண்டே அப்புறம் போய்த் தலைவனை அழைத்து வரப் புறப்பட்டேன்.

அங்ஙனம் புறப்படுகையில் இடியோசை போல உருளைகள் கற்களில் மோதுமாறு விரைந்து குதிரையால் இழுத்து வரும் தலைவனது தேரினைக் கண்டேன் என்பது இப்பாடலின் பொருள்.

மணிமிடைப்பவளத்தில் இடைக்காடனார் எழுதிய (அக.மணி.274)

என்னும் பாடலுக்குப் பாகனே!

இது கார்காலம். உ தலைவி முல்லைப் பூச்சூடி என் வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பாள், அவள் உறைவிடம் குளிர்ந்த காட்டில் ஓர் ஊராகும். அக்காட்டில் புன் செய் நிலத்தில் எருவிற்காக ஆட்டுக் கிடையை நிறுத்தி இடையர் காவலிருப்பர். மேகம் இடியிடித்துப் பாம்புகளை நடுங்கச் செய்து பெருமழை பெய்யும் நள்ளிரவிலும் இடையன் கருத்துடன் காவல் செய்வன். செம்மறியாட்டுக் கிடையை காவல் செய்யும் ஓர் ஆயன் வலிய கோலில், ஒரு பக்கம் சோற்றுப் பானை வைத்த உறியைத் தொங்கவிட்டுள்ளான். மறு பக்கம் தோல் படுக்கையைக் கட்டியுள்ளான். மழை தன் ஒரு பக்கத்தை நனைக்க கோலைக் காலுடன் சார்த்திக் கொண்டு தனியே நிற்பான் அருகில் தீக்கடைக்கோலால் தீமூட்டி விறகை எரிய விட்டு அதில் குளிர்காய்வான். அவன் வாயை மடித்து எழுப்பும் சீழ்க்கை ஒலி, நெடுந்தொலைவு கேட்க, துள்ளுநடை உடைய ஆட்டுக் குட்டியைக் கவ்விச் செல்லச் செவ்வி பார்க்கும் குள்ளநரி அஞ்சி முட்புதரில் விழுந்து எழுந்து தலை தெறிக்க ஓடும். அத்தகைய முல்லை நிலக் காட்டில் இருக்கிறது தலைவி வாழும் ஊர் (அங்கே தேரைச் செலுத்துக)" என்பதாகும்.

மேற்சுட்டப்பட்ட உரைகள் தெளிவாக எளிய நடையில் அமைந்திருத்தல் சுட்டத்தக்கது. அகநானூற்றில் அமைந்திருக்கும் வாழ்த்தொடு கூடிய நானூற்றிஓராம் பாடலுக்கும் இவ்வகைத்தான தெளிவுரையைக் கவிஞர் அமைத்திருக்கும் பான்மை, அவர் தம் புலமைத்திறத்திற்கு அரிய சான்றாகும்.

**அருஞ்சொற்பொருள்:-**

முற்காலத்தில் எழுப்பப்பட்ட முதல் உரைகள் அனைத்தும் குறிப்புரைகளாக இருந்தன. இக்குறிப்புரைகள் கடினமான சொற்களுக்குப் பொருள் எழுதும் முறையாக இருந்தன. வகுப்பறையில் செய்யுள் நடத்துமிடத்து கடினமான சொற்களுக்கான ஐயம் மாணவர்களிடம் ஏற்படும். அவர்கள் வினவும் போது நாம்

கூறும் உரை போன்றது குறிப்புரை ஆகும். "உரையாசிரியர்கள் என்று நாம் போற்றும் முன்னோரெல்லாம் பாடஞ்சொல்லிய வகுப்பாசிரியர்கள் என்பதனை நினைவு கொள்ள வேண்டும் பாடத்திற் சொல்லிய உரைகளே அவர்கள் எழுதிய உரைகளாம்"[14] என்பர் அறிஞர் வ.சுப. மாணிக்கம். அகநானூற்றிற்கு உரை படைத்த ஆசிரியர் மீனவன் நல்லாசிரியர் விருது பெற்றவர் என்பது ஈண்டு குறிக்கத்தக்கது. ஒவ்வொரு பாடலுக்கான தெளிவுரையும் நன்கு புலப்பட்ட போதிலும் சொற்களுக்கான சரியான பொருளும் அமைய வேண்டி, கடினமான சொற்களுக்குப் பொருள் விளக்கம் தந்துள்ளார். சான்றுகள் வருமாறு,

களிற்றியானை நிரையில் உலோச்சனார் பாடிய தோழி கூற்றுப் பாடலாகிய,

**"பெருநீர் அழுவத்து எந்தை தந்த**
**கொழுமின் உணங்கற் படுபுள் ஓப்பி**
**எக்கர்ப் புன்னை இன்நிழல் அசைஇ**
**செக்கர் நண்டின் குண்டு அளை கெண்டி,**
**ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்**
**தாழை வீழ்கயிற்று ஊசல் தூங்கி,**
**கொண்டல் இடுமணல் குரவை முனையின்**
**வெண்தலைப் புணரி ஆயமொடு ஆடி**
**மணிப்பூம் பைந்தழை தைஇ அணித்தகப்**
**பல்பூங் கானம் அல்கினம் வருதல்**
**கவ்வை நல் அணங்கு உற்ற இவ்ஊர்,**
**கொடிது அறி பெண்டிர் சொற்கொண்டு அன்னை**
**கடிகொண் டனளே தோழி பெருந்துறை**
**எல்லையும் இரவும் என்னாது கல் என**

**வலவன் ஆய்ந்த வண்பரி**

**நிலவுமணல் கொட்கும் ஓர் தேர்உண்டு எனவே**

**(அகநா.களிற்.நி. 20)**

என்பதாகும். இதில் உள்ள அருஞ்சொற்களுக்கு ஞெண்டின்-நண்டின், அளை—வளை, ஞாழல் - சுரபுன்னை, கொண்டல் - கீழ்காற்று, அல்கினம் - தங்கினம், கவ்வை—பழிச்சொல், அணங்கு—பேய், கொட்கும்-சுழன்று திரியும்". என உரைகூறுவர்.

"மகிழ்நன் - மருதத்தலைவன், புதுவீ—புதுமலர், மாத்தின் -மாமரத்தின். குருகு—நாரை, மறுகு—தெரு, வயங்கு— விளங்கு, மழைக்கண் - குளிர்ந்த கண், நோய் - துன்பம், கமழ்தார் - மணக்கும் மாலை, பரீஇயினள் - அறுத்துக் கொண்டு, துனி — பலரறியக் கலாம் விளைத்தல், இறந்திசினோள்-சென்றாள், செம்மல்-தலைமை."(அக.நித்.306)

"சிமைய — உச்சியை உடைய, கவாஅன் - பக்கமலை, வெண்தேர் - பேய்த் தேர், துனைஎரி — விரைவான தீ, துன் அரும் - நெருங்குதற்கு அரிய, கான் புலந்து — காட்டை வெறுத்து, செங்கனை — சிவந்த அம்பு, கொடுவில் - வளைந்தவில், அதர—வழிகளை உடைய, அரம்பு - குறும்பர்கள், களையுநர் - நீக்குபவர், சுரம் - காடு, முருந்து — மயில் தோகையின் அடிப்பகுதி, துவர்வாய் - பவள வாய்" (அக.மணி.ப.179)

மேற்சுட்டிய சான்றுகள் தெளிவுரையில் தெளிவடைய இயலாதவர்கட்குக் கை கொடுப்பதாக அமைந்துள்ளது.

**சிறப்புக் குறிப்பு:-**

தெளிவுரை, அருஞ்சொற்பொருள் என உரையமைத்த மீனவன், பாடலை மனதின் அடிஆழம் வரை கொண்டு சென்று நினைவில் நிறுத்த தேவையான

பாடல்களுக்கு சிறப்புக் குறிப்பினைத் தருகிறார். இந்த சிறப்புக்குறிப்பு பாடலின் தன்மையை மேலும் எளிதாக்க உதவுகிறது. இதற்கான சான்றுகள் பின்வருமாறு:- அகநானூற்று களிற்று யானை நிரையின் 44-ஆவது பாடல் வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்ப் பாகற்குச் சொல்லியதாகும்.

**“வந்து வினை முடித்தனன் வேந்தனும், பகைவரும்**
**தம்திறை கொடுத்துத் தமர்ஆ யினரே**
**முரண்செறிந் திருந்த தானை இரண்டும்**
**ஒன்றுஎன அறைந்தன பணையே, நின்தேர்**
**முன்இயங்கு ஊர்தி பின்னிலை ஈயாது**
**ஊர்க, பாக, ஒருவினை, கழிய**
**நன்னன், ஏற்றை நறும்பூண் அத்தி**
**துன் அருங் கடுந்திறல் கங்கன், கட்டி,**
**பொன் அணி வல்வில் புன்றுறை, என்றுஆங்கு**
**பழம்பல் நெல்லின் பல்குடிப் பேரவை,**
**பொங்கடி படிகயம் மண்டிய பசுமிளை**
**தண்குட வாயில் அன்னோள்**
**பண்புடை ஆகத்து இன்துயில் பொறவே”   (அக.களி:44)**

இப்பாடலுக்கு “சேர சோழப் போர் பற்றிய வரலாற்றுக் குறிப்பும் முடியுடை வேந்தர் மூவரின் சிறந்த ஊர்கள் கழுமலம், குடவாயில், அழும்பில் பற்றிய குறிப்பும் இப்பாடலில் உள்ளன” என்பதாகும்.

**“வின்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்**
**வெண்தேர் ஓடும் கடம்காய் மருங்கில்**
**துனைஎரி பரந்த துன்அரும் வியன்காட்டுச்**

**சிறுகண் யானை நெடுங்கை நீட்டி**
**வான்வாய் திறந்தும் வண்புனல் பெறாஅது**
**கான்புலந்து கழியும் கண் அகன் பரப்பின்**
**விடுவாய்ச் செங்கணைக் கொடுவில் ஆடவர்**
**நல்நிலை பொறித்த கல்நிலை அதர**
**அரம்புகொள் பூசல் களையுநர்க் காணாச்**
**சுரம்செல விரும்பினர் ஆயின், இன்நகை**
**முருந்து எனத் திரண்ட முள்எயிற்றுத் துவர்வாய்,**
**குவளை நாள்மலர் புரையும் உண்கன் இம்**
**மதிஏர் வாள்நுதல் புலம்பப்**
**பதிபெயர்ந்து உறைதல் ஒல்லுமோ நுமக்கே?"(அக.மணி.179)**

என்னும் பாடலுக்கு "தோழி, தலைவியை வருணித்து. அவளது கூரிய பல்லும், செவ்வாயும், கருங்கண்ணும், பிறை நுதலும், ஆகிய இவை வழியில் தலைவனுக்கு முன் தோன்றி, அவனைச் செல்லவிடாமல் தடுக்கும் என்னும் குறிப்பினை உடையது. அதனால் "நீர் பிரிந்துறைதல் உமது அன்புக்குப் பொருந்துமோ? என வினவினாள் என்பது சிறப்புகுறிப்பாகும்.

"சிலம்பினுள்ளேயுள்ள பரல்கள் ஓசையிட்டு, வெளியே செல்வதை வெளிப்படுத்தி விடுமாதலால், அதைக் கழற்றி வைத்து விட்டுக் கமுக்கமாய்ப் போகின்றாள். மேலும் **'சிலம்புகழி நோன்பு'** என்னும் சடங்கு திருமணத்திற்கு முன்பு நிகழும். திருமணமானபின் சிலம்பு காலில் இராது அஃ.தில்லையேல் திருமணமாயிற்று என்று பொருள் இப்போது தலைவி சிலம்பைக் கழற்றிவிட்டுப் போனதால், திருமணமாகவில்லையே என்ற ஐயமும் யாருக்கும் தோன்றாது." **(அக.நித்.321)** என உரை எழுதுகிறார்.

சங்க இலக்கியத்தில் ஏதேனும் குறித்த ஒரு பொருள் பற்றி ஆய்வு செய்வோர்க்கு இத்தகைய சிறப்புக் குறிப்பு மிகுந்த பயன்தரக் கூடியதாய் உள்ளது. கவிஞர் மீனவன் அவர்கள் சங்க இலக்கியத்தில் நுண்மான் நுழைபுலம் கொண்டவர் என்பதை இதன் வழி அறியஇயலும்.

காப்பியம், சிற்றிலக்கியம் கவிதைகள் எனப் பன்முக இலக்கியப் படைப்பாளராய்த் திகழும் கவிஞர் மீனவன் சிறந்த உரையாசிரியராகவும் விளங்குகிறார் என்பதற்கு அகநானூற்று உரை சான்றாகிறது.

செய்யுளில் உள்ள அருஞ்சொற்களுக்குப் பொருளுரைப்பது. கொண்டு கூட்டி முடிப்பது, வரலாற்றுக்குறிப்புகள் தருவது போன்றவை ஆரம்ப கால உரை வளர்ச்சிக் கூறாகும். இவை அனைத்தையும் உள்ளடக்கி எளிய உரையாக மீனவன் அவர்களின் உரை அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**மீனவன் அவர்கள் படைத்த வேதாந்த உரைகள்:-**

பாரத நாட்டின் தலையாய பெருமை நாட்டில் காணப்படும் கோவில்கள், ஆகமங்கள், விதிகள் மற்றும் வேதாந்தங்கள் ஆகும். முத்தி எனப்படும் வீடுபேற்றிற்கான வழிகாட்டுதலை நல்குவது வேதாந்த சாத்திர நூல்கள். மதிநலம் வாய்க்கப்பெற்ற சான்றோர்களால் அருளப்பட்டது வேதாந்தம். “ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வேதாந்த நூல்கள் சமஸ்கிருத மொழியில் கற்றுக்கொடுக்கப்பட்டன. வேதாந்த விருப்பமுடையவர்களில் தமிழ் மட்டுமே அறிந்தோர், சமசுகிருதம் பயிலுவதில் உச்சரிப்பு இடர்ப்பாடுகள் உண்டு. சாமான்ய மக்களும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற உயரிய நோக்கோடு, இக்கருத்துக்களை எளிமையாக்கிக் கொடுத்த பல பெரியோர்களும் உண்டு. சுமார் 700 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த தவத்திரு தத்துவராய சுவாமிகள் இத்தகையவர். தமிழ் மற்றும் சமசுகிருத மொழிகளின் வல்லவரான சுவாமிகள், அவரது குருவை மகிழச்செய்ய, சங்கரரின்

அத்வைத வேதாந்தக் கருத்துக்களையெல்லாம் திரட்டி, அவற்றைத் தமிழ்ச்செய்யுட்களாக உருவாக்கினார். இவ்வாறு பல ஞான நூல்கள் சுவாமிகளால் இயற்றப்பட்டன. இந்நூல்களைக் கற்றவர்கள் பின்னர் தமிழ் வழி வேதாந்த மரபு ஒன்றை உருவாக்கினர்”[15].

சுமார் 180 ஆண்டுகளுக்கு முன் நகரத்தாரான முத்துராமலிங்கர் தமிழ் வழியில் வேதாந்தம் முழுமையும் பயின்று அதனை மற்றோருக்குக் கற்றுக்கொடுக்க விரும்பி கோவிலூர் திருமடத்தினை உருவாக்கினார். வேதாந்தக் கருத்துக்களனைத்தையும் உள்ளடக்கிய தமிழ் நூல்களைத் தேர்வு செய்து கோவிலூரில் கற்பித்து வந்தார். கற்க வேண்டியவை அனைத்தையும் தாய் மொழியிலேயே கற்க வேண்டும்; கற்க விரும்புபவனுக்கு. ஏழ்மை, சாதி வேறுபாடுகள் தடையாகாது என்பதைக் கொள்கையாகக் கொண்டு இதற்காகவே தம் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தவர் முத்துராமலிங்க ஞானதேசிக சுவாமிகள் ஆவார்.

முத்துராமலிங்க ஞானதேசிக சுவாமிகளின் முயற்சியால் 180 ஆண்டுகளாக கோவிலூர் திருமடத்தில் 16 வேதாந்த நூல்கள் கற்றுத்தரப்படுகின்றன. “இங்கு கற்பிக்கப்படும் தமிழ்வழி வேதாந்தப்பாடத்திட்டம் கல்லூரிப் படிப்பிற்கு இணையானது. ‘கோவிலூர் மரபு’ எனப்பெயர் பெற்றது. வேதாந்தம் மிகுதியாகக் கற்பிக்கப்படும் வடமாநிலங்களில் இப்பாடத்திட்டம் மற்றும் மரபு அங்குள்ள முறைக்கு ஒப்பாகக் கருதப்பட்டு, ‘கோவிலூர் மண்டலி’ எனப்பெருமைப் படுத்தப்பட்டுள்ளது.

இவ்வாறான சிறப்புப் பெற்ற 16 வேதாந்த நூல்களையும், அனைத்து மக்களும் உணரும் வகையில் எளிய உரை கண்டு பதிப்பிக்க கோவிலூர் ஆதீன

மடாலயம் எண்ணியபோது அதற்கான பணியில் தன்னை ஈடுபடுத்தி வெற்றி கண்டவர் மீனவன். இவர் நான்கு வேதாந்த நூல்களுக்கு உரை கண்டுள்ளார். அவை வருமாறு:

1) **கீதாசாரத்தாலாட்டு**

2) **மகாராஜா துறவு**

3) **வேதாந்த சூடாமணி**

4) **ஈசுவர கீதை** என்பனவாம்.

**கீதாசாரத்தாலாட்டு**

“தொண்டை நாட்டில் மாதைப்பதியின் மன்னனாக விளங்கிய திருவேங்கடநாதர் என்னும் மறையோர் இந்நூலாசிரியர் ஆவார். இவருக்கு அறிவிலும், அழகிலும் சிறந்த இரு புதல்விகள் இருந்தனர். இவர்களுள் ஒருத்திக்கு மகப்பேறு வாய்க்கப்பெறாமையால் மனம் வருந்தி ஏங்கித் தவித்தனள். அன்பு மகளின் ஏக்கம் காணச்சகியாத திருவேங்கடநாதர், அழகிய கண்ணன் பொம்மை ஒன்றைக் கொடுத்து, “இதனைத் தொட்டிலில் இட்டு, அருமை மைந்தனாகவே கருதித்தாலாட்டிச் சீராட்டிப்பாராட்டி மகிழ்ச்சி பெறுக” என ஆசி கூறினார். தாலாட்டும் பொருட்டு பகவத்கீதையின் ஞான யோகத்தின் சாரமான தத்துவ உண்மைகளைத் திரட்டித் தாலாட்டுப் பிரபந்தமாகக் கூறினதால் இது கீதாசாரத்தாலாட்டு எனப்பெயர் பெற்றது. அம்மாது நல்லாள் தந்தையின் அருள் வாக்கின்படி பாலகிருஷ்ணனைத் தொட்டிலில் இட்டுச் சீராட்டித் தாலாட்டி வர சில ஆண்டுகளில் சற்புத்திரப்பேறு வாய்த்து அளவிலா ஆனந்தம் அடைந்தனள் என்பது வரலாறு”[16] ஆகும்.

கீதாசாரத் தாலாட்டு சிறப்புப்பாயிரம், காப்பு நீங்கலாக 104 பாடல்களைக் கொண்டுள்ளது. நூலின் சிறப்புப்பாயிரம், காப்பு, பயன் ஆகிய மூன்று பாடல்கள் மட்டுமே அளவடியைக்கொண்டு விளங்குகின்றன. ஏனைய பாடல்கள் அனைத்தும் குறளடியாய் உள்ளன. இந்நூல் அருச்சுனன் வினா எழுப்ப, கண்ணன் விடை அளிப்பதாய் அமைந்துள்ளது. சான்றாக சில பாடல்களும், அதன் உரையும் வருமாறு...

**"கலங்காரோ இறப்புவரில் கற்று உணர்ந்த பேரேனும்**

**மலங்காமல் நான் இருக்கும் வகை உரையும் என வினவ"**

**"நீயும்நா னும் புவிமேல் நிருபர்களும் மெய் உணர்வால்**

**ஆயும்கால் பிறந்து இறப்பது ஆர்க்கும் இலை என்றவரோ"**

**(கீதா.சாரத்.தா.5-6)**

**அருச்சுனன் வினா** - குரு வழியாகச் சாத்திரங்களை முறையாகக் கேட்டு உணர்ந்தவர் ஞானிகளாய் இருந்தாலும் சுற்றத்தினர்க்கோ, தனக்கோ மரணம் வரும்போது கலங்கமாட்டார்களா? அப்படி நானும் மனம் சிதறாமல் இருக்கும் முறைகளை அடியவனுக்கு உரைத்தருள்க என,

**கண்ணனின் விடை:**

உண்மையினை ஆராய்ந்து பார்க்கும் பொழுது அருச்சுனனாகிய நீயும் இறைவனாகிய நானும் இவ்வுலகில் உள்ள முடி மன்னர்களும் பிறரும் பிறத்தல், இறத்தல் இரண்டுமே இல்லாதவர்கள்" எனப் பதில் உரைக்கிறார்.

"கொடிய வினைகளால் உண்டாகும் பலன்கள் உடலுக்கே உரியது என்று கூறினால் என்னால் காணப்படும் உடல் இவ்வுலகில் இறந்து பிணமாக விழுந்து போகத் தனித்து நின்ற ஆன்மா நரகத்தில் துன்பத்தையும், சொர்க்கத்தில் இன்பத்தையும் அனுபவிப்பது என்பது எப்படி? என அருச்சுனன் வினவ,

நரக சொர்க்கம் அனுபவிப்பதென்பது ஆராய்ந்து காணுங்கால் அது அனுபவமே இல்லை; பருவுடலுக்கும் அகக் கருவிக்குமான தொழில்களைத் தன்னுடைய தொழில்களாகக் கருதுவது போல அது ஒரு பயனற்ற மாயத் தோற்றம் எனக் கண்ணன் விடை பகர்வதைத் தன் எளிய உரையால் அனைவருக்கும் தெளிவுபடுத்துகிறாா் மீனவன். மேலும், இதே பாடலில் அடைப்புக்குறிக்குள், (நரகத்தில் கஷ்டப்படுவது, சொர்க்கத்தில் இன்பம் அனுபவிப்பது என்பதெல்லாம் கூட மாயையே என்பது கருத்து) எனத் தன் கருத்தையும் பதிவிடுகிறார்.

**“அடுத்தகுணம் போமோபின் ஆன்மாவை விட்டு எனவே**

**எடுத்த செம்பூ நிறம்படிகத்து ஏறுதல்போல் என்றவரோ”(கீதா.சாரத்.தா.62)**

என்னும் பாடலுக்கு ஆன்மாவினை அவ்விதம் கட்டுப்படுத்திய இன்ப துன்பங்களாகிய குணங்கள் ஆன்மாவை விட்டு நீங்குமா?

கண்ணனின் விடை-சிவப்பான பூவின் நிறம், அதன்முன் இருக்கும் வெண்மையான படிகத்தின் மீது படிந்து படிகமும் சிவப்பாகத் தோன்றும். படிகத்தின் முன்னுள்ள செம்பூ நீங்கியதும் படிகத்தின் மேலுள்ள சிவந்த நிறம் நீங்குவது போல் ஆன்மாவுடன் தொடர்புற்ற இன்ப துன்பங்கள் விவேகம் அடைந்த காலத்துத் தானாகவே நீங்கும் என நீண்டதொரு விளக்கம் தருகிறாா். கீதாசாரத் தாலாட்டின் சீரிய உரை வாயிலாக கவிஞா் மீனவன் அவா்களின் கீதை அறிவு நன்கு புலனாகிறது.

**மகாராஜா துறவு:-**

வீரசைவ நெறியினை விரும்பிப் போற்றிய கன்னடதேச அரசா் குமார தேவா், மகாராஜா துறவு என்னும் நூலை எழுதிய ஆசிரியா் ஆவாா். இவா் ஞானம் அடைவதற்காக திருப்பேரூரிலிருந்த சாந்தலிங்க சுவாமிகள் காலடி பணிந்தாா்.

“குமார தேவரின் பக்குவம் உணர்ந்த சாந்தலிங்க சுவாமிகள், அவரைப் புல் அறுக்கும் தொண்டினைச் செய்யப் பணித்தார் அரசரான குமாரதேவர் அத்தகைய வேலை செய்ததில்லையாயினும், குருவின் ஆணையைப் பாக்கியமெனக் கருதிச் செய்யத் தொடங்கினார். குருவிடம் பயபக்தியுடனும் மௌனத்துடனும் இருந்தார். குருவானவர் கருணை கூர்ந்து, குமாரதேவரைத் தம் அடியார் கூட்டத்துடன் சேர்த்துக் கொண்டார். சில நாட்களில், பாலனின் பசி கண்ட தாய் போல, குமாரதேவருக்குத் தீட்சையும் ஞான உபதேசமும் செய்வித்தார். குமாரதேவரது நூல்களுள் முதன்மையானது மகாராஜா துறவு ஆகும்”[17]. இந்நூல் துறவறத்தை வற்புறுத்திக் கூறி, சீவாத்ம பரமாத்ம ஐக்கியத்தைத் தெளிவிப்பது வேதாந்த சாத்திரங்களின் கருத்துக்களை எல்லாம் திரட்டிக் கூறி அத்வைத உண்மையை நன்கு விளக்குவது.

**மகாராஜா துறவு கடவுள் வாழ்த்து:**

அவையடக்கம், பாயிரம் நீங்கலாக, 117 பாடல்களைக் கொண்டு அமைந்துள்ளது. குருவின் உபதேச மொழிகளில் காணப்படும் பாடல்களுக்கு மீனவன் அவர்கள் படைத்திருக்கும் உரை எளிமையொடு கூடிய செறிவுடைய உரையாய் அமைந்துள்ளது.

**“இருவகைச் சார்வாம் புறப்பற்றை நீக்கி**
**இச்சையின் மீட்டுஅதின் நினைவும்**
**ஒருவியே உடல்கா வலையும்கை விடுத்தே**
**உள்கர ணங்கள்வா தனையும்**
**குருஅருள் நெறியே ஒழுக்கிழல் வீடும்**
**கூடும்தா னாகவே பவத்தின்**
**கருஅழித் திடும்இந் நெறியைநீ விரைவில்**

**கைக்கொண்டு செல்என உரைத்தான்"    (மகா.துறவு .29)**

என்னும் பாடலுக்கு முனிவரும், அரசனே! உலகம் அதிலுள்ள இன்பம் ஆகிய இரண்டையும் என்னுடையன என என்னும் புறப்பற்றுக்களை நீக்கி, அவற்றின் பழக்கத்தால் உண்டான ஆசையில் இருந்து மனத்தைத் திருப்ப வேண்டும். அதன் நினைவும் இல்லாமல் நீங்கி உடல் பாதுகாப்பையும் கைவிட வேண்டும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற உள்கருவிகள் நான்கையும், அதில் உட்பகை உண்டாவதற்குக் காரணம் ஆகிய காம, குரோத, லோப, மோக, மத, மாற்சரியம் என்பவற்றின் தொடர்புகளையும், ஞானாசிரியர் உபதேசித்த வழிப்படி அடக்கினால் வீடுபேறு கிடைக்கும். அதனால் பிறப்புக்குக் காரணம் ஆகிய அஞ்ஞானம் தானாகவே அழிந்து போகும் நீ விரைவாக இந்த வழியைக் கைக்கொண்டு செல்லக் கடவாய் என்று கூறி அருளினார் என உரைவரைவர்.

உடம்பின் இழிவு குறித்து வரும்,

**"தோல்இ ரத்தம் எலும்புஇறைச்சி**

**சுக்லம் மேதை மச்சை ஒன்றாய்த்**

**தூவி கரித்த உடம்பாகும்**

**தொட்ட எவையும் தன்வடிவாய்க்**

**கோலி அடக்கிக் கொளும் இதனைக்**

**கூறு கூறா நோக்காது**

**போலி உணர்வோன் மகிழ்வுஎய்தும்**

**புனிதம் என்றும் பரமபதம்"    (மகா.துறவு.79)**

என்னும் பாடலுக்கு நம் உடம்பானது தோல், இரத்தம், எலும்பு, இறைச்சி, இந்திரியம், நரம்பு, மூளை ஆகிய எழுவகைத் தாதுக்களும் ஒன்றாய்க் கூடிப் பருத்துத் தோன்றுகின்ற உடம்பாகும். தான் தொட்டு எடுத்து உட்கொண்ட

எவ்வகைப் பொருள்களையும் தன் வடிவாகச் சேர்த்துத் தக்க உருவமாய் அடக்கிகொள்ளும் இவ்வுடம்பைத் தனித் தனியாய்ப் பிரித்து நோக்காது போலித்தனமான அறிவு உள்ளவன் உடம்பின் வாழ்க்கையை நிலையானது என எண்ணி மகிழ்வான் என்றும் பரமபதமே மேலானது என உரை கூறுவர்.

உடம்பால் வரும் துன்பம் உரைத்தல் என்னும் பாடலுக்கு ''உடம்பால் வரும் துன்பத்தை முறையாக நான் சொல்ல, நீ கேள் உலகம் முழுவதும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும் முறையே நடைபெற்று வருவனவாம், பிறப்பில் நமக்கு வந்து சேரும் ஐவகைப் பெருந்துன்பங்கள் உள்ளன. அவை போய் மரணம் வந்து சேர்ந்தால் அது படைப்புக்காலத்தில் உண்டான துன்பங்களை விட எட்டுப்பங்கு அதிகமாகும். எஞ்சி இருந்த வாழ்நாளில் இளமை, மூப்பு என்று இருவகைத் துன்பங்கள் உண்டு'' **(மகா.துறவு.32)**

என வாழ்வின் துன்பத்தை உணர்ந்து உரை பகர்ந்த ஆசிரியர், இப்பாடலுக்கான உரை முடிந்தபின் அடைப்புக்குறிக்குள் மனிதப் பிறப்பில் அடையும் ஐந்து வகைத் துன்பங்களை (பிறக்கும் காலத்தில் துன்பங்கள் ஐந்துவகை: கருப்பாசயப்பை உறுத்தல், அதில் ஜலம் பூரித்தல், உதராக்கினியால் வேவுதல், பிரசூதவாயு முறித்துத் தள்ளுதல், யோனித்துவாரத்தில் நெருக்குறல்) என்றுரைப்பர்.

இந்த சிறப்புக் குறிப்பு வாசகரின் எஞ்சிய ஐயத்தையும், உரையாசிரியரின் அறிவுப் புலமையையும் ஒருங்கு புலப்படுத்துகின்றது.

**வேதாந்த சூடாமணி:-**

விவேக சிந்தாமணி என்னும் வடமொழி நூலில் சொல்லப்பட்ட வேதாந்த பரிச்சேதம் என்னும் அத்தியாயத்தின் பொருள்களை ஸ்ரீ நிஜ குண யோகீஸ்வரர் என்னும் பெரியவர் கன்னட மொழியில் இயற்றி அருளினார். வேதாந்த பரிபாஷைக்கு

விளக்கமாகவும், பிரம்மம் ஒன்றே, இரண்டல்ல என்ற அத்வைதக் கருத்தை உணர்த்துவதாகவும் இந்நூல் அமைந்துள்ளது. இதனைத் துறை மங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள், தமிழ்ப் பாடல்களாக இயற்றி “வேதாந்த சூடாமணி” எனப் பெயரிட்டார். இது பாயிரம் உட்பட 184 பாடல்களைக் கொண்டதாகும். இந்நூலை “வேதாந்த நிகண்டு” எனவும் கூறுவர். கடினமான பாடல்களைக் கொண்ட இந்நூலுக்கு, மீனவன் அவர்கள் மிகச்சிறப்பான உரையை நல்கியுள்ளார். வேதாந்த சூடாமணியின்,

**“சாற்றின்வயி ரம்பன்முக் கியன்பிரபஞ் சனன் அந்**
**ததியாமி யொடுமகாப் பிராணன் எனும் பெயர்கொள்**
**காற்று இவைகள் சீவசம் பந்தமா யேஉள்**
**கரணங்கள் இயக்கியிடும் மண்மதல்ஐந் திற்கும்**
**பால்திகழும் வியாபாரம் பொறைபிண்டீ கரணம்**
**பாகமொடு விரகம்இடம் கொடைஆகும் தருமம்**
**ஆற்றல்உறு திண்மைநெகிழ்வு அழற்சி பரி வெளியாம்**
**அயனொடு அரி அரன்ஈசன் சதாசிவன்தே வதைகள்”(வேதா.சூடா.74)**

என்னும் பாடலுக்கு,

வாயுக்களின் வகைகளைக் கூறுமிடத்து, வயிரம்பன், முக்கியன், பிரபஞ்சனன், அந்தரியாமி, மகப்பிரணன் என்னும் பெயர் கொண்டுள்ள வாயுக்கள் உண்டு. இவ்வைந்தும் சீவனுடன் தொடர்பாய் உள்ள மனம் முதலான அந்தக் கரணங்கள் ஐந்தையும் இயங்கும்படி செய்வன. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பூதங்கள் ஐந்திற்கும் தொழில்கள் முறையே பூமிக்குத் தாங்குதலும், நீரிற்குத் திரட்டுதலும், நெருப்புக்குப் பக்குவம் செய்தலும், காற்றிற்கு உலர்த்தலும், வானிற்கு இடம் கொடுத்தலுமாம். அவ்வைத்து பூதங்களின் தருமங்கள் முறையே, கடினத் தன்மையுடன் இருப்பது பூமியின் தர்மம், நெகிழ்தல் நீரின் தர்மம், வெம்மை நெருப்பின் தர்மம், பரப்புதல் வாயுவின் தர்மம், வெளியாய் இருப்பது வானின் தர்மம்

ஆம். நான்முகன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் முறையே இப்பூதங்களுக்கு அதிதேவதைகள் ஆவர் என உரை வரைவர்.

மேலும் “மாயா காரியத் தோற்றமானது கிரம சிருட்டி என்றும், உகபத் சிருட்டி என்றும் இருவகைப்படும். அவற்றுள் பிரகிருதியில் இருந்து, மகத்துவமும் அதில் இருந்து தோன்றிய மூல அகங்காரமும் அந்த அகங்காரத்தில் இருந்து ஐந்து தன் மாத்திரைகளும் உண்டாகும். மகத்துவம், மூலஅகங்காரம், பஞ்ச தன் மாத்திரைகள் என விளங்கிய இவ்வேழு பொருள்களில் பஞ்ச தன் மாத்திரையில் இருந்து மூலபூதங்கள் உண்டாகும். அப்பஞ்ச பூதங்களில் இருந்தும் பேரண்டம் முதலாக உள்ள உலகம் தோன்றுதலே கிரம சிருட்டியாம். பெரிய கடலிலே காற்றின் வசத்தால் அலை, திவலை, நுரை பொருளில் மாயையின் மயமாக உள்ள நாம ரூப வடிவ உலகம் முழுவதும் ஓரே சமயத்தில் தோன்றுதலே உகபத் சிருட்டியாம்.

என உரை கூறியுள்ளமை அவர்தம் ஆன்மீகப் புலமைக்குச் சான்றாம். கடினமான வேதாந்தச் சிந்தனைகளைச் செறிவான தமிழில் மனந்துலங்கும்படி உரை வழங்குதல் இவர்தம் உரைநெறியாக உள்ளது.

**ஈசுவர கீதை:-**

வடமொழியில் காணப்படும் கூர்மபுராணத்தில் உள்ள ஈசுவரகீதையைத் தமிழில் மொழிபெயர்த்தவர் ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் ஆவார். இதனை சிவப்பிரகாசம் என்றும் அழைப்பர் இந்நூல் 11 அத்தியாயங்களைக் கொண்டு அமைந்துள்ளது.

**“சிவன்திரு உருவு கொண்டுமுன்பு அருளிச்**
**செய்தது ஓர் புராணம் ஆதலினால்**
**சிவன்தனை அளித்த பரன்திரு நாமம்**
**சிவப்பிர காசமாம் அதனால்**

**சிவந்தசெந் தமிழாய் யார்க்கும் இந் நிலத்தே**
**சிவம்தனைத் திகழ்ந்திடும் தெளிவால்**
**சிவன்தனக்கு உரியது ஆதலால் நாமம்**
**சிவப்பிர காசம் என்று உரைப்பாம்" (ஈசு.கீதை.பா.2)**

என்னும் பாயிரப் பாடலுக்கு,

சிவன் திருவுருக் கொண்டு எழுத்தருளி வந்து முன்பு கூர்ம நாராயணருக்கு அருளிச் செய்த ஒப்பற்ற புராணம் ஆதலினாலும், சிவனையே கொடுத்த ஆசிரியரின் அழகிய பெயர் சிவப்பிரகாசம் என்பதனாலும் அனைவர்க்கும் சிறப்பான செந்தமிழால் இந்நிலத்தில் சிவனை விளக்கும் தன்மையினாலும் சிவனுக்கே உரித்தாயது ஆனதாலும் இந்நூலின் பெயர் சிவப்பிரகாசம் என்று உரைப்பதாகக் கூறும் வழி இந்நூலின் வரலாற்றை அறிய முடிகிறது என உரை வரைவர்.

ஈசுவர கீதையில் சாங்கிய யோகம் பற்றியுரைக்கும் பாடலுக்கு,

"இந்த இறையறிவு பிறர்க்குச் சொல்லத் தக்கது அன்று. எல்லோரும் இதனை அறிய மாட்டார். ஆதலால் மறைவாக வைக்கத் தக்கது; ஒன்றாய்ப் பொருந்தி உள்ளது; எப்பொழுதும் திடமாக உள்ள முதலான எட்டு யோகங்களையும் செய்துள்ள தேவர்களாலும் அறிதற்கு அருமையான பொருளை நீங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள் என்று திருவாய் மலர்ந்தருளினான்" என மிக எளிமையான உரையை அருளியுள்ளார்.

விசுவரூப அத்தியாயத்தில் காணப்படும்,

**"ஏவன் மாயை இந்தஉலகு எல்லாம் ஆகி இருப்பதுவாம்**
**ஏவ னாலே நடக்கின்றது ஏவன் பதங்கள் சிந்தித்தே**
**பாவம் ஆன அஞ்ஞானம் தன்னால் உண்டாம் பயம்போகம்**

**ஆஆ அந்தப் பரப்பொருள்நின்று ஆடக் கண்டார் அன்போடும்"**

**(ஈசு.கீதை.5:6)**

என்னும் பாடலுக்கு,

எந்தப் பரமேசுவரனது மாயையினின்றும் இந்த உலகங்கள் அனைத்தும் உண்டாகி இருக்கின்றனவோ, எவனால் இந்த உலகங்கள் நடத்தப் படுகின்றனவோ, எந்த பரமேசுவரனது திருவடிகளைத் தியானிக்கப் பாவமாகிய அஞ்ஞானத்தால் உண்டாகும், அச்சமானது போகுமோ, ஆச்சரியம் ஆச்சரியம் அந்தப்பரம்பொருள் இருந்து ஆனந்த நடனம் செய்யப் பக்தியுடன் கண்டனர். சௌனகாதி முனிவர்கள் என மிகச் சிறந்த சொற்களால் உரை நல்குகிறார். வேதாந்த நூல்களுக்கும் தூயதமிழில் உரை கூறுவது இவர்தம் தனிச்சிறப்பாகும்.

## தொகுப்புரை

 தமிழின் மொழி வரலாறு, பண்பாடு மற்றும் சமூக வரலாறு முதலியவற்றை அறிய உரைகளும் துணை செய்கின்றன. சரியான உரைகள் சமூக இயல்பைக் காட்ட முற்படுவதால் உரை முக்கியத்துவம் பெறுகிறது.

 எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான அகநானூறு மூன்று பிரிவுகளையும், 401- பாடல்களையும் கொண்டது. இச்சங்க நூலுக்கு 1918-இல் முதல் உரை வெளியானது.

 1918-ஆம் ஆண்டைத் தொடர்ந்து எண்ணற்ற உரைகள் 2003- வரை வெளிவந்துள.

 மீனவன் அவர்களின் உரை 2003-ஆம் ஆண்டு கோவிலூர் மடாலயப் பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டது.

 பாடலுக்கு முன் பகுதி, (கூற்று), கொண்டு கூட்டு, தெளிவுரை, அருஞ்சொற்பொருள், சிறப்புக் குறிப்பு என்னும் முறையில் மீனவனின் உரைநெறி அமைந்துள்ளது.

 மீனவன் அவர்களின் உரை தமிழைப் பாடமாக எடுத்துப் படிக்காதவர் கூடப் புரிந்து கொள்ளும் விதமாய் அமைந்துள்ளமை சுட்டத்தக்கது.

 மீனவன் அவர்கள் எழுதிய வேதாந்த உரைகள் அவரின் ஆன்மீக அறிவைப் புலப்படுத்துகின்றன.

**சான்றெண் விளக்கம்**

1. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.78
2. மேலது, ப.71
3. பேராசிரியர் (உரை) தொல்காப்பியம் பொருளாதிகாரம், நூ.653
4. மேலது நூ.656
5. பேரா.இரா.மோகன், நெல்லை ந.சொக்கலிங்கம், உரைமரபுகள். ப.13
6. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.70
7. மேலது, ப.81
8. சு.சக்திவேல். நூற்றாண்டுத் தமிழ் உரைநடை ப.73
9. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.76
10. மேலது, ப.77
11. இரா.ஜானகி, சங்க இலக்கியப் பதிப்புரைகள் ப.38
12. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள். ப.67
13. இரா.மோகன், உரையின் தோற்றமும் வளர்ச்சியும், ப.13
14. வ.சுப.மாணிக்கம், உரை நெறிகள் ப.29
15. கோவிலூர் ஆதினம். கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள், ப.2
16. மேலது ப.2
17. மேலது ப.30

ஓர் இலக்கியப் படைப்பாளனின் வெற்றி அவர் பயன்படுத்தும் மொழி நடையில் உள்ளது எனவே படைப்பாளி தம் கருத்துக்குத் தரும் கலை வடிவம் இன்றியமையாததாகும். "இலக்கியங்கள் காலங்களைக் கடந்தும், கருத்துகளைக் கடந்தும் இன்று ஏற்றமும் எழிலும் பெற்றுத் திகழ்வதற்குக் காரணம் அவ்விலக்கியங்கள் பெற்றிருக்கின்ற பல்வேறு தனிச் சிறப்பியல்புகளே ஆகும். உணர்த்தும் திறத்தால் அவை ஒளிபெற்றும், உயிர் பெற்றும் திகழ்கின்றன."[1] எண்ணத்தையும், உணர்ச்சியையும், உரிய முறையில் பிறர் உளங்கொள எடுத்துரைக்கும் போது தான் படைப்பாசிரியரின் மொழியைக் கையாளும் திறன் நன்கு வெளிப்படுகிறது. அவ்வகையில் மீனவனின் படைப்புகளில் காணலாகும் நடைத்திறனை எடுத்தியம்புவது நோக்கம் ஆகும்.

**நடை விளக்கம்:**

"நடை என்பதற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி **'பாஷையின் போக்கு' (Style in language)"**[2] என்று பொருள் தருகிறது. இணையத்தில் பிரசித்த பெற்ற விக்கிப்பீடியா **(WIKIPEDIA**) என்ற இணையதளம் நடை என்பதற்கு ஒழுங்கான அமைப்பில் எழுதுவதற்கான நெறிமுறை என்று பொருள் கூறுகிறது.

**பழந்தமிழ் நூல்களில் நடை என்னும் சொல்லாட்சி:-**

தமிழின் முதல் நூலான தொல்காப்பியத்தில்

**"உரைவகை <u>நடையே</u> நான்கென மொழிப"**[3]

**ஆசிரிய நடைத்தே வஞ்சி ஏனை**

**வெண்பா நடைத்தே கலியென மொழிப"**[4] என்ற நூற்பாவில் **'நடை'** என்ற சொல்லாட்சி பயன்படுத்தப்பட்டுள்ளது. தண்டியலங்காரத்தில்

**"நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகி"**[5]

**"காட்டிய நடைநெறி கடைப் பிடித்தவற்றோடு**

**கூட்டி உணர்தல் ஆன்றோர் கடனே"**[6]

என்பன போன்ற நூற்பாக்களில் **"நடை"** என்ற சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது.

எழுத்து சொல் ஆகியவற்றிற்கு இலக்கணம் தரும் நன்னூலில்,

**"விருத்தியாகும் விகற்ப நடைபெறுமே"**[7] என்பதில் **"நடை"** என்ற சொல் பயிலப்பெற்றுள்ளது. யாப்பருங்கால விருத்தியுரை,

**"நாற்பா நடை தெரிந்த நன்னூற் பெரும்புலவர்'**[8] என்றும் யாப்பருங்கலம்,

**"எழுத்தசை சீர்தனை அடிதொடை தூக்கோ**

**டிழுக்கா நடைய தியாப்பெனப் படுமே"**[9] என்றும்

**"ஆலா வழகினைக் காந்தியென் கின்றது தமிழின்**

**நாலா விதமாய் நடைபெற்றியலு..."**[10] என்று வீரசோழியமும் நடை என்பது குறித்து விளக்குகின்றன.

உலகப் பொதுமறை என அனைவராலும் போற்றப்படும், திருக்குறள்,

**"இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்**

**நடை தெரிந்த நன்மையவர்"**[11] என நடையைக் குறிப்பிடுகிறது.

இவற்றை உற்று நோக்கும் போது, இலக்கண, இலக்கிய நூல்களில் **'நடை'** என்னும் சொல்லாட்சி மொழியைச் சுட்டுவதாக அமைவதைக் காண இயலும்.

**நடையின் இலக்கணம்:-**

தமிழ் மொழியின் இலக்கண நூலாரும், இலக்கியத் திறனாய்வாளர்களும் நடையின் இலக்கணம் குறித்துப் பல்வேறு கருத்துகளைத் தெரிவித்துள்ளனர்.

திறனாய்வாளர்கள் நடைக்குக் கொடுக்கும் விளக்கம் பரந்துபட்டது. அவற்றுள் சில பின்வருமாறு

"உரிய சொற்கள் உரிய இடங்களில் பொருந்தி நடப்பதே நடை. மொழியில் அழுத்தத்தையும் தெளிவையும் உருவாக்க முயலும் எல்லா வழிவகைகளையும் மொழி நடையியலின் கீழ் அடக்கலாம். இவற்றில் எல்லா மொழிகளிலும் பழமையான மொழியில் கூட ஊடுருவிச் செல்லும் உருவகங்களும் எல்லா அணி உருவகங்களும் சொற்றொடர் அமைப்பும் அடங்கும் அடுக்குநிலை, நிறைவு, உயர்வுநவிற்சி, உச்சநிலை என்றின்ன உருவங்கள் விழுமிய மொழி நடைக்குரியவை"[12] என்று மேலைநாட்டு இலக்கியக் கொள்கை நடைக்குரிய இலக்கணத்தை நவில்கிறது.

"நடையாவது அடிப்படையில் படைப்பாளரின் தனிப்பண்பைக் குறிப்பது எனலாம்"[13] என்பர் டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி

"ஒரு காவியத்தையோ, கதையையோ படிக்கும்போது யாரோ ஒருவர் நமக்கு எடுத்துச் சொல்வது போல உணர்கிறோம். காவியத்திலும் கதையிலும் வரும் மாந்தர் (பாத்திரங்கள்) சொல்வன அல்லாமல், அவர்களுக்குப் பின்னே இருந்தவாறு, அவர்களின் வாயிலாக ஒருவர் பேசுவது போல் உணர்கிறோம். அவ்வாறு பேசும் குரல் நூலாசிரியரின் குரலானால், அந்தக் குரலின் சிறப்பியல் தான் அவருடைய நடை என்று கூறப்படும்"[14] என்பர்.

"எண்ணங்களையும், மனதில் எழும் உணர்வுகளையும் உரிய சொற்களால் வடித்துக் கொடுக்கும் கலைத் திறனையே நடை எனலாம்"[15] என்பர் இ.சுந்தரமூர்த்தி அவர்கள்.

**நடையின் பண்புகள்:-**

"ஒவ்வோர் இலக்கிய ஆசிரியன் நடையும் அவரவர் தன்மைக்கேற்ப அமைகிறது. அவர் பயன்படுத்தும் சொற்கள், சொற்றொடர்களை மாற்றியமைக்குந் திறம், வாக்கிய அமைப்பு அவர் மேற்கொள்ளும் தனி ஒலிநயம் இவை போன்றவை எழுத்தாளர்களின் தனித்தன்மையை ஒட்டியவை"[16] இத்தன்மைகள் நடையின் பண்புகளாய் அமைகின்றன. நடையின் பண்புகள் என்று சொல்லப்படும் அமைப்பு அடங்கப் பெற்ற ஓர் இலக்கியம் தனித்துவம் வாய்ந்த இலக்கியமாய்க் கருதப்படும். அவ்விலக்கியத்தைப் படைத்த இலக்கிய ஆசிரியன் நல்நடை கைவரப்பெற்ற கலைமகனாய் இலக்கிய உலகில் இடம் பெறுகிறான்.

"செவிக்கினிமை தரும் ஒழுங்குபட்ட ஒலிநயம், கையாளும் சொற்களில் ஒரு வகையான செறிவாற்றல், வேறொருவரிடம் எளிதில் காண முடியாத அரிய தொடராக்கங்கள், நுவல் பொருளுக்கும் உணர்ச்சி நிலைக்கும் ஏற்ற வண்ணம் அமைந்த தொனி, முத்திரை பதித்தாற் போன்ற வாக்கிய அமைப்பு முதலியன நடையின் பண்புகளாகும்"[17] என்று நடையின் அமைப்புமுறை பற்றிக் கருத்துரைப்பர் மா.இராமலிங்கம்.

**கவிஞர் மீனவனின் உணர்திறனும், உணர்த்தும் திறனும்:-**

படைப்பாளன் தான் உணர்ந்து கொள்வதைத் தன் நூலைப் படிப்பவன் உணரும் வகையில் எடுத்துரைப்பது அவர்தம் புலமைக்குச் சான்றாகும். இத்தகைய உணர்த்தும் திறன் நடைக்கூறுகளில் ஒன்றாக அமைவதை, "நடை ஒருவருடைய உணர்திறனையும் - உணர்த்தும் திறனையும், உள்ளத்திறனையும் நன்கு புலப்படுத்துகிறது"[18] என்னும் இ.சுந்தரமூர்த்தியின் வார்த்தைகள் தெளிவுபடுத்தும். மணிமேகலை காப்பியத்தைத் தொடர்ந்து மீனவன் அவர்களால் படைக்கப் பெற்ற காப்பியம் மாதவமேகலை. மணிமேகலை, மாதவமேகலை ஆகிய இரண்டிற்கும்

இடையில் உள்ள கால வேறுபாடைக் கருத்தில் கொள்ள இயலாத வகையில் மணிமேகலையொடு நெருங்கின பிணைப்புடையதாய் மாதவமேகலை அமைந்துள்ளது, இதன் காரணம் மீனவன் அவர்கள் மணிமேகலையை உணர்ந்து கொண்ட முறைமையும் அதன் தொடர்ச்சியாக மாதவமேகலையை எழுதி உணர்த்தியமையும் ஆகும். மாதவமேகலை படைத்த சிறப்பின் காரணமாக அவர் காப்பியக் கவிஞர் எனப் பெயர் பெற்றமை இங்கு குறிக்கத்தக்கது. சிற்றிலக்கியம் படைப்பதில் வல்லமை பெற்ற கவிஞர், அதன் இலக்கணங்களை பாட்டியல் நூல்கள் வாயிலாக நன்கு உணர்ந்து கொண்டு அதன் பின்னர், தமது இலக்கியங்களைப் படைத்துள்ளார். உணர்த்தும் திறனும், உணர்திறனும் அறிவின் தலையாய இயல்புகள் என்பர். இவ்வியல்புகளைத் தன்னகத்தே கொண்டிருந்தவர் மீனவன். இலக்கியங்களில் செம்மையான வடிவம் அமைவது கருத்தையும், உணர்ச்சியையும், உணர்ந்தவாறே நன்கு உணர்த்தவல்ல ஆற்றலை ஒட்டியுள்ளதாகும்.

“உள்ள நிலையில் வெளி விளக்கமே வடிவம்”[19] என்பர். அவ்வகையில், உணர்திறத்தாலும், உணர்த்தும் திறத்தாலும் மீனவன் அவர்களின் இலக்கியங்கள் செம்மையான வடிவம் பெறுகின்றன.

**மீனவனின் மொழிநடை:-**

“அழகிய செஞ்சொற்களால் இனிமையாகவும், எளிமையாகவும் நுட்பமாகவும் கருத்தினை உணர்த்துவதே நல்ல நடையாகும்”[20] என்பர். கருத்துக் களஞ்சியங்களைச் சொற்களால் உணர்த்தும் வல்லமை நடைக்கு உண்டு. மொழியியல் என்பது மொழியை விளக்கி அது செயல்படும் வகையினை வெளியிடும் ஓர் அறிவியல் சார்புடையதாக வளர்ந்து வருகிறது. மொழியியலின் ஒரு கூறு மொழிநடையியல் என்று கூறப்படும். “எழுத்துகள் கருத்துகளோடு

இணைந்து எழுதப்படுவதே நடையாகும், இந்நடை எல்லா ஆசிரியர்களுக்கும் ஒன்று போல் அமைவதில்லை. அவரவர் திறமைக்கும், சிந்தனைத் திறத்திற்கும், கற்பனை வளத்திற்கும் ஏற்ப மாறுபடுகிறது”[21] என்பர்.

படைப்பாசிரியர் தான் சொல்ல விரும்பிய கருத்துகளை தேர்ந்த சொற்களால் அதனை மொழிநடையாய் வெளிப்படுத்துவர். நல்ல மொழி நடையினைத் தெரிவிக்கும் மாண்பைத் தொல்காப்பியர்,

**“……… பொருட்குத் திரிபில்லை யுணர்த்த வல்லின்”**[22]

எனக் குறிப்பிடுகின்றார். எண்ணிய கருத்துகளைப் பிறருக்கு உணர்த்தும் போக்கு நடை எனப் பெறப்படும்.

கருத்தை உணர்த்தும் திறமையை வள்ளுவர்.

**“இணருழ்த்தும் நாறா மலரனையர் தான்**

**கற்றது விரித்துரையா தார்’**[23] என்பர்.

சொல்லின் திறத்தை அறிந்து சொல்லை வழங்க வேண்டும் என்ற கொள்கையுடைய வள்ளுவர், மேற்சுட்டப்பட்ட குறட்பா வழி கற்ற பொருளைப் பிறர் நன்குணர விரித்துரைக்க மாட்டாதவரை ‘மணம் வீசா மலர்” எனச் சாடுகிறார்.

**“யாநலத்தும் நாநலமே நலனுடைமை**”[24] என்று நவின்றவர் வள்ளுவர், பிறர்கூறும் பொருளை நுட்பமாக உணர்பவர் **‘நுண்பொருளறிவு’** பெற்றவர் என்பது வள்ளுவரின் தெள்ளிய கருத்து. வள்ளுவரின் இத்தகைய கருத்துகளுக்கு ஓர் ஒப்பற்ற சான்றாய் மீனவன் திகழ்கிறார்.

மாதவ மேகலையில் குழவி வளரக் கொடுத்த காதையில்,

**“நீலக் கருமுகிலே!**

**நெஞ்சுடையும் நெடுமாலே!**

**கோல நதியமுனைத்**

**துறை வளர்த்த கோமகனே!**

**மாலை துளவமென**

**மார்பில் அணிந்தவனே!**

**ஓலம் என வழைத்தோம்**

**ஓடிவர மாட்டாயோ**

**நீண்ட குழலூதி**

**நெஞ்சங் கவர்ந்தவனே**

**ஆண்ட பெருமையுள்ள**

**ஆயர்குடிக் குயிர் நிலையே!. (மாதவ.மே.6:71-76)**

என்னும் பாடல் எளிய நடைக்குச் சிறந்த சான்றாகும்.

மேகத்தின் கரிய நிறமும் மார்பில் துளசி மாலையும் அணிந்து யமுனை நதித்துறையில் வீற்றிருக்கும் பெருமானே! அனைவரின் நெஞ்சங்களிலும் உறைந்திருக்கும் நீ குழலூதி அனைவரையும் கவர்ந்தவன். துன்பம் என்றவுடன் காக்க ஓடி வரமாட்டாயோ என்னும் பொருள்படும் இப்பாடல் மீனவன் அவர்களின் நடைநலனைப் புலப்படுத்தும். இதே காதையில் மணிமேகலை தாயற்ற மாதவனை, வில்லவன் கோதை இணையரிடம் ஒப்படைக்கிறாள். மகவற்ற கோதை குழவி கண்டு மேனி புளகாங்கிதம் அடைவதையும் பத்து மாதம் கருப்பையில் தாங்கிப் பெற்ற பெண்ணைப் போலவும் அரும்பாத கொடியினின்று முதலாய்த்தோன்றும் அரும்பு கண்டு மகிழும் கன்னி போலவும் கார்கால மேகம் கண்ட மயில்போலவும் மகிழ்ந்ததை,

**“..........அப்பொழுதினில் மேனி புளகம் போர்த்திட**

**ஐயிரு திங்கள் அகட்டினைத் தாங்கிப்**

**பையலைப் பெற்றதோர் பாவையை போலவும்**

**அரும்பாக் கொடியினுள் அரும்புகண் டுள்ளம்**

**களிமகிழ் கொள்ளும் கன்னியைப் போலவும்**

**துளி தரு கார்காண் தோகையைப் போலவும்**

**ஒளிமலர்க் கோதைதன் உள்ளம் மகிழ்ந்தனள்''**

**(மாதவ.மே.6:112-118)**

என்று பாடுவர். காப்பியத்தின் இறுதிக் காதையான மேகலை முத்தி மேவிய காதையில் ஒரு பாடல் மேகலையின் மீதிருந்த உயிரொளி உடலை விட்டு வான்வழிச் செல்வதை அங்கிருந்த புண்ணியர் யாவரும் கண்டனர். அவளை வாழ்த்தி வணங்கினர். தவமகளின் இழப்பைத் தாங்க முடியாத மக்கள் மனத்துயர் கொண்டு புலம்பிக் கலங்கிய ஓலம் எங்கும் ஒலித்தது. இதனை,

**"மேகலை சென்னி மீதிருந் தோரொளி**

**போகிடக் கண்ட பண்ணுயர் யாவரும்**

**வான்வழி ஏகும் அவ்வொளி வணங்கினர்**

**வாழ்க மேகலை! வாழி புத்தன்!**

**சூழ்க நல்லறம் தொலைக தீதென**

**எழுபெரும் முழக்கம் எங்கனும் ஒலித்ததே**

**தவமகள் இழந்த தாங்கொணா மனத்தர்**

**தம் துயர் மேலெழத் தாம்புலம் பினரே'' (மாதவ.மே.30:44-50)**

என்னும் அடிகளால் மீனவன் காட்சிப்படுத்துகிறார்.

காப்பியத்தின் ஒவ்வொரு காதையிலும், தேவைக்கேற்ற விதத்தில், எளிய நடையும், செந்தமிழ் நடையும் விரவி வந்துள்ளமையைக் காணமுடிகிறது. மீனவன் பிள்ளைத்தமிழ் பாடுவதில் வல்லவர். கம்பன் பிள்ளைத்தமிழ், கம்பனடிப்பொடி

பிள்ளைத்தமிழ் ஆகியன அவர் கைவண்ணத்தில் மிளிரும் நூல்கள் ஆகும், இவற்றில் அவர் தம் மொழிநடை சீர் கொண்ட செறிவான நடையாக அமைந்துள்ளது. கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழில் செங்கீரைப் பருவத்தின் பத்தாவது பாடல்.

**"வையம் அளந்தான் வந்து பிறக்க**
**வாழ்த்தி நலம்பாடி**
**வானம் புகழ வளஞ்சால் கவிதை**
**வடிவில் தந்தானை**
**மெய்யின் வடிவாய் மேவிய தேவன்**
**மெய்ப்புகழ் சொன்னானை**
**மேவிய வில்லும் கூரிய அம்பும்**
**மெய்யில் சுமந்தானைக்**
**காவியம் ஆக்கிக் களித்தான் கம்பன்**
**காலிற் பொடியனாய்**
**காலம் மறவாக் கவிதை வேந்தன்**
**கடவுள் எனக் கொண்டாய்**
**சேவையில் ஓங்கும் செல்வ கணேச**
**செங்கோ செங்கீரை"       (கம்ப.அடிப்.பிள்.2:10)**

என்பதில் உலகத்தைத் தன் சேவடியால் அளந்த திருமால் மீண்டும் இராமனாய் அவதரித்த போது அவனது வரலாற்றைப் புகழ் அடையும் கவிதையாய்த் தந்தவன் கம்பன். உண்மையின் திருஉருவாய் விளங்கும் இராமனது உண்மையான புகழ் பாடியவன் கம்பன். மேன்மையான வில்லையும் கூர்மையான அம்பையும் உடலில் சுமந்தவனைக் காவிய நாயகனாக்கி மகிழ்ந்தவன் கம்பன்.

காலம் போற்றும் கவிதை வேந்தனாய் வாழ்ந்த கம்பனைக் கடவுள் எனக் கொண்டாடி மக்கள் சேவையில் ஈடுபட்ட கணேசனாருக்குச் செங்கீரை பாடி மகிழும் கவிஞரின் புலமைக்கு மேற்செய்யப்பட்ட அவரின் எளிமையான நடை சான்றாகும். இதே நூலின் தாலப் பருவத்தில் முதலும் இறுதியும் அறியாதவனும், அளவில்லாத நாமம் கொண்டவனும் அசுரர் குலத்துக்கு எதிரியானவனும் பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவனும் உறவுகளைத் துறந்து காட்டிற்குச் சென்றவனும் படைகளையும் பட்டாடைகளையும் துறந்திடினும் யாதொரு துயரமும் இன்றி மனமகிழ்வுடன் தன் இளவல் இலட்சுமணனொடு பஞ்சினும் மென்மையான பாதத்தொடு வனத்தில் நடந்த சீர்மிகு இராமனின் காவியத்தைச் சீரிய சொற்களால் உலகத்தோரின் செவிக்களித்த கம்பனைத் தன் சிரம் மீது வைத்துக் கொண்டாடிய காரைக்குடியைச் சேர்ந்த கணேசனாரே தாலோ தாலேலோ எனப் பொருள்படும்.

**“அந்தம்அறியான் முதலறியான்**

**அளவில் நாமம் அவையுடையான்**

**அவுணர் குலத்துக் கந்தகனாய்**

**ஆனான் அமுதப் பாற்கடலோன்**

**பந்தம் அற்ற பல முனிவர்**

**பலரைக் காண வனமேகிப்**

**படையும் வரமும் பலபெற்றுப்**

**பஞ்சின் நொய்ய பாதத்தான்**

**சிந்தை உவக்க இளையவனும்**

**சேர்ந்து தொடரச் சென்றிடுவான்**

**சீரைக் கவியாய் செவிக் களித்த**

**செல்வன் அடியைச் சிரம் வைத்தாய்**

**கந்தம் மணக்கும் காரைநகர்**

**கணேச தாலோ தாலேலோ"** **(கம்ப.அடிப்.பிள்.3:3)**

இப்பாடல் படித்ததும் புரிந்து கொள்ளும் வண்ணம் எளிமையான நடையில் செறிவாக அமைக்கப்பட்டுள்ளது.

கம்பர் பிள்ளைத்தமிழையும் எளிமையான செறிவோட்ட நடையுடன் மீனவன் படைத்துள்ளார். சிற்றில் பருவத்தில்,

**"பொய்யே அறியா(து) இருக்கின்ற**

**புகழுக்(கு) உரிய யாம்எல்லாம்**

**பொற்போ(டு) உனக்கும் குற்றேவல்**

**புரியும் சிந்தை கொண்(டு) உள்ளோம்**

**கையில் பிடித்த சிலை உடையாய்**

**காவும் மரமும் புனல்வழியும்**

**கங்கை உண்(டு) இங்(கு) உண்ணமலர்க்**

**கனியும் தேனும் மிக உண்டே**

**உய்யும் நிலையை இன்(று) அடைந்தோம்**

**உவந்தே ஒரு நாள் எம்மூரில்**

**உறைவாய் என்னும் குகப் பெருமான்**

**உள்ளம் உரைத்த கம்பன் எனும்**

**செய்ய புலவா சீர் அடியால்**

**சிறியேல் சிற்றில் சிதையலே"** **(கம்ப.அடிப்.பிள்.8:2)**

என்னும் பாடலில் பொய்யென்பதை அறியாமல் புகழ் என்னும் உயர்வடைந்த இராமனுக்குப் பணிவிடை செய்யும் அறிவைக் கொண்டு உள்ளோம். கையில்

வில்லேந்தி, சோலைகள், மரங்கள், நீர்வழிகள் ஆகியவற்றைக் கடந்து கங்கை அடைந்திருக்கும் இராமனுக்குப் பழங்களும், தூயதேனும் மகிழ்வுடன் அளிக்கும் பெருமையை அடைந்தோம். மனமகிழ்வுடன் எம்மூரில் தங்க இசைவு தரவேண்டும் என்று அன்பின் உறைவிடமாம் குகனின் உள்ளத்தைத் தன் சீரிய சொற்களால் எடுத்துரைத்த கம்பனே சிற்றிலைச் சிதைக்காதே என்றுரைப்பது, மீனவன் அவர்களின் அறிவுத்திறத்திற்குச் சான்றாகும்.

பிள்ளைத்தமிழில் கம்பனின் கவித்திறம் கூறி செங்கீரை ஆடச் சொல்லும் மற்றொரு பாடல்,

**"பொங்கிவரு கின்றகரு முகில்பொழிய விழுந்தமழை**

**முழங்கிவரை மீ(து)இ ருந்து**

**முத்துக்கள் ஒருகோடி எனத்துளிகள் சிதறஒலி**

**முழக்கிவீழ் அருவி ஆகிக்**

**கங்கைஅணி சிவன்சடிலத்(து) இருந்துபுனல் பொழிவ(து) எனக்**

**கால்பிரிந்(து) ஒன்று சேர்ந்து**

**கயல்விழிகள் கொண்டுமலர்த் துகில் அணிந்தே அகில்ஆரம்**

**தன்மேனி சார்த்திக் கொண்டு**

**மங்கிவரும் அறியாமைப் புலம்உழுதே பயிர்உயரக்**

**கல்விநீர் பாய்ச்சும் ஆசான்**

**மாண்பினை ஒத்(து) ஓடிவரும் நதிவளர்த்து காக்கள் பல**

**கோடி என மலர்ந்து நிற்கச்**

**செங்குமுதம் இடைவாழும் செய்ச்சடைநன் தருபுலவ**

**செங்கீரை ஆடி அருளே"** **(கம்ப.அடி.பிள்.2:9)**

என்பதாகும்.

கரிய மேகங்கள் சூழ்ந்து முழக்கத்தொடு மேலிருந்து கீழ் விழும் மழை மலையின் மீது பல கோடி முத்துக்களாய் சொரிந்து ஒலி பொருந்திய அருவியாய் கீழ்விழுவது சிவன் சிரத்திலிருந்து கீழ் விழும் கங்கையைப் போல் உள்ளது. இதுபோல் மீன்போன்ற கூரிய விழிகள் கொண்டு அகில் ஆரத்தைத் தன்னகத்தே அணிந்து அருவியென கல்வி நீர்ப் பாய்ச்சும் ஆசானது மாண்பினை ஒத்து நிற்கும் கம்பர், பெருகி வரும் நதி போல் எண்ணற்ற பாக்களைத் தன் செங்குமுத வாயால் வழங்குவதில் வல்லவர்; இத்தகையோனே செங்கீரை ஆடி அருளே! என்கிறார். இப்பாடல் இவர்தம் உயரிய தமிழ் நடைக்குச் சான்றாம்.

உயர்ந்த நடை என்பது பலர்க்கு விளங்காத அருஞ்சொற்கள் நிறைந்தது அன்று; அருஞ்சொற்களை மிகுதியாகக் கையாளாமலே உயர்ந்த இலக்கியம் படைக்க முடியும் என்பதற்கு கவிஞர் மீனவனின் இலக்கியங்கள் சான்றாகும். கல்லாதோரும் உணரும் எளிய நடையும், கற்றோர் சிந்தையைத் தூண்டும் செஞ்சொல் நடையுமாய் இவர்தம் இலக்கியங்கள் செறிவான நடை கொண்டு திகழ்கின்றன.

**ஒலி நயம்:-**

“ஒலிகள் தனித்தும் இணைந்தும், ஏற்படுத்தும் பல்வேறு ஒலிக்கூறுகளை ஆராய்வது நடையியலின் பாற் பட்டதாகும்.”[25] ஆசிரியரின் படைப்பில் காணப்பெறும் பல்வேறு ஒலிநயங்களைத் தொகுத்துப் பார்க்கும் போது தான் ஆசிரியரின் இயல்பான சொல்லாட்சித் திறத்தை அறிய முடியும். “மரபிலக்கணத்தில் கூறப்பெறும் எதுகை, மோனை, வண்ணம் முதலாயின இவ்வொலி நிலைக்கூறுகளுள் அடங்குவன. பாடல்கள் நினைவில் நிற்பதற்காக இவ்வுத்தி முறைகளைக் கையாண்டிருக்கக்கூடும். சில ஒலிகளோ, தொடர்களோ பாட்டில் மீண்டும், மீண்டும் வருமானால் அவை எளிதில் நினைவு நிற்கத் துணை செய்யும்.

பாடல்களில் தொடர்கள் பயின்று வருவதும் சொற்கள் பயின்று வருவதும் இம்முறையிலேயே அமைந்தன. காலப்போக்கில் ஒலிகள் மட்டும் பாடல்களில் பயின்று வரத் தொடங்கின. இக்கட்டத்திலேயே எதுகை, மோனை, போன்றவை தனி உத்திகளாகத் தொடங்கின என்பர் நடையியலாய்வறிஞர்."[26]

"செய்யுள்களில் அமையும் மொழி நடைப் பாங்கினைத் தமிழ் இலக்கண நூலார் ஒலிக்கூறுகளின் அடிப்படையில் பாகுபடுத்திக் காட்டுவது, இன்றைய நடையியல் சிந்தனைகளோடு ஒத்து வருவதும் எண்ணுதற்குரியது"[27]

ஒலிகளின் வடிவமாய் பாக்கள் அமைந்துள்ளமையை "பா என்பது சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்தும், சொல்லும் தெரியாமல் பாடம் ஓதுங்கால் அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுள் என்று உணர்வதற்கு ஏதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை"[28] என்பர் பேராசிரியர்.

இதன் வழிப் பழங்காலம் தொட்டு பாட்டின் சிறப்பு ஓசைநயமே என்பது புலனாகிறது. மேலும் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆகிய நான்கு பாக்களின் ஓசைக்கும், செப்பலோசை, அகவலோசை, துள்ளலோசை, தூங்கலோசை எனத் தனித்தனியே பெயர் தந்து போற்றிய சிறப்பால், செப்பலோசை முதலியவற்றுள் ஒவ்வொன்றினையும் மும்மூன்றாகப் பிரித்துணர்ந்த நுட்பத்தாலும் இது தெளிவாகும்.

"ஒலிகள் அளவாலும் தன்மையாலும், முயற்சியாலும் வேறுபட்டு ஒழுங்காக அமைந்து வந்த அமைப்பே திரும்பத் திரும்ப வந்து இனிமை பயப்பது ஒலிநயம்"[29] என்பர். மரபுச் செய்யுளில், தொடைநயம் பாவகை முதலியன ஒலிநயத்திற்குக் காரணமாகின்றன.

**மீனவனின் இலக்கியங்களில் தொடைநயம்:-**

எழுத்து, அசை, சீர், அடி, தளை, தொடை ஆகியன மரபுச் செய்யுளின் கூறுகள். இதனை யாப்புறுப்புக்கள் என்பர். செய்யுளை யாத்தற்கு எழுத்து, அசை, சீர், அடி ஆகியன உறுதுணை செய்கின்றன. ஆனால் செய்யுளுக்கு ஓசை நயம் தரும் உறுப்பு தொடையாகும். தொடையற்ற பாடல் நடையற்றுப் போகும் என்னும் மரபு இங்கு குறிக்கத்தக்கது.

"தொடை, ஓசை, வண்ணம் ஆகியவைகளையொட்டி யாப்பின் தரம் அமைகிறது"[30] என்பர். இத்தகைய தரத்தைத் தீர்மானிக்கும் காரணிகளுள் ஒன்றான தொடைநயம் மீனவனின் இலக்கியங்களை ஒலிநயமிக்கதாய் ஆக்கியுள்ளன.

**தொடையின் வகைகள்:-**

**1. மோனை 2. எதுகை 3. இயைபு 4. முரண் 5. அளபெடை 6.அந்தாதி 7.இரட்டை 8.செந்தொடை** ஆகிய எட்டும் தொடையின் வகைகளாகும். இவற்றில் மோனையும் எதுகையும் அடிசிறக்க உதவுவன ஆகும்.

**மோனை:-**

அடியில் உள்ள சீர்களின் முதலெழுத்து ஒன்றி வருவது மோனை ஆகும். இதனை ஆங்கிலத்தில் **Alliteration** என்பர். "மோனை ஆங்கிலப் பாட்டுகளில் பலவற்றில் இல்லை. தமிழிலோ மோனை இல்லாப் பாட்டே இல்லை எனலாம். ஆங்கிலத்தின் எதுகை இல்லாப் பாட்டுக்கு ஒரு வகையில் நிகரானதாக உள்ள தமிழ் அகவலிலும் மோனை இல்லாமல் பாட்டு இயற்றப்பட்டதில்லை"[31] என்பர்.

எழுத்துக்கள் ஒத்து வருதல் எனும் போது ஒரே எழுத்து ஒன்றுக்கு ஒன்று மோனையாதல், ஒரே இன எழுத்துக்கள் ஒன்றுக்கொன்று மோனையாதல், என்னும்

நிலையில் மோனைகள் அமையும். மாதவமேகலையில் மீனவன் மோனைத் திறத்திற்கான சான்றுகள் பல காணப்படுகின்றன. குறிப்பாக, இவர்தம் பாடல்களில் பொழிப்பு மோனை அதிகம் காணப்படுகிறது. பொழிப்பு என்பது ஒரு வகைத் தொடை விகற்பமாகும். செய்யுளின் அடிகளில் முதல் சீர் மற்றும் மூன்றாம் சீர் ஒரே வகையான தொடை அமையப்பெறுவது பொழிப்புத் தொடை விகற்பம் ஆகும்.

உயர்நல ஞானம் உணர்த்திய காதையில், தமிழ் மொழியானவள் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகியவற்றை ஐம்பொறியாகக் கொண்டு காப்பு, தால், செங்கீரை, முத்தம், வருகை முதலான பத்துப் பருவத்தில் வளர்ந்து வள்ளுவப் பெருமகனாரின் முப்பாலினை உண்டு, கவிஞர்களின் கவிதையமுத ஊட்டத்தில் வளர்ந்து யாருக்கும் நிகரின்றி உலகு போற்றும் தனித்துவம் கொண்டு திகழ்கிறாள் என்பதை,

**“எழுத்தொடு சொல்லும் இயன்றநற் பொருளும்**
**விழுத்தகு யாப்பும் விளைசுவை யணியும்**
**ஐம்பொறி யாக அமைந்தசீர்ச் செல்வி**
**தம்புலம் காண்போர் தாயென வாகக்**
**காப்பொடு தாலும் கனிந்தசெங் கீரையும்**
**வாய்ப்பாடு முத்தமும் வருகையும் பிறவா**
**ஈரைந் தாக இயலும் பருவச்**
**சீரமைந் திலகிச் செந்நாப் போதார்**
**முப்பா லூட்ட மூதறி வானர்**
**அப்பால் நறுங்கவி அமுதம் ஊட்ட**
**ஒப்பிலாள் என்ன உலகுரை செய்ய...” (மாதவ.மே.9:73-83)**

என்று பாடுவர்.

அங்கிங்கு எனாதவாறு அத்துனை காதைகளிலும், இவர்தம் மோனைத்திறம் புலப்பட்டுள்ளது. ஏறத்தாழ அனைத்துப் பாடல்களிலும் இவர் பொழிப்பு மோனையைப் பொலிவுறக் கண்டுள்ளார். மாதவனின் துன்பங் கண்டு அரற்றும் வில்லவன், கோதையிடம் மணிமேகலை ஆறுதல் கூறுமிடத்து, சாதிப் பிரிவு குறித்த தன் கருத்துகளைச் செறிவான நடையில் மீனவன் அடுக்குகிறார்.

**"அவலம் ஒழிப்பீர்! அகிலத் துறையும்**

**உயிர்களில் கீழ்மேல் உரைத்திடல் தவறு**

**பயனிலாக் கொள்கை படைத்தசில் லோர்தம்**

**புன்னெறி பற்றிப் போனத னாலே**

**நன்னெறி மாறி நாட்டிற் பற்பல**

**இனங்கள் எழுந்தன இதையுணர்....."** **(மாதவ.மே.23:55-60)**

என்பதில் 'துன்பத்தைத் தவிருங்கள். உலகத்தில் உள்ள உயிர்களில் கீழோர், மேலோர் எனப் பகுத்துரைத்தல் தவறு; பயனில்லாத கொள்கையைப் படைத்த சிலர் தன்னுடைய நெறியைப் பற்றிக் கொண்டு திரிவதால் நாட்டில் நல்ல நெறிகள் மாறி இனங்கள் எழுந்தன என்னும் பொருள்பட வரும் இப்பாடல் மணிமேகலையின் வாய்மொழியின் வாயிலாய் மீனவனின் மனத்திறத்தையும், அவரின் மோனை நடைத்திறத்தையும் புலப்படுத்துகிறது.

காப்பியம் மட்டுமன்றி இவர்தம் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் மோனை நயம் மிகுந்துள்ளது. கம்பர் பிள்ளைத்தமிழில் உள்ள தாலப்பருவத்தில்,

**"பொங்கும் கமலப் பூவிடையில்**

**பொலிந்த தேனும் கதிர்ப்பகையின**

**புல்லி வடித்த புதுத்தேனும்**

**புரண்டு பாய்ந்தே கால்காலாய்**

**ஏங்கும் பெருகக் கழனி இடை**

**இறங்கும் மள்ளர் கால் பின்னி**

**இடர்ப்பா(டு) உற்றுத் தடுமாற**

**ஏழில்மின் வென்ற இடைமாதர்**

**தங்கை கொண்டு தழுவியவர்**

**தடந்தோள் பற்ற ஒளிமுத்தம்**

**தூன் கண்(டு) அங்கு நகைசெய்யும்**

**தணியாக் காதல் வளநாடா**

**தங்கக் கவிக்(கு) ஓர் தாய்ஆகித்**

**தூங்கும் கம்பா தாலோ தாலேலோ" (கம்ப.பிள்.4:7)**

என்னும் பாடலில் அடிமோனையும், சீர் மோனையும் இலங்கி வருவதைக் காண இயலும்.

கம்பனடிப் பொடி பிள்ளைத்தமிழில்,

**"கொம்பில் உள்ள கிளிகளெலாம்**

**குதலை பேசும் கோலநகர்க்**

**கொடியாம் அன்னை மைதிலியைக்**

**கொள்ளக் கருதும் இராமபிரான்**

**தம்பொற் பாதம் காண்மிதிலை**

**தன்னை ஆளும் சனகர் புகழ்**

**தன்னை உரை செய் கம்பனிடம்**

**தன்னை மறந்து தமிழறிவாய்**

**அம்பார் கண்ணி கொப்புடைய**

**அன்னை ஆளும் காரைநகர்**

**அன்பர் சாமிநாதர் மகன்**

**ஆகம் பிறந்தாய் அறிவுடையாய்**

**கம்பன் அடிக்கும் பொடியான**

**கண்ணே தாலோ தாலேலோ"... (கம்ப.அடிப்.பிள்.3:3)**

என்னும் பாடலில் மீனவன் அவர்களின் மோனைப் படைப்புத் திறம் தெள்ளிதின் புலனாகும். மோனையைப் படைக்க வேண்டும் என்றில்லாமல் தன் புலமையில் தானாக உருவாகும் தன்மைத்தாய் இவர்தம் மோனைகள் அமைந்துள்ளது.

**எதுகை நயம்:-**

தொடை உறுப்பு வகைகளில் எதுகை முக்கியமானதாகும். வெவ்வேறு அடிகளின் அல்லது சீர்களின் எழுத்து ஒன்றி வருவது எதுகை எனப்படும். பொதுவாக அடி எதுகை செய்யுள்களில் சிறப்புப் பெறுகின்றது. சீரெதுகை புலவர்களால் அதிகம் கைக்கொள்ளப் படுவதில்லை. "பாட்டில், எதுகை நன்கு அமைதலால் ஒலி நயம் சிறந்து விளங்கும்"[32] என்பர். குறிப்பிட்ட இடத்தில் வந்த ஒலி திரும்பத்திரும்ப வருதல் எதுகை ஆகும்.

மாதவமேகலையில் எண்ணிலடங்கா எதுகைகள் பயின்று வந்துள்ளன. காப்பியம் முழுமையும், எதுகையின் எழில் வண்ணத்தில் அழகுற விளங்குகிறது.

**"கலக்கமுற் றுள்ளம் கண்கள் நீர் பொங்க**

**என்னுயி ரணையீர்! ஈங்குள மக்கள்**

**நுன்னிய பசிநோய்த் துயர்பட் டீர்உம்**

**கவலை மாற்றும் கைசேர் கடிகை**

**கவர்ந்து செல் கொடியர் கைப்பட டதனால்**

**உண்ணீர் துறந்த ஊருணி போன்றேன்**

**கண்ணீர் அன்றி காட்டுதல் அறியேன்...." (மாதவ.மே.17:25-30)**

என்னும் பாடலில் தங்களது பசியைப் போக்க வேண்டி வந்த மக்களைக் கண்டு கலக்கமுற்று கண்ணில் நீர்மல்கி, அவர்களது பசிநோயைத் தீர்க்கும் பாத்திரத்தைக் கள்வர்கள் கவர்ந்து சென்ற நிலை கூறி வருந்துகிறாள். தனக்கு உரிய நீரை இழந்து நிற்கும் ஊருணி போல் பாத்திரம் இல்லாமல் தானும் வறட்சி அடைந்ததைக் கண்ணீரொடு சொல்கிறாள். இதனைக் காட்சிப்படுத்திய மீனவனின் எதுகைநயம் ஈண்டு பாராட்டுதற்குரியது.

காமம் கால் கொண்ட காதையில் அன்னம் பூவொடு புலம்பும்,

“மாமரத்தில் இருந்து மயக்கும் இசைகேட்டுக்கொண்டு தன் பசுக்களை மேய்ப்பவனான மாதவனின் அருட்கண் தன் மீது பட வேண்டுகிறேன். சோலையெல்லாம் மணம் பரப்பிக் காண்பவர்க்கு எல்லாம் விருந்தளிக்கும் பூக்கள் அனைத்தும் அவனிடம் சென்று பூவையின் துயரை எடுத்துக் கூறக் கூடாதோ என்னும் கூற்றை,

**“மா<u>வெ</u>ல்லாம் இருந்து குயில்**

**மயக்குமிசை கேட்டயர்ந்தே**

**ஆ<u>வெ</u>ல்லாம் வளர்க்குபவன்**

**அருள் வேண்டி வாடுகிறேன்**

**கா<u>வெ</u>ல்லாம் மணம் பரப்பிக்**

**காண்பார்க்கு விருந்தளிக்கும்**

**பூ<u>வெ</u>ல்லாம் போந்தவன் பால்**

**பூவைதுயர் சொல்லீரோ....”        (மாதவ.மே.19.61-64)**

என்பதாகும். இப்பாடலின் அடியெதுகை மீனவனின் நடைத்திறத்தை பூவொடு புலம்பும் அன்னத்தின் மன வாயிலாய்த் தெளிவறக் காட்டுகிறது. அன்னத்தின் இறப்பிற்குப்பின் மாதவன் அவளை எண்ணிப் புலம்பிக் கலங்குகிறான். நெஞ்சில்

படர்ந்த துயர் அவனைச் சுட்டுப் பொசுக்குகிறது அழகின் உருவான அன்னத்தை அனலில் இடுவற்காகவா இத்தனை நாள் வாழ்ந்தோம். பொன்னின் அருமை தெரியாத பித்தர் அதனைக் கடலில் மூழ்கடித்து வருந்துவது போல் அவன் நெஞ்சம் பெருந்துயர் அடைந்தது என்னும் பொருள்படும்,

**"நெஞ்சிடைப் படர்ந்த நெடுந்துயர் தனைச்சுட**

**வஞ்சியை இழந்தேன் வாடிடும் நெஞ்சம்**

**அழகின் உருவினை ஆர்த்தெழு தீயின்**

**வழிப்படுத் தெரிக்கவோ வாழ்ந்தனன் இந்நாள்**

**முத்தரைப் பசும்பொன் மூழ்கடல் தோற்ற**

**பித்தரைப் போலப் பெருந்துய ருற்றேன்" (மாத.மே.25.2-7)**

என்னும் பாடலில் அன்னத்தை இழந்த மாதவனின் சோகம் எதுகை நயத்தொடு எடுத்தியம்பப்பெற்றுள்ளது.

மேற்சுட்டப்பட்ட சான்றுகள் அனைத்து மீனவனின் எதுகை, மோனை நடைத்திறனை புலப்படுத்தி நிற்கின்றன.

"ஒலிநயம் அல்லது யாப்பு பாட்டிற்குப் பல சிறப்புகளை நல்குகிறது. பாட்டின் முதன்மையான பணி முருகியல் இன்பம் தருவதாகும். இம்முருகியல் இன்பத்தை யாப்பு வடிவம் மிகுவிக்கிறது. யாப்பின் மொழி முறையாக இசையினை உண்டாக்கி இதயத்திற்கு நிறைவைத் தருகிறது. இவ்வகையில் அது முருகியல் இன்பத்திற்குக் கருவியாக அமைவதாகும்"[33] என்பர்.

இத்தகைய முருகியல் இன்பத்தை வழங்கும் ஒலிநயம் தொடைநயத்தால் சிறக்கிறது. அதிலும் குறிப்பாக, எதுகை, மோனைத் திறத்தால் மேம்படுகிறது எனக் கூறின் அது மிகையாகாது.

**உவமை நயம்:-**

படைப்பாளி தம் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் தக்க சொற்களால் வடித்தளிப்பதற்குத் துணை நிற்கும் உவமை ஆசிரியரின் நடைத்திறன்களில் அடங்கும். அவை அவ்வாசிரியரின் தனித்தன்மையைக் காட்டும் படைப்பாளியின் புனைதிறன்கள் பல்வேறு திறத்தன. அதில் முதலாவதாக இடம் பெறுவது உவமை ஆகும். உவமை என்னும் சொல் ஒப்புமை என்று பொருள்படும். ஒரு பொருளைப் பற்றிக் கூறும் போது அதனை விளக்க அதனைப் போன்ற இன்னொரு பொருளுடன் ஒப்புமைப் படுத்தி விளக்குவது உவமையாகும். இவ்வகையிலான உவமைகளைக் கருத்துப் புலப்பாட்டு உவமை, இன்புறுத்தும் உவமை என இருவகையாகப் பாகுபடுத்த இயலும். கருத்துப் புலப்பாட்டு உவமை என்பது கருத்தை மையமாகக் கொண்ட உவமையாக அமைகிறது. உவமையைப் படிக்கும் போதே படிப்பவருக்கு ஒரு வித மகிழ்ச்சியைத் தருவதாக அமையும் உவமையே இன்புறுத்தும் உவமையாகும். தொல்காப்பியர், உவமை பொருளின் தன்மையை விளக்கிக் காட்டுவதாகவும், சிறப்பிப்பதாகவும் இருத்தல் வேண்டும் என்பர். இதனை

**“உவமமும் பொருளும் ஒத்தல் வேண்டும்”**[34]

**“உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை”**[35]

என்பன போன்ற நூற்பாக்கள் விளக்கும். மாதவமேகலையின் முன்னோடியான மணிமேகலை உவமையைப் பற்றி,

**“உவமமாவ(து) ஒப்புமை அளவை”**[36] என்கிறது.

இத்தகைய உவமை இலக்கியத்தில் குறையின் அது சிறப்படையாது. மாதவமேகலையில் பயின்று வரும் எண்ணற்ற உவமைகள் கற்போரைக் களிப்பில் ஆழ்த்துவன.

**மாதவமேகலை காட்டும் உவமைகள்:-**

மாதவ மேகலை காப்பியத்தில் மீனவன் அவர்கள் தொண்ணூற்றாறு (96) உவமைகளைக் கையாண்டுள்ளார் அவற்றுள் சில வருமாறு மாதவமேகலையின் இரண்டாம் காதை வரலாறு உரைத்த காதை. இதனுள் சிலம்பு மற்றும் மேகலையின் சுருக்கம் காணப்படுகிறது. அதில் வரலாறு உரைக்கும் அறவோரின் தன்மையை மேகம் போல் கருணை செய்யும் மேலோர் என உவமிக்கிறார் **(மாதவ.மே.2:110-111)** மாதவியின் பண்பினைக் கூறுமிடத்து,

**"இப்பியிற் பிறந்த இனமணி போலத்**

**தப்பிலள் கணிகையர் தம்குலம் பிறந்த" (மாதவ.மே.2:112-113)**

என உவமிக்கிறார். கடலில் உள்ள சிப்பியில் பிறந்த முத்துப் போன்று தூய்மையானவள் மாதவி என்பது இதன் பொருள் ஆகும்.

பசித்தார்க்குதவப் பாவைசெல்காதையில் நகரத்தின் வறட்சியைக் கருமியின் இல்லத்தில் கால் வைக்காத சான்றோர் போல வளம் நகரைவிட்டு நீங்குவதாக உவமிக்கிறார். **(மாதவ.மே.3:40-41)** இத்தகைய வளமற்ற நிலத்தில் வாடும் மக்களின் பசித்துயர் ஆற்ற வந்த மேகலையை

**"கன்றை நினைந்து கடிதுசெல் காரா**

**என்றிடு மாறங் கேகினள் அவள்" (மாதவ.மே.3:69-70)**

என்று கன்றினை நினைத்து விரைந்து செல்லும் தாய்ப்பசுவோடு உவமிக்கிறார்.

அமுத சுரபியைக் கயவர்கள் கவர்ந்து சென்றவுடன் மேகலை துன்பம் அடைகிறாள். அப்பாத்திரத்தை உயிரினும் மேலாக மதித்த மணிமேகலை உள்ளம் கலங்கித் தவிக்கிறாள். அவளின் நிலையைக் கூறும் கவிஞர்,

**"கன்றினை இழந்த காரான் போலவும்**

**கைக்கோல் இழந்த கண்ணிலான் போலவும்**

**மெய்ப்பொருள் இழந்த மேலோன் போலவும்**

**குளிர்நீர் அற்ற கூவலைப் போலவும்**

**ஒளி உயிர் இழந்த உடலது போலவும்''** **(மாதவ.மே.13:74-78)**

கலங்கித் தவித்ததாகக் கூறுகிறார். கன்றினை இழந்த பசு கதறித் துடிக்கும். கண்ணில்லாதவன் கைக்கோலை இழந்தால் செய்வதறியாமல் திகைப்பான். மேலான ஞானம் பெற்றவன் சூழ்நிலையால் மெய்ப்பொருளை மறந்தால் தன் நிலையில் தாழ்வான். உள்ளம் கலங்குவான். உயிர் பிரிந்தால் வெற்றுடல் இயக்கமில்லாமல் கிடக்கும். இத்தகு நிலைகளை மணிமேகலை அடைந்ததை உவமையால் அடுக்கியுள்ளார் கவிஞர்.

பாத்திரத்தைக் காணாது கலங்கிய மேகலையிடம், அறவணர், இருளென்னும் அறியாமை உள்ள மனத்திற்கு அறிவு உதவாதது போல, கடலைச் சுற்றியுள்ள ஊர்களுக்கு கடல் நீர் கொண்ட மேகம் பெய்யாமல் போவது போல அப்பாத்திரம் அக்கயவர்க்கு உதவாது எனக் கூறுகிறார்.

**''மைபடர் மனத்தார்க் குதவா அறிவுபோல்**

**ஊர்வளைத் திருக்கும் உதவா கடல்போல்**

**நீர்சுமந் திருப்பினும் பெய்யா முகில்போல்**

**ஓங்கி வளரினும் உதவாச் சாலி போல்**

**ஆங்கப் பாத்திரம் அவர்க்குத வாது''** **(மாதவ.மே.18.15-19)**

என அடுக்கி உவமையை நயம்படக் கையாண்டுள்ளார். புதுமையான உவமைகளைக் கையாள்வதில் மீனவன் வல்லவர் என்பதை மேற்சுட்டப்பட்ட பகுதி நன்குணர்த்தும். இவ்வாறாகக் காப்பியம் முழுமையும் கவிஞரது உவமைத்திறன் மிகச் சிறப்பாகக் காணப்படுகிறது.

**உணர்ச்சி நடை:-**

படைப்பாளன் தன் மனதில் உருவாக்கும் உள்ளத்து வெளிப்பாட்டைக் கதைப் பாத்திரத்தின் வாயிலாக வெளிப்படுத்திப் படிப்பவர் மனதில் பதிய வைக்கும் ஒரு வகை மொழிப் பாங்கு உணர்ச்சி நடை ஆகும்.

"உணர்ச்சி மிகுந்தபோது, ஒருவருடைய மனத்தில் அசைவு ஏற்படுகிறது. அது இருந்த நிலையில் அமைதியாய் இருப்பதில்லை. அதனால் உடலிலும் அத்தகைய மாறுதல் நிகழ்கின்றது உடலில் எந்த வாயிலாகவேனும் அசைவு புலப்படுகிறது. சிறுவர்களிடத்தில் அதைக் காணலாம். மகிழ்ச்சியான செய்தி அறிவிக்கப்பட்டவுடன் சிறுவர் துள்ளுவர், ஓடுவர், பாடுவர், ஆடுவர் மனத்தின் அசைவு அவ்வாறு ஆடல் பாடலாய் வெளிப்படுவது இயற்கை. அதுவே, வளர்ந்தவரிடத்தில் குறிப்பாய் புலப்படும், அவர்களின் உடல் முழுவதும் ஆடாவிட்டாலும் வாயில் பிறக்கும் ஒலிகளில் சொற்களில் அந்த ஆடலும், பாடலும், புலப்படும். அதாவது பொருளுடன் பேசினாலும் அந்தப் பேச்சில் அமையும் சொற்களிலே ஒரு வகை ஒழுங்கு அமைந்து ஒலிநயம் புலப்படும்"[37] என்பர் மு.வ.

இதனின்று உணர்ச்சி ஒலிநயக் கூறில் ஒன்றாக இலங்குகிறது என்பதை அறிய முடியும். மேலும் அவர் "புலவரின் உணர்ச்சியனுபவத்தை விளக்கும் ஆற்றல் அந்தச் சொற்களுக்கு இல்லை. அத்தகைய சொற்களின் வாயிலாக உணர்ச்சி புலப்படும் போது ஒலிநயம் வந்து உதவுகிறது"[38] என்கிறார்.

இத்தகைய ஒலிநயத்துடன் கூடிய உணர்ச்சியைப் படிப்போனின் உள்ளத்தில் புகுத்தும் திறம் கொண்டவர் கவிஞர் மீனவன். மீனவனின் இலக்கியத்தில் இருக்கும் ஆற்றல் மிகு தனித்தன்மைகளில் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் திறனும் ஒன்றாகும். மீனவன் தம் உள்ளத்தில் உருவெடுக்கும் உணர்ச்சிகளைச் சிந்தாமல் வெளிப்படுத்துவதற்கு ஏற்ற வகையில் சொற்களைத்

தேர்ந்தெடுத்து அமைத்துள்ளார். மாதவமேகலையில் பாத்திரங்களின் உணர்ச்சி நமது உள்ளத்தில் எய்தும் விதமாக,

**“தூண்டா மணிவிளக்கே!**

**துணையிருந்து காப்பவனே!**

**வேண்டும் குறை கேட்டோம்**

**வேதனைகள் நீக்காயோ**

**எங்கோ பிறந்தவன் நீ**

**இங்கே வளர வந்தாய்**

**செங்கைக் குழலூதிச்**

**சித்தம் மகிழவந்தாய்**

**கங்கைக் கரம் சுமந்து**

**சக்கரமும் தான் சுமந்தாய்**

**எங்கள் முகம் பார்க்கலையோ**

**என்ன குறை கேட்கலையோ**

**மங்கை யசோதை**

**மனமகிழ வந்தவனே**

**எங்கள் குலத் தலைவருக்கோ**

**இன்னமொரு பிள்ளையில்லை**

**பொங்கும் அலைகடலில்**

**பொருந்தியே கண் வளர்ந்தாய்!**

**எங்கள் குறை கேட்கலையோ**

**இன்னுமுகம் பார்க்கலையோ”** **(மாதவ.மே.3:77-86)**

என்று பாடுவர். குழந்தையற்ற தம் தலைவன் வில்லுவனுக்காகத் திருமாலிடம் ஆயர்குல மக்கள் வேண்டுகின்றனர். எங்கோ பிறந்து ஆயர்குலத்தில் வளர வந்து, குழலூதி மகிழ்வித்தவன். சங்கையும் சக்கரத்தையும் கைகளில் சுமந்தவனே! எங்கள் முகம் பார்த்துக் குறை கேட்கமாட்டாயோ! மங்கை யசோதைக்கு மகனாய் ஆயர் குலம் சேர்ந்தவனே! ஆயர்குலத் தலைவனுக்கு பிள்ளைப்பேறு தர இரங்கி வரமாட்டாயா! என்னும் பொருள்படும் இப்பாடலில் அழுகை உணர்ச்சி மேலிடுகிறது. மக்கள் தெய்வத்திடம் இறைஞ்சுவதைக் காணும் போது படிப்போனும் அவர்களோடு சேர்ந்து வேண்டுமாறு ஆசிரியர் படைத்துள்ளமை உணரத்தக்கது. அமுதசுரபியை அகற்றிய காதையில் தவநெறியைப் பழித்து வந்த தருக்கர்கள் வஞ்சக எண்ணங்கொண்டு மணிமேகலையொடு வாதிட்டனர். அவர்களைப் பற்றியும் அவர்களின் செயல்பற்றியும் மீனவன்,

"எரிகின்ற சுடரைக் கையில் பிடிக்க எண்ணுதல் போல், கடல்நீரை கைக்குள் அடக்க எண்ணுதல் போல், கானக் கோழியை மயிலென எண்ணுவார் போல், பானையுள் யானையைப் படுக்க வைக்க எண்ணும் மூடரைப் போல் மாடுபோல யாதொரு இலக்குமின்றிச் செல்லும் தருக்கர்கள் மேகலையொடு வாதிட்டதை ஒரு வித எள்ளலான நகையுணர்ச்சியில் வெளிப்படுத்துகிறார்.

மேகலையை, வார்த்தையில் வெல்ல இயலாத தருக்கர்கள் அவளின் பசியகற்றும் பாத்திரத்தைக் கவருகின்றனர். பாத்திரம் காணாத மேகலை ஊரார்க்குதவும் ஒப்பிலாத பாத்திரத்தின் மீது யார் கை பட்டதோ? இவ்வறம் தொடரும் என சான்றோர் உரைத்தது பொய்யாயிற்றோ? என் பால் ஏதேனும் தவறு உண்டோ? யார் எடுத்தாரோ? ஏது செய்தாரோ? எனப் பலவாறாக அரற்றுகிறாள்.

**"ஊரார்க் குதவும் ஒப்பில்லாக் கடிகை**
**யார்கை பட்டதோ அறியேன் மக்கள்**
**ஆர்பசி போக்குமிவ் வறமே தொடர்ந்து**

**சீருடன் வளர்கெனச் செப்பிய நல்லோர்**
**அடுக்கிய தவத்தார் அவருரை பொய்த்ததோ?**
**பன்னலம் சிதைக்கும் பசிகொண் டலைவார்**
**வருத்தம் களையவோர் வழியே இலையோ?**
**……………………………………………..**
**…………………………………………….**
**எவரெடுத் தாரோ? ஏது செய்தாரோ?**
**தவறோ என்பால்? சாற்றுவீர்..............”   (மாதவ.மே.14:18-24)**

இதில் பாத்திரம் இழந்த மேகலையின் அவல உணர்ச்சி படிப்பாரைக் கலங்கச் செய்கிறது.

மாதவனது காதலி அன்னம் அரவு தீண்டி இறந்தபோது மாதவன்,

**“பூஞ்சோலை குயிலாகிப்**
**பொழுதெல்லாம் கூவிடு நீ**
**மாஞ்சோலைக் கிளிபோல**
**மழலைபல மொழிந்தனையே......**
**காஞ்சனப் பொன் திருமேனி**
**கனலிடையில் உருகிவிழ**
**நாஞ்சிலற்ற உழவனைப் போல**
**நானிருந்தே நல்லதுவோ.............   (மாதவ.மே.25:16-20)**
**உறவுக்கு நெறிகாட்டும்**
**உன்னுடலை அணையுமுனம்**
**அரவுக்கே விருந்தாகி**
**அமருலகம் அடைந்தனையோ......**
**............................................................**
**பண் பொழியும் உன் திருவாய்ப்**

**பாலமுதம் உண்ணாமல்**

**கண் பொழியும் நீர்க்கடலில்**

**காலமெலாம் வீழ்வேனோ**

**அன்றிலென இருந்த நமை**

**அரவம்தான் பிரித்ததுவோ**

**கன்றியழும் என் துயரம்**

**காலமெலாம் தீராதோ.....** (மாதவ.மே.36-40)

எனப் புலம்புகிறான். குயில்போல, கிளி போல கொஞ்சிப் பேசித் திரிந்தவளின் பொன் மேனியை கனல் தழுவியதால் கலப்பையற்ற உழவனாய்க் கலங்கித் தவிக்கிறேன். திருமணம் முடிக்கும் முன் அரவுக்கு விருந்தாய் தேவலோகம் சென்றவளை எண்ணி எண்ணித் துயருற்றேன். அன்றில் போல் வாழ்ந்த இணையரை அரவம் பிரித்தது, அதை எண்ணி அடையும் துயரம் காலமெலாம் தீராது என, மாதவன் புலம்பும் காட்சி அன்னத்தை இழந்து அவன் படும் துயரத்தை அனைவரும் அறியுமாறு செய்கிற அவல உணர்ச்சி மீனவனின் நடைத்திறனுக்குச் சிறந்த சான்றாகிறது.

பாத்திரம் மீளப் பார்த்த காதையில் பாத்திரத்தைக் கண்ட மேகலை அடைந்த உவகையை,

**“பக்கம் இருந்ததன் பாத்திரங் கண்டதும்**

**மக்களைத் துறந்து மறுநாள் காண்குறு**

**தாயர் போலவும் தன் வாழ் நாளில்**

**வாயா மணமென வாடிடு வனிதை**

**மணங் கண்டன்பில் மகிழ்ந்தாற் போலவும்**

**வற்றாப் பேரறம் வளர்த்த மேகலை**

**உவகைக் கடலிடை உளம்திளைத் தனளாய்**

**அவலம் அகற்றும் அறம்பெருங்........."  (மாதவ.மே.18.41-49)**

என்னும் அடிகள் உரைக்கும்.

படைப்பாளரின் உணர்ச்சிப் பெருக்கு காப்பியப் பாத்திரங்கள் வாயிலாக வெளிப்பட்டுப் படிப்போர் உள்ளத்தில் ஊடுருவிச் சென்று அவர்களை உணர்ச்சிப் பெருக்கில் ஆழ்த்தி இன்புறுத்துகிறது,

இத்தகைய அரிய கலையைத் தன் கையகத்து வைத்திருக்கும் மீனவனின் புலமை சிறப்பிற்குரியது. நகை, அழுகை, உவகை, போன்ற உணர்ச்சிக் கூறுகள் அவரது பாடல்களில் இயல்பாய் அமைகின்றன. "ஓரிலக்கியத்தைப் படிக்கும் போது நம்முள் எழும் உணர்ச்சி ஆற்றல் வாய்ந்ததாய் இருத்தல் வேண்டும். ஓரிலக்கியத்தின் தரம் அது தூண்டும் உணர்ச்சியின் ஆற்றலைப் பொறுத்துள்ளது. அதனைப் படிக்கும் போது அது நம்முள்ளத்தை நெகிழ்வித்து உணர்ச்சியை எழுப்பி மயிர்க்கூச்செறியச் செய்யுமாயின் சிறந்த இலக்கியமென மதிக்கப்படும்"[39] என்பர் தா.ஏ.ஞானமூர்த்தி.

சி.டி வின்செஸ்டர் நெடிது வாழும் இலக்கியம் எத்தகைய உணர்ச்சி நடையைப் பெற்றிருக்க வேண்டும் என்பதை,

"நியாயமான தக்க உணர்ச்சி; நல்ல காரணத்திற்காக நல்ல வகையில் அமைவது, ஆற்றலுள்ள உணர்ச்சி; ஆசிரியரின் உள்ளத்து உண்மையை ஒட்டியது ஆழம் உடையது. தொடர்ந்து ஒரு நிலையாக அமையும் உணர்ச்சி பொருந்தாததும், வேண்டாததும் இடையில் புகாதவாறு அமைவது; வலிந்து கொண்டு வரப்படாமல் இயல்பாக அமைவது வாழ்க்கையில் பல கோணங்களை விளக்குமாறு பலவகை உணர்ச்சிகள் கூடி அமைதல். மிக விழுமிய உணர்ச்சியால் அமைதல்; பொருள்கள் காரணமாகவோ புலனின்பம்

காரணமாகவோ, அமையும் உணர்ச்சிகளை விட உயர்வுடைதாய், நீதியின் காரணமாகவோ, அறத்தின் காரணமாகவோ அமைதல்”[40] என்பர். மேற்சுட்டப்பட்ட ஐந்து உணர்ச்சிக் கூறுகளும் மாதவமேகலையில் ஒருங்கே அமைவதைக் காணமுடிகிறது.

**மீனவனது இலக்கியங்களின் சொல்லாட்சியும் இலக்கண வடிவமும்:-**

நடை காணும் நெறியில் இலக்கண வடிவமும் முதன்மை பெறுகிறது. இக்கால இலக்கியங்களில் புதிய வகை இலக்கியங்களைத் திறனாய்வு செய்வதற்கு இலக்கண வடிவ உத்தி தேவையில்லை. மீனவனின் இலக்கியங்கள் அனைத்தும் மரபுக் கவிதைகளாய் அமைந்திருப்பதால் அவ்விலக்கியத்திற்கான இலக்கண வடிவ நோக்கு ஆராயப்பட்டுள்ளது. சொல்லாட்சி, யாப்பு ஆகிய இரண்டும் சரிவர அமையப் பெறுதல் மரபிலக்கியத்தின் சிறப்பாகும். இவை மீனவனின் இலக்கியங்களில் பொருந்தியுள்ள தன்மை பின்வருமாறு;

கவிதை இலக்கியத்தில் பேரிலக்கியமாகத் நிகழ்வது காப்பியமாகும். அதனைப் பெரிதும் வளர்ச்சியுற்ற கலை வடிவம் என்பர். காப்பியத்தில் காணப்படும் சொல்லாட்சி அதன் நடைத்திறனை நன்குணர்த்தும். “காப்பியத்தின் மொழி, தெளிவாகவும் விழுமியதாகவும் இருத்தல் வேண்டும். இது முக்கியமானதாகும் மொழியின் இப்பண்புகள் எவ்வளவுக்கு எவ்வளவு குறைகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு மொழி குறையுடையதாகும். கருத்துகளைத் தெளிவுறச் செய்தற்குக் கவிஞன் அவற்றை மிகவும் தெளிவு வாய்ந்த, இயற்கையான சொற்கள் வாயிலாக வெளியிட வேண்டும். ஆனால் சாதாரண உரையாடல்களில் பயன்படுத்தப்படும் சொற்களும் காப்பியத்தில் இடம் பெறாமல் இருத்தல் வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுதல் வேண்டும். அத்தகைய சொற்கள் காப்பியத்தில் இடம் பெற்றால் அதன் உயர்தரமும், பொலிவும், மிகவும்

குன்றி விடும். காப்பியத்திற்கு உயர்தவமும், பொலிவும் மிகவும் இன்றியமையாதவை ஆகும். எனவே கவிஞன் சாதாரண பேச்சு வழக்குச் சொற்கள் தம் காப்பியத்தில் இடம் பெறா வண்ணம் விழிப்பாக இருத்தல் வேண்டும்”[41] என்பர் தா.ஏ. ஞானமூர்த்தி.

“காப்பியப் பாடலின் மொழி தெளிவாக இருப்பது மட்டும் போதாது; அது விழுமியதாகவும் இருத்தல் வேண்டும். இதற்காக அது சாதாரண சொற்களையும் பேச்சு வழக்குச் சொற்றொடர்களையும் தவிர்த்தல் வேண்டும்”[42] என்பர் ஜோசப் அடிசன். உரிய இடங்களில் உரிய சொற்களைப் பெய்து எழுதுவது படைப்பாளியின் சொல்லாட்சித் திறத்தைக் காட்டும்.

மணிமேகலையிடம் இருந்து பாத்திரத்தைக் கவர்ந்த கயவர்கள் அதில் சோறு வராததைக் கண்டு மயங்குகின்றனர். அதை,

**‘‘வெற்றென இருக்க வியப்புடன் நோக்கி**
**மற்றவர் அதனை மாற்றியும் கவிழ்த்தும்**
**கொட்டியும் நிமிர்த்தும் குலுக்கி யசைத்தும்**
**தட்டியும் கடிகை தாரா நிலையைக்**
**கண்டவர் தங்கள் களிப்பகன் றின்னல்**
**கொண்டவ ராகிக் குழிவீழ் கரிபோல்**
**மயங்கித் தவித்தனர்....’’ (மாதவ.மே.18:20-26)**

எனப் பாடுகிறார். இப்பாடலைப் படிக்கும் போது கயவர்கள் செய்த செயல் கண்முன் நிழலாடுகிறது. பாத்திரம் வருமெனப் பகர்ந்த காதையில் ஒரு காலை நேரக் காட்சியாக இருளென்னும் தவத்தாள் செங்கதிரோனைக் கண்டதும் சென்று விட்டாள்; கதிரவன் உலகில் பரப்பிய ஒளிக்கதிரால் மலரின் இதழ்கள் திறக்க, இன்னிசை பாடும் வண்டுகள் வந்து அதனுள் தேனுண்டு இசையைப் பரப்பிடும்,

அவ்விசை பழமலர்கள் சூழும் சோலையெலாம் பரவும். பசித்தவர்க்குச் செல்வம் படைத்தோர் உணவு தரும்போது அதை ஏற்கும் பசித்தோரின் மலர்ச்சி போல், சூரியனைக் கண்ட தாமரைக் குளத்தில் மனத்தில் வஞ்சகத்தை அறுத்த துறவியர் போல் அன்னம் காணப்படுகிறது. வருத்தம் உள்ள மனிதன் மனஉளைச்சலால் ஓரிடத்தில் நில்லாது அங்கிங்கு நடப்பது போல் மீன்கள் நீந்துகிறது என்பதை,

**"ஐங்கணை மறவனை வென்றிகொள் தவத்தாள்**
**செங்கதிர் வானெழச் செலவினைக் கொண்டாள்**
**பங்கயன் உலகிடைப் பரப்பிய ஒளிக்கதிர்**
**எனுங்கரத் தாலே எழில்மலர் இதழ்கள்**
**அனுங்கிடை திறக்க இன்னிசை வண்டுகள்**
**வந்துதேன் உண்டே வளரிசை பரப்பிடும்**
**முந்தை விதிப்படி முடிவுற வாழ்க்கை**
**வீழும் உயிரென வீழ்ந்த பழமலர்**
**சூழும் சோலைச் சுற்றெலாம் பரவும்**
**பசித்தோர் வருங்கால் செல்வம் படைத்தோர்**
**பசியெனக் கொடுத்த பொங்குநல் உணவை**
**ஏற்றோர் வதனம் இயைந்த மலர்ச்சிபோல்**
**தோற்றிய தாமரை துலங்குநல் வாவியில்**
**உள்ளத் தூய்மையை உடலினிற் காட்டிக்**
**கள்ளம் அறுத்துக் கடந்தவர் போல**
**வெள்ளை அன்னம் விளங்கிட..........." (மாதவ.மே.15:1-16)**

என்று காட்சிப்படுத்துவர். மேற்சுட்டப்பட்ட பாடல் காலைக் காட்சியை நம் கண் முன் விரிக்கிறது. மீனவன் அவர்களின் சொல்லாட்சித் திறனுக்கு இப்பாடல் அடிகள் மிகச் சிறந்த சான்றாகிறது.

காப்பியம் ஒரே வகைச் செய்யுளால் அமைவதும் உண்டு. பலவகைச் செய்யுட்களால் அமைவதும் உண்டு. செய்யுளாக அமைவது மட்டுமின்றி இடையிடை உரைநடை மொழிச் சொற்களும் கலந்து வருவதாக அமைவதும் உண்டு இதனைத் தண்டியலங்காரம்

**"அவைதாம் ஒரு திறப் பாட்டினும் பலதிறப் பாட்டினும்**

**உரையும் பாவையும் விரவியும் வருமே"**[43]

என்கிறது.

மீனவன் காப்பியம் விருத்தப்பாக்களால் அமையப்பெற்று உணர்ச்சி மிகுந்த இடத்தில் வேறு சில பாக்களும் விரவி வந்துள்ளன. "இசையைப் போல் யாப்பு நம் ஆழ்ந்த உணர்ச்சிகளைப் பெருக்குவிக்கின்றது. சொற்களை ஒலிநயமுறையில் அமைப்பது அவற்றிற்கு நுட்பமான உணர்ச்சி ஆற்றலைத் தருதற்கும் புதிய குறிப்புப் பொருள்களை உணர்த்துதற்குமாகும். ஒலிநய முறையில் அமைக்குங்கால் சொற்கள் எங்ஙனம் அவ்வாற்றலைப் பெறுகிறது என்பதை உளவியலார் ஆய்ந்தறிதல் வேண்டும்"[44] என்பர் அட்சன்.

மீனவன் அவர்களின் சிற்றிலக்கியங்கள் யாப்பு வடிவில், இலக்கண முறைமைப்படி அமைந்துள்ள காரணத்தால், அதன் சொல்லாட்சிகள் அனைத்தும் தேர்ந்த ஒன்றாகவே அமையப் பெற்றுள.

ஒரு படைப்பின் வெற்றிக்கும், சிறப்பிற்கும் அடிப்படையில் பயன்படும் சொற்களும் காரணம் ஆகும், புதிய புதிய சொல்லாட்சிகளைப் படைத்துக் காட்டல், சொற்களை உரிய வேகத்தோடு தம் நடையில் அமைத்தல் ஆகியன சிறந்த

நடைக்கூறுகள் ஆகும். படைப்பாளிதாம் பயன்படுத்தும் சொற்களாலே படிப்போரை நிகழ்ச்சி நிகழ்ந்த காலத்திற்குக் கொண்டு செல்ல முடியும். புண்ணிய பாவையைப் போற்றிய காதையில் ஒரு மழைக் காட்சி. அழகிய நிலமகள் மனமகிழும்படி, கானகத்தில் உள்ள மயில்கள் அனைத்தும் ஆடுதற்கான மகிழ்வில் எழ, வானில் உள்ள மேகங்களில் இயற்கை அன்னையின் இடையில் காணும் மேகலை போல் மின்னல் எழுந்து, தன் பகை தீர்க்க எண்ணும் மன்னவனின் முரசொலி போல் இடி முழங்க, வான்மகள் முதிர்ந்த மகிழ்ச்சியில் ஆகாயத்திலிருந்து மழையைச் சொரிகிறாள். அம் மழை மலைமகளின் மேல் பட்டுத் தெறித்து, இல்லார்க்குதவும் வள்ளல் போல் அனைத்திடமும் சேர்கிறது. கழனியில் சேர்ந்து ஊரை மகிழ்விக்கும் இம்மழைக் காட்சியை,

**“புல்லிய மண்மகள் பொருந்துளம் மகிழ்ந்தனள்**
**கான்வாழ் மயிலெனக் கதிக்தெழு முகில்கள்**
**வான்மேற் கொள்ள வாய்த்தெழு மின்னல்**
**இயற்கைப் பாவையின் இடைமே கலைபோல்**
**தயங்கொளி உமிழத் தன்பகை அயர**
**முழங்கும் மன்னவன் முரசொலி எனவிடி**
**முழங்கிட வான்மகள் முதுகளி கொண்டே**
**பகர்விசும் பிரிந்து பாய்மழை நீத்தம்**
**தகை செறி மலைமகள் தன் மணி மார்பில்**
**அணிமுத் தாரமாய் அழகுடன் இலங்க**
**இல்லார்க் களிக்கும் இலைஎனா வள்ளல்**
**பல்புகழ் பாரிற் பரவிய பான்மை போல்**
**வெள்ளம் விரவி விரிநிலம் பரவிப்**

**பரதம் பயிலெழிற் பாவையைப் போல**
**அற்புதங் காட்டி அசைந்தொழிற் தோடி**
**இரும்பே ராசான் இயம்பிய மேலாம்**
**அரும்பொருள் என்ன அப்புனல் வாங்கி**
**உட்கொள் கால்கள் ஊரெலாம் ஓடி**
**நற்பயன் பெருக்கி நாளெலாம் காக்கும்**
**கழனியிற் சேரக் களமர் கிளிகொள**
**அழைபுனல் நிரம்பிய விளைவயற் பரப்பில்**
**கம்புள் தாரா கனைகுரல் நாரை**
**செம்போத் துள்ளான் சீர்கருங் காக்கை**
**அன்னச் சேவல் ஆர்த்தெழுந் தொலிசெய**
**பண்ணை உருவோர் பயிலிசை ஓதை**
**விண்ணில் நிறைந்து விளைந்தது இன்பே..... (மாதவ.மே.4:77-105)**

என்னும் பாடல் புலப்படுத்தும்.

இப்பாடலின் சொல்நயம் மழையில் நாமே நனைவது போன்ற உணர்வை ஏற்படுத்துகிறது. சொற்கள் படைப்பின் பல்வேறு சூழல்களைக் காட்ட வல்லவை. நிகழ்ச்சியின் காலச் சூழலை உணர்த்தும் வன்மை பெற்றவை, சொற்களின் தேர்வு, படைப்பாளியை இனங்கண்டு கொள்ள உதவும் நடையியல் கூறாக விளங்கும்.

மக்கள் பேசும் மொழியில் அமைந்துள்ள சில ஒலி, சொல் தொடர்களைத் தேர்ந்தெடுத்து முறைப்படுத்தித் தான் விரும்பும் கருத்தினை வெளிப்படுத்த ஒரு நிலையான தனக்குரிய ஒரு முறையை எழுத்தாளன் உருவாக்கிக் கொள்கின்றான். அம்முறையில், படிப்போருடைய உள்ளத்தில் உறவாடும் வாய்ப்பு எழுத்தாளனுக்குக் கிட்டுகிறது. இத்தகைய உள உணர்வு பெறவும் படிப்போர்

சுவைத்து இன்புறவும் சொற்களைத் தேர்ந்தெடுத்தாளுவதால் சமுதாய மொழியுறவும் பெறச் சொற்கள் பயன்படுகின்றன.

சொற்கள் எண்ணத்தின் கருவிகள், அவை எத்துணை அளவு கூர்மையாகவும், திட்பமாகவும், விளங்குகின்றனவோ அத்துணை அளவு எண்ணத்தின் வெளிப்பாடும் திட்பமாக அமையும். மீனவன் அவர்கள் தன் இலக்கியத்தில் கையாண்டுள்ள எளிய சொற்கள், செஞ்சொற்கள் ஆகிய அனைத்தும் திட்பமாக மட்டுமின்றி நுட்பமாகவும் பயன்படுத்தப்பட்டுள. மீனவனின் நடை சிறப்புற அவர் தம் சொல்லாட்சி இன்றியமையாததாய் அமைகிறது.

**உரைநடைத் திறன்:-**

எல்லா மொழிகளிலும், செய்யுள்நடை, உரைநடை என இருவேறு நடைக்கூறுகள் இருப்பதைக் காணலாம்."[45] உள்ளதை உள்ளவாறு எளிதாகக் கூறுவதும் எழுதுவதும் உரைநடையின் பாற்பட்டது ஆகும். படைப்பாளர் சிலர் செய்யுள் வகுப்பதில் வல்லவராகவும், சிலர் உரைநடையில் எழுதுவதில் வல்லவராகவும் திகழ்வர். மீனவன் அவர்கள் செய்யுள் உரைநடை என இரண்டு நடைக் கூறுகளிலும் சிறப்புடையவராய்த் திகழ்கிறார். அகநானூற்றிற்கு மீனவன் எழுதியுள்ள உரை அவர் தம் உரைநடைத் திறனுக்குச் சான்று பகரும்.

இருபதாம் நூற்றாண்டில், தமிழ் இலக்கிய மறுமலர்ச்சியின் வளர்ச்சிக் கூறுகளில் ஒன்று உரைநடைத் தமிழாகும். காலந்தோறும் மாறி வரும் வளர்ச்சிக்கு ஏற்பத் தமிழ் உரைநடையும் தன் இயல்பில் வளர்ச்சி சங்க இலக்கியத்தை உய்த்துணர வேண்டும் என்னும் ஆர்வங் கொண்ட அத்தனை பேரும் பயனடையும் வகையில், தம் உரையை அமைத்துள்ளார் சான்றாக களிற்றியானை நிரையில் ஒரு பாடல்,

**"அரக்கத்து அன்ன செந்நிலப் பெருவழி**

**காயா செம்மல் தாஅய், பல உடன்**

**ஈயல் மூதாய் வரிப்ப, பவளமொடு**

**மணிமிடைத்து அன்ன குன்றம் கவைஇய**

**அம் காட்டு ஆர்இடை, மடப்பினை தழீஇ,**

**திரிமருப்பு இரலை புல் அருந்து உகள**

**........................................................................**

**........................................................................**

**அவர்திறம் செல்வேன் கண்டனென் யானே**

**விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுக**

**கல்பொருது இரங்கும் பல்ஆர் நேமிக்**

**கார்மழை முழக்கு இசை கடுக்கும்**

**முளைநல் ஊரன், புனை நெடுந் தேரே" (அக.களி.14)**

இப்பாடலுக்கு மீனவன் அவர்கள்

பாண! குன்று சூழ்ந்த காட்டில் செவ்வரக்குப் போன்று சிவந்த நிலத்தில் காயாவின் பூக்கள் பரவியும், இந்திரகோபப் பூச்சிகள் ஊர்ந்து செல்லும் காட்சி, பவளத்தோடு நீலமணியை வைத்தாற்போல இருக்கவும், பெண் மானைத் தழுவிய ஆண்மான் தாவவும், பசுக்கள் பால்சொரியத் தம் கன்றுகளை நினைந்தபடிக் குரல் எழுப்பிக் கொண்டு தொழுவத்திற்குப் போகவும் ஆன மாலைப் பொழுதில் தலைவன் வாராததால் ஏங்கினாள் தலைவி. இம்மாலையில் அவர் வருவார் எனக் கூறிய பாணனே! அவர் வாராததால் தான் எங்ஙனம் உய்வேன் என என்னைப் பார்த்துத் தலைவி கேட்டதற்குப் பதில் கூறமாட்டாமல், யாழை வாசித்துக் கொண்டே அப்புறம் போய் தலைவனை அழைத்து வரப் புறப்பட்டேன். அங்ஙனம் புறப்படுகையில் இடியோசை போல உருளைகள் கற்களில் மோதுமாறு விரைந்து

குதிரையால் இழுத்து வரும் தலைவனது தேரினைக் கண்டேன் என உரை எழுதுவர்.

இவ்வுரைநடையைப் படிக்கும் போது அகநானூற்றுப் பாடலுக்கான உரை தானா? என்ற ஐயம் தோன்றும் அளவிற்குத் தற்காலச் சிறுகதை ஒன்றைப் படிப்பது போன்ற உணர்வைத் தருமாறு மிக எளிமையாய் உரை எழுதியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**மீனவனின் நடையியல் கொள்கை:-**

"படைப்போன் மொழிக் கூறுகள் சிலவற்றைத் திட்டமிட்டுப் படைப்பிற்கு அழகூட்டி முழுமை பெறவும், தனித்தன்மையைத் தோற்றுவிக்கவும் உருவாக்கும் உத்திகளைத் திட்டப்பாங்குகள் எனலாம். அத்திட்டப்பாங்குகளே அவன் நடைத்திறத்தைத் தெரிவிப்பன"[46] என்பார் ஆலிடே.

கூற வந்த செய்தியை மனதிலே சரியாகக் கட்டி வைத்துச் சிறந்த சொல்லாட்சி, ஒலிநயக் கூறுகள், உணர்ச்சி ஆகியவற்றைச் சரிவரக் கலந்து படைக்கும் முறையில் மீனவனின் நடைத்திறன் அமைந்துள்ளது. அவர்தம் இலக்கியங்களையும் உரைநடையினையும் படிக்குங்கால் மேற்சுட்டப் பட்ட மூன்றும் அவர்தம் நடையியல் கொள்கையாய் அமைந்திருப்பதை அறிய முடிகிறது.

உணர்த்தும் திறனாகிய நடை, ஒருவரைப் போல் மற்றொருவருக்கு அமைவதில்லை. இதற்கு அவரவர் சார்ந்த பழக்கவழக்கங்களும் காரணமாய் அமைகின்றன. அவர் வளர்ந்த சூழல், கற்ற நூல்கள், பழகிய பழக்கம், முதலியவற்றையும் நடை புலப்படுத்துகின்றது. எழுத்தாளனின் மொழியும் நடையும் அவர்தம் தனித்த பண்புகள் ஆகும். ஆசிரியர் உள்ளத்திற்குத் தந்த பழக்கம் நடையின் சிறப்பைத் தீர்மானிக்கிறது. மீனவன் அவர்களின் நடைத்திறன் போற்றுதற்குரிய தனி நடையாய்த் திகழ்கிறது. இளமை முதல் கைக்குத் தந்த

பழக்கம், கையை ஆளும் மனத்தின் செம்மை, வேகம் வன்மை, மென்மை முதலிய பழக்கங்கள் இதன் காரணமாகும்.

**"எழுத்தசைகள் சீர்தளைகள் அடி தொடைகள் சிதையா**
**திருக்க வேண்டும் அப்பா**
**ஈரைம் பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்**
**பினிய சொற்கமைய வேண்டும்**
**அழுத்தமிகு குறளினுக் கொப்பாகவே பொருள்**
**அடக்கமும் இருக்க வேண்டும்**
**அன்பான பாவினம் இசைந்து வரல்வேண்டும் முன்**
**அலங்காரம் உற்ற துறையில்**
**பழுத்துளம் உவந்தோசை உந்து வரல் வேண்டும்**
**படிக்கும் இசை கூடல் வேண்டும்**
**பாங்காக இன்னவை பொருந்திடச் சொற்கவிதை**
**பாடிற் சிறப்பென்பர் காண்"**[47]

என்பதில் படைத்தவனாகிய அப்பனே! எழுத்து, அசை, சீர், தளை, அடி தொடைகள் யாவும் பாடலில் சிதையாதிருக்க வேண்டும். பத்துப் பொருத்தங்களொடு இனிய சொற்களமைந்த மதுரமாய்ப் பாடல் இலங்க வேண்டும். அழுத்தம் வாய்ந்த குறளினைப் போல் பாடலின் பொருளில் அடக்கமும் இருத்தல் வேண்டும்; பாவினம் இசைந்து வரல் வேண்டும்; சரியான துறையினால், அணியினால் பாடலைப் படிக்கும் போது உவகை பெருக்கெடுக்க வேண்டும்; படிக்கும் போது இசை நயமும் கூற வேண்டும் இத்தனை பான்மையும் அமையும்படிப் பாடும் கவிதையே சிறப்பிற்குரியதாகும் என்றுரைக்கிறது குமரேசசதகம். மேற்சுட்டிய அனைத்துக் கூறுகளும் மீனவனின் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை

 நடை என்பது அடிப்படையில் படைப்பாளரின் தனிப்பண்பைக் குறிப்பதாகும். ஒழுங்குபட்ட ஒலிநயம், சொற்களின் செறிவாற்றல், செம்மையான உவமைகள், நுவல் பொருளின் உணர்ச்சி ஆகியவற்றின் மூலம் உணர் திறத்தாலும், உணர்த்தும் திறத்தாலும் மீனவன் அவர்களின் இலக்கியங்கள் செம்மையான வடிவம் பெற்றுள்ளன.

 கேட்டறியும் ஆற்றல், எடுத்துரைக்கும் ஆற்றல் ஆகியவற்றால் கற்றோர் சிந்தையை விரைந்து சேரும் எளிய நடை, உள்வாங்கி உணரும் செஞ்சொல் நடை என இருவித மொழிநடையை மீனவன் கையாண்டுள்ளார்.

 நகை, அழுகை, உவகை போன்ற உணர்ச்சிக் கூறுகள் மீனவனின் காப்பியத்தில் சிறப்புறப் பயின்று வந்துள்ளன. மேலும் புதிய பல உவமைகளைக் கையாண்டுள்ளமை நடைசிறக்கப் பெரிதும் உதவுகிறது.

 மரபுச் செய்யுளின் கூறான எதுகை, மோனை முதலிய தொடைநயங்களை அதிகம் கொண்டு ஒலிநயக் கூறுகள் மிக்கதாய் மீனவனின் செய்யுள்நடை அமைந்துள்ளது.

 கவிஞர் மீனவன் செய்யுள் நடையில் மட்டுமின்றி உரைநடை எழுதுவதிலும் சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றார். மக்களைச் சென்றடையும் எளியநடை, சிறந்த சொல்லாட்சி, ஒலிநயக்கூறுகள், உணர்ச்சி மிக்கதான இலக்கிய நடை போன்றவை இவர்தம் இலக்கிய நடைத்திறனாய் இலங்குகின்றன.

**சான்றெண் விளக்கம்**


1. முனைவர்.இ.சுந்தரமூர்த்தி, நடையியல் சிந்தனைகள், ப.01
2. தமிழ்ப் பேரகராதி, தொகுதி. 4, ப.245
3. தொல்காப்பியர், தொல்.செய்யுளியல் நூ.1429
4. மேலது நூ-1365
5. மேலது ப.420
6. தண்டியலங்காரம் ப.8
7. நன்னூல் ப.4
8. டாக்டர்.ச.வே.சுப்பிரமணியன் தமிழ்இலக்கண நூல்கள் யாப்பருங்கல விருத்தியுரை, ஒழிபியல், ப.379
9. டாக்டர்.ச.வே.சுப்பிரமணியன் தமிழ்இலக்கண நூல்கள் யாப்பருங்கலம்.1
10. டாக்டர்.ச.வே.சுப்பிரமணியன் தமிழ்இலக்கண நூல்கள்- வீரசோழியம்-149
11. திருக்குறள் 712
12. ரெனிவெல்லாக், ஆஸ்டின் வாரன், இலக்கியக்கொள்கை, ப.262
13. டாக்டர்.தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல் ப.183
14. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.201
15. இ.சுந்தரமூர்த்தி, நடையியல் ஓர் அறிமுகம் ப.15
16. டாக்டர்.தா.எ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல் ப.183
17. மா.இராமலிங்கம், புதிய உரைநடை, ப.116
18. முனைவர்.இ.சுந்தரமூர்த்தி, நடையியல் சிந்தனைகள் ப.22
19. டாக்டர்.தா.எ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல் ப.183
20. மேலது. ப.22

21. மேலது ப.1

22. தொல்காப்பியர், தொல்காப்பியம், உரிச்சொல், ப.945

23. திருக்குறள்:650

24. திருக்குறள்:641

25. சு.ஆனந்தன். தமிழிலக்கிய வரலாறு ப.89

26. ஜெ.நீதிவாணன், நடையியல் ப.64

27. முனைவர்.இ.சுந்தரமூர்த்தி, நடையில் சிந்தனைகள், ப.54

28. தொல்காப்பியம் (பேராசிரியர் உரை) செய்யுளியல் 1

29. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு ப:164

30. டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல் ப.223

31. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.78

32. மேலது ப.175

33. டாக்டர்தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல் ப.215

34. தொல்காப்பியம் நூற்:1222

35. மேலது நூற்:1223

36. சீத்தலைச் சாத்தனார், மணிமேகலை, ப.41

37. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.156

38. மேலது ப.161

39. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல். ப.82

40. C.T. Winchestor, Some principles of literay Criticism 1950 PP 198-99

41. தா.ஏ. ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல் ப.264-265

42. It is Not therefore, sufticient, States Joseph Addison "that the

language of epic poem be perspicuous. unless it be also subliance To this endit ought to deviate from the common forms and ordinary Pharases of speech" Milton criticism Edited by James Thrope, 2nd end p.53

43. தண்டி.111

44. Quoted by W.Hudson Local.cit p.74

45. E.L Epstein, Language and style p.21

46. M.A.k. Halliday. "Linguistics the function and Literary style" Litearary style a symposiom p.339.

47. இளங்கோ.ச.சு இலக்கியக் கோலங்கள் ப.24

## முடிவுரை

இருபதாம் நூற்றாண்டில் தமிழன்னைக்குத் தம் படைப்புகளால் மணி மகுடம் சூட்டிய மரபுக்கவிஞர்களுள் குறிப்பிடத்தக்கவர் கவிஞர் மீனவன் ஆவார். இவர் 1940-ஆம் ஆண்டு மே மாதம் நான்காம் நாள் சிவகங்கை மாவட்டத்தில் உள்ள கண்டரமாணிக்கம் என்னும் ஊரில் வணிகத்தில் சிறந்து விளங்கிய நகரத்தார் குடியில் பிறந்தார். மீனாட்சி சுந்தரம் என்னும் இயற்பெயர் கொண்ட மீனவன் பள்ளியில் படிக்கும் காலம்தொட்டுக் கவிதை எழுதுவதில் வல்லவராய் விளங்கினார். கல்லூரிப் படிப்பைக் கருத்துடன் நிறைவு செய்த அவர், புதுவயல் இராமநாதன் செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றினார். கவிஞர் மீனவன் அவர்கள் தமது முப்பத்து நான்கு ஆண்டு கால ஆசிரியப் பணியின் செம்மை காரணமாக 1998-ஆம் ஆண்டு நல்லாசிரியர் விருது பெற்றார். பன்மொழிப் புலமை கொண்ட மீனவன், வ.சுப.மாணிக்கனார், அமிர்தலிங்கனார், தேசிகனார் போன்ற அறிஞர்களிடம் தோழமைகொண்டு தமது தமிழ்ப் பணியை இடையறாது ஆற்றிய பெருமைக்குரியவராய்த் திகழ்கின்றார்.

மீனவன் அவர்கள் மாதவமேகலை, கம்பர் பிள்ளைத்தமிழ், கம்பனடிப் பொடி பிள்ளைத்தமிழ், அரசர் முத்தையவேள் புகழ்மாலை, அலர்மேல் மங்கை அந்தாதி, நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை, போன்ற பல்வேறு நூல்களை எழுதித் தனித்துவம் மிக்க கவிஞராய் விளங்குகின்றார். **‘கவிஞர்கோ’, ‘கவிமாமணி’ ,’நற்றமிழ் நாவலர்’, ‘காப்பியக் கவிஞர்’** என்பன போன்ற பல்வேறு விருதுகளைப் பெற்ற கவிஞர் இன்றளவும் தமிழுக்குத் தொண்டாற்றி வருவது குறிப்பிடத்தக்கது.

காப்பியக் கவிஞர் எனப் போற்றப்படும் மீனவனின் புகழ் பெற்ற படைப்பாகத் திகழ்வது மாதவமேகலை என்னும் காப்பியமாகும். சிலப்பதிகாரம்,

மணிமேகலையைத் தொடர்ந்து கதையமைப்பால் வளர் காப்பியம் மாதவமேகலை. மாதவமேகலை முப்பது காதைகளையும், இரண்டாயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தொரு அடிகளையும் கொண்டு அமைந்துள்ளது. காப்பியத்தின் முதற்பகுதியான பதிகம் மரபு மாறாத் தன்மையினையும் வாழ்த்துப் பாயிரம், தமிழ் மொழியின் சிறப்பினைக் கூறும் புதுமையினையும் பெற்றுத்திகழ்கிறது. காப்பியப்பெயராகிய மாதவமேகலை மாதவனும் மேகலையும் மாதவம் செய்த மேகலை, மாதவி பெற்ற மேகலை என்னும் மூன்று கோணங்களில் பொருத்தமுற அமைந்துள்ளது. மாதவமேகலை, காப்பியக் கதையோட்டத்தை உயிர்ப்புடன் நகர்த்தக்கூடிய பல்வேறு கதை மாந்தர்களைக் கொண்டு ஆசிரிய விருத்தத்தால் இயற்றப்பட்டுள்ளது. காப்பிய இலக்கணத்தின் தன்மையைப் பெருமளவு கொண்டு ஒரு முழுமை பெற்ற காப்பியமாய் இது விளங்குகிறது. மாதவமேகலை சிலம்பினை முதல் நூலாகவும் மணிமேகலையை வழி நூலாகவும் கொண்டு முக்காப்பியம் என்னும் பெயர் பெறும் சிறப்பினைக் கொண்டமைந்துள்ளது. இன்றைய காலச் சூழலுக்கு ஏற்ற, சமூக அறங்களை எடுத்துச் சொல்லும் நூலாய் **‘பசியொழிப்பு’** என்னும் அறத்தைப் பாவிகமாகக் கொண்டு அமைந்துள்ளது.

தமிழ் மொழியிலுள்ள இலக்கியங்களைப் பேரிலக்கியம், சிற்றிலக்கியம் என்று வகைப்படுத்தும் மரபு உள்ளது. பாடல் எண்ணிக்கை அல்லது அடிகளின் எண்ணிக்கை சுருக்கமாக அமைவது சிற்றிலக்கியம் ஆகும். பிரபந்தத்தீபிகை, பிரபந்தத்திரட்டு, பிரபந்த மரபியல் போன்ற பாட்டியல் நூல்களின் வாயிலாகச் சிற்றிலக்கியம் 96 வகை எனக் கண்டறியப்பட்டாலும் இன்று சிற்றிலக்கியங்கள் பெருகி வளர்ந்துள்ளன. கம்பர் பிள்ளைத்தமிழ், கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ், அரசர் முத்தையவேள் புகழ்மாலை, நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை, அலர்மேல் மங்கை அந்தாதி, ஆகியவை மீனவன் அவர்கள் பாடிய

சிற்றிலக்கியங்கள் ஆகும். இவ்விலக்கியங்கள் பருவங்களின் வரையறை, பருவ முறை வைப்பில் காலவரையறை, யாப்பமைதி என்னும் கூறுகளால் ஆராயப்பட்டுள. மீனவனின் இரு பிள்ளைத்தமிழ் நூல்களிலும் பருவ வரையரைகள் இலக்கண மரபுப்படியும் காலத்திற்கு இயைந்தவாறும் அமைந்துள. கம்பன் பிள்ளைத்தமிழை முழுமையான இலக்கண முறைமையோடு பாடிய மீனவன், கம்பனடிப்பொடி பிள்ளைத்தமிழில் காலப் புதுமையைப் புகுத்தியுள்ளார். காக்கும் கடவுளராகத் தமிழறிந்த சான்றோர்களை உரைக்கின்றார். கம்பன் பிள்ளைத்தமிழ், கம்பனடிப்பொடி பிள்ளைத்தமிழ் ஆகிய இரண்டும் ஆசிரிய விருத்தங்களால் பாடப்பெற்றுள. இராமனது வரலாற்றை உலகு புகழ் கவியாக்கிய கம்பனின் பெருமையைக் கம்பர் பிள்ளைத்தமிழும் கம்பனின் பெருமையை உலகறியச் செய்த சா.கணேசனாரின் பெருமையைக் கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழும் பொருண்மைகளாய்ப் பெற்றுள்ளன. கம்பராமயணத்தின் எண்ணற்ற காட்சிகள் இவ்விரு இலக்கியங்களிலும் அழகோவியமாய்க் காணப்படுகின்றன.

அரசர் முத்தையவேள் அவர்களின் வரலாறு இயம்பும் நூல் அரசர் முத்தையவேள் புகழ்மாலை. இந்நூல் செட்டிநாட்டின் சிறப்பு, அண்ணாமலை அரசரின் தொண்டுகள், அரசர் முத்தையவேள் பிறப்பு, கல்வி, பணிகள், பண்பு நலன்கள், மனையறம், மணிவிழாச்சிறப்பு, புகழ், பெருமை என்னும் கருத்து மலர்களைக் கொண்டு கோர்க்கப்பட்டுள்ளது. கோவிலூர் திருமடத்தில் 17 ஆண்டுகள் அருட்பணி புரிந்த நாச்சியப்ப சுவாமிகள் குறித்து நூறு பாக்களால் ஆன அருள்மாலை நாச்சியப்ப சுவாமிகளின் சதமணி மாலை ஆகும். இந்நூல் சுவாமிகளின் அருட்திறத்தை அழகுறக்காட்டும் ஒப்பற்ற நூலாய் விளங்குகிறது. கலைமகளின் அருளாசி பெற்ற கவிஞர் மீனவன், அலைமகளாம் அலர் மேல் மங்கையின் மீது நூறு பாக்களால் அந்தம் ஆதியாய் தொடுத்த நூல் அலர்மேல்

மங்கை அந்தாதி. இந்நூலில் திருமகளின் மேன்மை இருபது பாடல்களில் புலப்படுத்தப்பட்டுள்ளது. காப்பியம், சிற்றிலக்கியங்கள் எனப் படைத்துப் புகழ்பெற்ற கவிஞர் மீனவன் அவர்கள் அடுத்து நிகழ்த்திய பணி உரை எழுதுதல். பண்டை இலக்கியமாகிய அகநானூற்றிற்கு எளிய உரை காணும் முயற்சியில் விளைந்தது மீனவன் அவர்களின் அகநானூற்று உரை.

தமிழில் கிடைத்த முதல் உரைநூலாகக் கருதப்படுவது இறையனார் களவியல் உரை. ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற இவ்வுரையைத் தொடர்ந்து எண்ணற்ற உரை நூல்கள் தோற்றம் பெற்றன. தமிழின் மொழி வரலாறு, பண்பாடு மற்றும் சமூக வரலாறு முதலியவற்றை அறிய உரைகள் துணை செய்கின்றன. சரியான உரைகள் சமூக இயல்பைக் காட்ட முற்படுவதால் உரைகள் முக்கியத்துவம் பெறுகின்றன. பழம்பெரும் உரைகளுக்கே, உரை காணும் நிலை ஏற்பட்டதால், எளிய உரையின் தேவை கருதி, எட்டுத்தொகை நூல்களுக்கு எளிய உரைகள் தோற்றம் பெறலாயின. அகநானூற்றிற்கு 1918-இல் முதல் உரை வெளியானது. 1918-ஆம் ஆண்டைத் தொடர்ந்து எண்ணற்ற உரைகள் 2003-வரை தோன்றிக் கொண்டே இருந்தன. மீனவன் அவர்களின் உரை 2003-ஆம் ஆண்டு கோவிலூர் மடாலயப் பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டது. பாடலுக்கு முன் பகுதி, (கூற்று), கொண்டு கூட்டு, தெளிவுரை, அருஞ்சொற்பொருள், சிறப்புக் குறிப்பு என்னும் வரிசையில் மீனவனின் உரைநெறி அமைந்துள்ளது. சங்க இலக்கியத்தின் மேன்மையைத் தமிழைப் பாடமாக எடுத்துப் படிக்காதவர் கூடப் புரிந்து கொள்ளும் விதமாய்க் கவிஞர் மீனவனின் உரை அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. மேலும் கோவிலூர் ஆதினம் வெளியிட்ட வேதாந்த நூல்களான கீதாசாரத் தாலாட்டு, மகாராஜா துறவு, வேதாந்த சூடாமணி, ஈசுவர கீதை ஆகிய நூல்களுக்கும் இவர்

உரை எழுதியுள்ளார். இவ்உரைகள் வேதாந்த, சித்தாந்த அறிவுடன் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

அருஞ்சொற்களுக்குப் பொருளுரைத்து குறிப்புத்தந்து, காணப்படும் வளர்ச்சிக் கூறை உள்வாங்கி மீனவன் மிகத் தெளிந்த உரைகளை தமிழுலகுக்கு நல்கியுள்ளார். சமயம் சார்ந்த வேதாந்த நூல்களுக்கு உரை செய்த மீனவன் அவர்களின் பணி தமிழ் இலக்கிய உலகில் இன்றியமையா இடத்தைப் பெற்றுள்ளது.

மீனவன் தம் படைப்புகளில், கற்றோர் சிந்தையை எளிதில் சேரும் எளிய நடை, சற்று உள்வாங்கி உணரும் செஞ்சொல் நடை என இருவித நடைக்கூறுகள் காணப்பெறுகின்றன. வண்ணம் எனப்படும் ஒலியின்ப இசைநயம் இவரது கவிதைகளில் மேம்பட்டுள்ளது. தம் உள்ளத்தில் உள்ள உணர்ச்சிகளைத் தக்க சொற்களால் படிப்பவரது மனதில் எய்துமாறு செய்யுள் அமைத்தல் இவர்தம் நடைநலனாக விளங்குகிறது. புதிய பல உவமைகளைக் கையாளுவதில் மீனவன் வல்லவராய் விளங்குகிறார். மாதவமேகலையில் கவிஞர் தொண்ணூற்றாறு உவமைகளைக் கையாண்டுள்ளார். கவிஞர் மீனவனின் ஒவ்வொரு படைப்பும், அவர் மரபுக்கவிஞர் என்பதை நன்கு புலப்படுத்தி நிற்கிறது.

**மேலாய்வுக்களங்கள்:**

1. மீனவனின் சிற்றிலக்கியங்களைப் பிற சிற்றிலக்கிய நூல்களோடு ஒப்பிட்டுப் பார்க்க இயலும்.
2. பாவேந்தர் பாரதிதாசனின் மணிமேகலை வெண்பாவோடு மீனவனின் மாதவமேகலையை ஒப்பிட்டு நோக்கின் சமகாலப் புலவர்களின் கருத்தியல்களை அறிய இயலும்.
3. இருபதாம்நூற்றாண்டுக் காப்பியங்களோடு ஒப்பிட்டு ஆய்வு செய்ய இயலும்.

## துணைநூற்பட்டியல்

### முதன்மைத் தரவுகள்


1. மீனவன், நா - அரசர் முத்தையவேள் புகழ்மாலை,
இராஜாசர் அண்ணாமலை செட்டியார்
நினைவு அறக்கட்டளை,
இராணி சீதை மன்றம்,
603 அண்ணாசாலை,
சென்னை-6
2011

2. மேலது - அலர்மேல் மங்கை அந்தாதி,
காப்பியப்பதிப்பகம்,
காரைக்குடி,
2007

3. மேலது - கம்பர் பிள்ளைத் தமிழ்
காப்பியப்பதிப்பகம்,
காரைக்குடி,
இரண்டாம்பதிப்பு- 2008

4. மேலது - கம்பன் அடிப்பொடி பிள்ளைத்தமிழ்,
காப்பியப்பதிப்பகம்,
காரைக்குடி,
2008

5. மீனவன்,நா(உ_.ஆ) - அகநானூறு,
களிற்றுயானை நிரை, முதல் பகுதி
மக்கள் பதிப்பு,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்.
2004

6. மேலது - அகநானூறு,
மணிமிடை பவளம், இரண்டாம் பகுதி,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்.
2004

7. மேலது - அகநானூறு,
நித்திலக் கோவை, மூன்றாம் பகுதி,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்.
2004

8. மீனவன் நா. - நாச்சியப்பன் சுவாமிகள் சதமணிமாலை,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்.
2000

9. மீனவன்,நா,(உ.ஆ) - கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள்,
கோவிலூர் ஆதீனம்,
கோவிலூர்.

## முதன்மைச் சான்றாதாரங்கள்


1. அண்ணாமலை,பழ - செட்டிநாடு ஊரும் பேரும்
வானதி பதிப்பகம்,
23, தீனதயாளு தெரு,
சென்னை - 600 017
2005

2. அரவிந்தன், மு.வை - உரையாசிரியர்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை,
சென்னை
மூன்றாம் பதிப்பு
2014

3. அறவாணன், க.ப - இலக்கிய உரசல்கள்,
பச்சைப் பசேல்,
சென்னை.
1978

4. மேலது - கவிதையின் உயிர், உள்ளம்,
பாரி நிலையம்,
சென்னை.
1976

5. அறவேந்தன், இரா - இலக்கியக் கருத்தியலாக்கத்தில்
நெறியும் பிறழ்வும்,
தாயறம்,
திருச்சிராப்பள்ளி.
2005

6. ஆனந்தன்.சு - தமிழ் இலக்கிய வரலாறு,
கண்மணி பதிப்பகம்,
திருச்சி.
இரண்டாம் பதிப்பு,
சூலை - 2002

7. இளங்கோ ச.சு - இலக்கியக் கோலங்கள்,
பாரிநிலையம்,
சென்னை.
1981

8. இரபிசிங் ம.செ - அண்ணாவின் மொழிநடை,
சாமுவேல் பதிப்பகம்,
சென்னை.
1980

9. இராமச்சந்திரன்.க - தமிழர் கவிதையின் புதிய போக்குகள்,
பாவை பப்ளிகேசன்ஸ்,
143, ஜானி ஜானகான் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை - 600 014
2010

10. இராமச்சந்திரன்.நா - துடியான சாமிகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்,
சென்னை.
2015

11. இராமலிங்கம்.மா - இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்,
தமிழ்ப் புத்தகாலயம்
சென்னை - 5
1973

12. மேலது - நாவல் இலக்கியம்,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,
1999

13. மேலது - புதிய உரைநடை
தமிழ்ப் புத்தகாலயம்
சென்னை - 5
1982

14. இராஜசேகரன்.க - காப்பியத் துளிகள்,
சீதை பதிப்பகம்,
சென்னை,
2008

15. ஔவையார் - ஔவையார் தனிப்பாடல்கள்
முல்லை நிலையம்
சென்னை,
2000

16. கண்ணன். கோ - பண்டைத் தமிழரின் ஒலி
உணர்வும், இசை உணர்வும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்,
சென்னை.
1994

17. கவிதா.மூ - இலக்கியப் பயன்கள்
காவ்யா பதிப்பகம்,
சென்னை - 24
2006

18. குழந்தைவேலு.அர - பாரதி - திரு.வி.க நடைச்சிந்தனை,
தமிழகம்,
கோயமுத்தூர்
1984

19. குருசாமி.ச - நச்சினார்க்கினியர் உரைநெறி,
இராணி பதிப்பகம்,
சென்னை.
2008

20. கைலாசபதி.க - கவிதை நயம்,
பாட்டாளிகள் வெளியீடு,
சென்னை,
இரண்டாம் பதிப்பு
1976

21. சக்திவேல்.சு - நூற்றாண்டுத் தமிழ் உரைநடை,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
1988

22. சண்முகம் செ.வை - மொழி ஆய்வு,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
2005

23. சந்திரசேகர், இரா.
சரவணன்.ப - சிலப்பதிகாரத்தில்
மெய்ப்பாடுகள்,
ராமையா பதிப்பகம்,
சென்னை.
2007

24. சயீத் நீடூர் அ.மு - சிந்தனைச் செல்வம்,
வ.ஃ.பா வெளியீட்டகம்,
மயிலாடுதுறை,
2005

25. சிங்காரவேலன்.செ - கவிதை இன்பம்,
நறுமலர் பதிப்பகம்,
பாரிநிலையம்,
சென்னை.
1983

26. சீத்தலைச்சாத்தனார் - மணிமேகலை
கழக வெளியீடு,
சென்னை
1955

27. சீனிவாசன்.ரா - சங்க இலக்கியத்தில் உவமைகள்,
அணியகம்,
சென்னை.
1990

28. சுந்தரமூர்த்தி.இ - தமிழின் அணி இலக்கணநூல்கள்,
தமிழாய்வுத் தொகுதி,
சென்னை பப்ளிகேசன்ஸ்
சென்னை
1973

29. மேலது - நடையியல் சிந்தனைகள்,
என்.சி.பி.எச். வெளியீடு,
சென்னை.
1994

30. சுப்பிரமணியன். ச.வே - தமிழ் இலக்கண நூல்கள்,
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்.
நான்காம் பதிப்பு
2004

31. மேலது - தமிழ் இலக்கியக் கொள்கை-9
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
1987

32. மேலது - தமிழ் இலக்கிய வகையும்,வடிவும்,
தமிழ்ப்பதிப்பகம்,
சென்னை,
1984

33. மேலது - தொல்காப்பியம் தெளிவுரை
மணிவாசகர் நூலகம்
சென்னை
1986

34. சுப்பிரமணியன் வி.அய் - இலக்கியத் திறனாய்வு இசங்கள் கொள்கைகள்,
பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை.
ஐந்தாம் பதிப்பு
2007

35. சுபாசு சந்திரபோசு - கவியோகி சுத்தானந்த பாரதியர்
சுபாலிகா பதிப்பகம்
திருச்சிராப்பள்ளி
1998

36. சோம.லெ - செட்டிநாடும் செந்தமிழும்,
மணிவாசகர் பதிப்பகம்
பாரிமுனை
சென்னை - 108
2001

37 ஞானமூர்த்தி - இலக்கியத் திறனாய்வியல்,
யாழ் வெளியீடு,
சென்னை.
இரண்டாம் பதிப்பு
2002

38. தட்சிணாமூர்த்தி .அ - தமிழர் நாகரிகமும், பண்பாடும்
யாழ் வெளியீடு,
சென்னை.
2005

39. தண்டியாசிரியர் - தண்டியலங்காரம்,
திருநெல்வேலி,
தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
21ஆம் பதிப்பு
2004

40. தமிழண்ணல் - புதிய நோக்கில் தமிழ் இலக்கிய
வரலாறு,
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை
2005

41. தாக்கர்.கலா.கே - கல்கியும் முன்ஷியும்
மெட்ராஸ் பல்கலைக்கழக வெளியிடு
சென்னை
1983

42. துரைராஜ்.சி - படைப்பும் பதிப்பும்,
சிவ சிவ பதிப்பகம்,
கும்பகோணம்,
2007

43. நாஞ்சில் நாடன் - சிற்றிலக்கியங்கள்,
தமிழினி வெளியீடு,
2013

44. நீதிவாணன்.ஜெ. (ஆ) - நடையியல்
மணிவாசகர் பதிப்பகம்
1983

45. பஞ்சாங்கம்.க - சிலப்பதிகாரத் திறனாய்வுகள்,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்.
2002

46. பவணந்திமுனிவர் - நன்னூல்
பழனியப்பா பிரதர்ஸ்
கோனார் மாளிகை
சென்னை -14
2003

47. பூரணசந்திரன்.க - தமிழ் இலக்கியத் திறனாய்வு
வரலாறு,
தமிழ்ப்பல்கலைக்கழகம்.
தஞ்சாவூர்.
2007

48. பேராசிரியர் (உரை) - தொல்காப்பியம் பொருளதிகாரம்
பாரி நிலையம்,
184, பிராட்வே,
சென்னை - 600 108
பன்னிரெண்டாம் பதிப்பு
1972

50. மணவாளன்.அ.அ - இலக்கிய ஒப்பாய்வுக்காப்பியங்கள்
என்.சி.பி.எச் வெளியீடு
சென்னை - 98
2005

51. மறைமலை.சி.இ - இலக்கியமும், சமூகவியலும்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 01
1991

52. மாணிக்கம்.அ - திருக்குறள் தெளிவுரை
தென்றல் நிலையம்
சிதம்பரம்
இருபதாம் பதிப்பு
2011

53. மாணிக்கனார் வ.சுப. - இரட்டைக் காப்பியங்கள்
காப்பியப் பார்வை,
ராமையா பதிப்பகம்,
சென்னை.
2010

54. மேலது - உரை நெறிகள்
தமிழியல் ஓர் அக நோக்கு
தா.ஏ.ஞானமூர்த்தி
மணிவிழா மலர்
2010

55. மேலது - காப்பியப் பார்வை,
ராமையா பதிப்பகம்,
சென்னை.
2010

56. மேலது - தொல்காப்பியத் திறன்
மாணிவாசகர் நூலகம்
சிதம்பரம்,
1978

57. மார்க்ஸ்.அ. - சிற்றிலக்கியங்கள் சில குறிப்புகள்,
புலம் வெளியீடு,
சென்னை.
2009

58. மீனாட்சி சுந்தரனார்.க - சிலம்பில் துணைப்பாத்திரங்கள்,
சர்வோதயா இலக்கியப் பண்ணை
மதுரை
1981

59. முத்துச் சண்முகன்.சி - தமிழ் இலக்கியக் கோட்பாடுகள்,
முல்லை நிலையம்,
சென்னை.
2003

60. முத்தையா.கரு - ஜெயகாந்தன் நாவல்களில்
பாத்திரப்படைப்பு,
முத்துமீனாள் பதிப்பகம்,
தேவகோட்டை
1980

61. மோகன் இரா.
சொக்கலிங்கம்.ந - உரை மரபுகள்
மெய்யப்பன் பதிப்பகம்,
சென்னை.
2011

62. வரதராசனார்.மு - தமிழ் இலக்கிய வரலாறு,
சாகித்திய அகாதமி,
இரவீந்திர பவன்,
35, பெரோஸ்ஷாசபை
புதுதில்லி 110001
1972

63. ஜானகி. இரா - சங்க இலக்கியப் பதிப்புரைகள்,
(தொகுப்பு நூல்)
பாரதி புத்தகாலயம்,
சென்னை.
2010

## அகராதிகள், கலைக்களஞ்சியங்கள்


1. கதிரை வேற்பிள்ளை, நா., - தமிழ்மொழி அகராதி
ஆசியன் எஜிகேசுனல் சர்வீஸ்,
புதுதில்லி,
ஆறாம் பதிப்பு
1968

2. கழகப்புலவர் குழுவினர் - கழகத் தமிழகராதி,
கழக வெளியீடு,
சென்னை.
2010

3. கழகப்புலவர் குழுவினர் - கலைக்களஞ்சியம்,
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை.
1954

4. கழகப்புலவர் குழுவினர் - மதுரை தமிழ்ப் பேரகராதி
முதல் பாகம்,
சந்தியா பதிப்பகம்,
சென்னை.
2004

5. கழகப்புலவர் குழுவினர் - க்ரியாவின் தற்காலத் தமிழகராதி,
க்ரியா பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு
2006

## ஆங்கில நூல்கள்


1. Aber Crombie, L., - L. Principles of Literary Criticism,
Yora and Co.,
Bombay .
1971

2. Alan Warner - A Short Guide to English Style,
Oxford University,
1964

3. J.Judson. W.H., - An Introduction to the study of
Literature
Kalyani Publishers,
Ludiana.
1971

4. Murray, M., - The Problem of Style,
Oxford University,
press
1956